## ஆசிரியர் குறிப்பு

இத்தொகுப்பில் வெளிவந்துள்ள கதைகளில், ஒன்று நீங்கலாக மற்றவை எல்லாம் சமீப காலத்தில் சுதேசமித்திரன், கலைமகள், கல்கி, சிவாஜி மலர், அமுத சுரபி, எழுத்து, நவ இந்தியா ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்தவை. பழிக்குப் பழி மட்டும் 25 ஆண்டுகட்கு முன்பு சுதந்திரச் சங்கு வாரப் பதிப்பில் பிரசுரிக்கப்பட்டது. இக்கதையில் குறிப்பிடப்பட்ட முறை மாறியிருந்தாலும் கதையின் அடிப்படை மாறுமலேதான் இன்றும் இருக்கிறது.

ஆழ்வார் பேட்டை,
சென்னை
9-12-1959

ந. பிச்சமூர்த்தி

---

(இந்நூலின் முதற் பதிப்பு இந்நூல் ஆசிரியரின் 61-ஆம் ஆண்டு பிறந்த நாள் வெளியீடாக 1960-ஆம் ஆண்டு வெளியாயிற்று.

இப்போது உங்கள் கையில் இருக்கும் இந்நூல் இரண்டாம் பதிப்பாகும்.)

# பொருளடக்கம்

# பெரியநாயகி உலா

**நூ**று வருஷமாகக் கால் சதங்கை ஊமையாகவே இருந்தது. சதங்கையை அணிந்த பெரியநாயகிக்கு நின்று நின்று கால்கள் கடுத்துவிட்டன. கருப்பையைப் போன்ற இருளும், கண்மூடா விளக்கொளியும் தவிர அவளுக்குத் துணை இல்லை. நூறு வருஷமாகத் தனித்து நின்ற அலுப்பு. வெளியே சென்று வந்தாலென்ன ? ஒரு சின்ன உலா !

எண்ணமே செயல்தானே ? எண்ணம் பிறந்ததும் கால்கள் நகர்ந்தன. கல், கல் என்று சதங்கைகள் ஒலித்தன. அர்த்த மண்டபத்து வாயிலண்டை உருவிய கத்தியும் கோரைப் பல்லும் மின்ன நின்றுகொண்டிருந்த ஜயையும் விஜயையும், 'கோயிலுக்குள் யாருமே போகவில்லையே ! சதங்கை ஒலி ஏது ?' என்று சிந்தித்துக் கொண்டிருந்தார்கள். 'பெரியநாயகி நின்றுகொண்டு தானே இருக்கிறாள்—நம்மைப் போல ? சதங்கை ஒலி எங்கிருந்து வந்தது ?' இந்தச் சந்தேகம் முளைத்ததும் கழுத்தைத் திருப்பி அர்த்த மண்டபத்தைப் பார்க்க முடிந்தது. எண்ணமே செயல்தானே ?

என்ன ஆச்சரியம் ! பீடத்தை விட்டு இறங்கி, பெரியநாயகி வெளியே வந்துகொண்டிருந்தாள். வாயில் காப்பாளர்களுக்குப் பெரியநாயகியின் செயல் புரியவில்லை. ஆனால் எஜமானியைக் கேட்க வேலைக்காரிகள் யார் ? கேட்க முடியவும் இல்லை. தேவதாரு மரத்துக்கு மேலே, காலைக் கதிரொளி பட்ட சிகரம்போல் பெரியநாயகியின் அழகும் அமலும் ஊமையாக்கும் வியப்பாய் எழுந்தன. வாயில் காப்பாளர்கள் வாயடைத்து நின்றார்கள்.

"அடீ ஜயை, விஜயை! இப்படியே உலாச் சென்று வருவோம்."

"நீங்கள் உண்டாக்கிய உலகில் நீங்களே உலாச் சென்று பெறவேண்டிய பிராண சக்தி இருக்கிறதா? நீங்களே இழுக்கவேண்டிய கடலமுதம் இருக்கிறதா?" என்றாள் ஜயை

"நாம் பயிர் செய்த தோட்டத்தைத்தானே பார்க்க வேண்டும்? சிருஷ்டி செய்து எத்தனை யுகமாயிற்று! எவ்வளவு மேதாவிகளாக வளர்ந்துவிட்டாலும் நான் தாங்கிய விதைதானே? உலாச் சென்று வந்தால் என்ன தவறு? வாருங்கள்."

வாயில் காப்பாளர்கள் வாளை உறையிலிட்டு, கோரைப் பற்களைச் சுருக்கிக்கொண்டு கூடவே புறப் பட்டனர்.

"ஆனால் உங்களுக்கு எல்லாம் தெரியுமா?"

"ஓ!"

"வாயில் காப்பாளருக்கு வெளியே செல்லவேண்டிய வேலை உண்டா?"

"கோயில் பள்ளியறைக்குப் பிறகு எங்களுக்கு ஓய்வு தானே?"

"கண் மறைந்தால் விடுமுறையா? காவலாளிகளை நம்பினால் இப்படித்தானா? போகட்டும்."

கலீர் கலீர் என்று சதங்கை ஒலிக்கப் பெரியநாயகி நடக்கத் தொடங்கினாள். காப்பாளர்கள் மிடுக்குடனே முன்னே சென்றனர். கல்தூண்களில் இருந்து யானை கள் வியப்பினால் காதுகளை நெறித்தன; கண்களைச் சுழற்றின. திறந்த வாய்களை உடைய யாளிகள் பயத் தினால் வாயை மூடிக்கொண்டன. சிங்கங்கள் பிடரிமயிர் களைச் சிலுப்பிக்கொண்டு, முறுக்குக் கம்பி வால்களைப் பாவட்டாக்களைப் போல் ஆட்டின. பெரியநாயகி கையை

அமர்த்திய பிறகுதான் அரவங்கள் அடங்கின. திருக்குளத்து நீரலைகள் மட்டும் படிக்கட்டின் ஓரங்களில் வந்து சதங்கை ஒலியை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தன.

கோயிலின் கிழக்குக் கோபுர வாயிலை மெல்லத் தாண்டிப் பெரியநாயகி வீதியில் வந்து ஒரு நிமிஷம் நின்றுவிட்டாள். ஒரே திகைப்பு! கர்ப்பக்கிருக இருளையே பார்த்துப் பழகிய கண்களுக்குத் தெரு வெளிச்சம் கூசிற்று.

ஒருவாறு அமைதி பெற்ற பிறகு வெகுதூரம் நடந்து செல்லவில்லை. அதற்குள் தெருத் திண்ணையில் உட்கார்ந்திருந்த பெண்களின் கூட்டம் ஒன்று பெரியநாயகியைச் சுட்டிக் காட்டிக்கொண்டு தெருவில் இறங்கிவிட்டது. பெரிய நாயகியின் நடையில் தயக்கம் கண்டது.

முதல் மாது : இது யார், புதிதாக இருக்கிறதே?

இரண்டாவது மாது : அதுதான் தெரியவில்லை அம்பாள் பெரியநாயகியை அச்சில் வார்த்து வைத்தாற் போல் இருக்கிறதே!

மூன்றாவது மாது : உன் பிதற்றல் உன் மண்டையோடுதான் போகும்போலிருக்கிறது. உலகமே உனக்குப் பெரியநாயகிதான்! சுவாமி தரிசனம் செய்ய யாரோ கோயிலுக்கு வந்துவிட்டுப் போனால், அவள் உனக்குப் பெரியநாயகி ஆகி விடுகிறாள்! வருகிற போகிற பெண்பிள்ளைகள் யார் என்று விசாரிப்பது தானா நம்முடைய வேலை? அழகாய் இருக்கிறாள். நமக்கும் நாலு நகை இருந்துவிட்டால் நம்மைப் பற்றியும் நாலுபேர் கேட்பார்கள்.

முதல் மாது : ஜோதிஷம் பார்ப்பானேன்? நானே கேட்டுவிட்டு வந்து விடுகிறேனே!

இப்படிச் சொல்லிக்கொண்டே அந்த மாது இவர்களை நோக்கி அவசரமாக வந்தாள். மெய்க்காப்பாளர்களில் ஒருவரைத் தொட்டு "யார் இது ?" என்று கேட்டாள். "அம்மாதான் கனககிரி ஊமை ராணி'! என்று வாயைப் பொத்திக் காட்டிவிட்டு ஜயை நகர்ந்தாள். பெரியநாயகியும் மற்ெரு மெய்க்காப்பாளரும் பின் தொடர்ந்தனர்.

அந்தத் தெருதான் சந்நிதி வீதி. இருபுறத்திலும் சில வீடுகளே இருந்தன. இருந்தாலும் அழகிய புது வீடுகள். பாதிக்கு மேற்பட்டு வக்கீல் வீடுகள். வீட்டு வாசல்திண்ணையில் சின்னச் சாய்வு மேஜையும் வக்கீல் குமாஸ்தாவுமாகக் காட்சி அளிக்காமல் இல்லை. ஒரு வக்கீல் வீட்டுத் திண்ணையில் கும்பலாகக் கட்சிக்காரர்கள் உட்கார்ந்திருந்தனர். குமாஸ்தா மூக்குக் கண்ணாடியைக் கட்டி இருந்த கயிற்றை ஏதோ ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தார்.

விஜயைக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ, பெரியநாயகியின் கால் சதங்கைகளைக் கழற்றி மடியில் கட்டிக்கொண்டாள்.

"அடி ஜயை, இங்கென்ன இவ்வளவு பேர் உட்கார்ந்திருக்கிறார்கள் ? என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் ?"

"இதற்குப் பெயர்தான் வக்கீல் வீடு."

'அப்படி என்றால் ?"

"நான் சொன்னால் உங்களுக்குப் புரியாது."

"ஏன் புரியாது ? புரியாவிட்டால் ஆலமரத்துப் பித்தைக் கேட்டுக் கொள்கிறேன்."

"சொத்து இருக்கிறதே—"

"அப்படி என்றால் ?"

"அது பெரிய கதை. அதைப் பற்றிப் பிறகு சொல்லுகிறேன். இப்பொழுது இதைப்பற்றி மட்டும்... சொத்துக்காக இரண்டுபேர் சண்டை போட்டுக்கொண்டால் மண்டை உடையும். மண்டைக்கு நியாயம் செய்ய ஆஸ்பத்திரி இருப்பதுபோல், சண்டைக்கு நியாயம் சொல்லக் கச்சேரி என்று ஒன்று இருக்கிறது. அங்கே போய் இரண்டு பேரும் தாம் செய்ததுதான் நியாயம் என்று வழக்கிடுவார்கள். அவரவர்கள் கட்சியை எடுத்துச் சொல்வதற்காக, வக்கீல்களை அமர்த்துவார்கள். இவர்கள் ஒருமாதிரி மந்திரவாதிகள்; ஜால வித்தைக்காரர்கள்; அதற்காகவே படித்தவர்கள். இவர்கள் எடுத்துச் சொல்வதைக் கேட்டதும் நீதிபதிக்கு எது உண்மை எது பொய் என்று தெரியாமல் போய்விடும். கண்ணை மூடிக்கொண்டு—அதாவது ஆழ்ந்து யோசித்து விட்டுத் தீர்ப்புக் கூறிவிடுவார். அந்த மாதிரி வக்கீல் வீடு இது. தினசரி இந்த மாதிரி சண்டை இட்டுக் கொள்பவர்கள் எல்லாம் வக்கீல் வீட்டுக்குப் போய்ச் சேருவார்கள். அதுதான் கும்பல்."

"பிறருக்கு உதவி செய்வதுதான் இவர்கள் வேலை. இல்லையா?"

"பலாச்சுளையில் ஈ மொய்க்காமல் தெருக்கோடியில் கிழவி வாழையிலையாலே விசிறுகிறாளே, அந்தமாதிரி உதவி. கிழவிக்கும் லாபம்; பலாச்சுளைக்கும் சுகாதாரம். அதேமாதிரி வக்கீல்களுக்கும் லாபம். அந்த லாபத்தில் முளைத்த வீடுகள் இவை."

"சொத்திலிருந்து பிறந்த வம்பு என்கிறாய்?"

"சொத்து இல்லாமற்போனால்கூட இன்னும் பெரிய வம்பு தும்புகள் உண்டு. அதில்தான் இவர்களுக்குக் கொள்ளை லாபம். அதாவது காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம் ஆகிய இவ்வளவு அசுரசக்திகளும் எழுப்பிவிடும் நித்திய யுத்தங்களில் இவர்களுக்

குப் பெரிய வேட்டை. இந்த நித்திய யுத்தங்களிலே மனிதர்கள் சாகக்கூடச் சாவார்கள். ஆனால் வக்கீலிடம் விஷயத்தை ஒப்படைத்து விட்டால் நீதிபதிக்குப் பிரமையே உண்டாகிவிடும். 'கொன்றவன் யார்? கொல்லப்பட்டது எது?' என்றெல்லாம் கேள்விகளை எழுப்பி வாதாடும்போது கொலை செய்தவனுக்குக்கூடத் தான் குற்றம் அற்றவன் என்று தோன்றிவிடும். இந்த உதவி செய்வதால், வக்கீல் வயிற்று வேள்வித் தீக்கு வேண்டிய அவ்வளவு பொருள்களும் தாமாகவே அவரை வந்தடைந்துவிடும். நிதி என்னும் யாக குண்டத்தருகில் இருக்கும் ரித்விக்குகளும், ஹோதா—"

ஐயை பேச்சை முடிப்பதற்குள் மூக்குக் கண்ணாடி குமாஸ்தா இவர்கள் அருகில் வந்து விட்டார்.

"ஜீவனாம்ச வழக்குக் கட்சிக்காரர்கள் நீங்கள் தானே? ஐயா உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்" என்றார்.

"நின்றால் பிடித்துக்கொண்டு விடுவார்கள் போலிருக்கிறதே!" என்று பெரியநாயகி சொல்லவும் எல்லோருமாக நகர்ந்து விட்டார்கள். மூக்குக் கண்ணாடி குமாஸ்தா வாயடைத்துப் போய்விட்டார்.

பெரியநாயகிக்கு ஏதோ சந்தேகம் வந்துவிட்டது.

"அடி ஐயை, சொத்து என்று இருப்பதனால்தானே பாதி வம்பு வளருகிறது போலத் தெரிகிறது? ஆதியில் இந்த ஏற்பாட்டை நாங்கள் செய்யவில்லையே! காற்று, நெருப்பு, தண்ணீர், மண், மரம், லோகங்கள்—இப்படித் தானே உண்டாக்கிக் கொடுத்தோம்? இவர்களாகச் சொத்து என்ற ஒன்றைக் கற்பனை பண்ணிக்கொண்டு விட்டு, வீணே சிக்கறுக்க நியாயத்தைக் கூப்பிடுவானேன்?"

"கூடு கட்டுகிற குருவிகூட ஒரே இடத்தை வருஷந்தோறும் நாடுகிறது. அப்படி இருக்கும்பொழுது—"

வாக்கியம் முடியவில்லை. சந்நிதித் தெரு முனை திரும்பி விட்டார்கள். அதுதான் கடைத்தெரு. தெருவுக்குள் நுழைந்ததும் மளிகைக் கடை நெடி, பாய்மரம் விரித்துக்கொண்டு வந்தது. பெரியநாயகி தும்மினாள்— ஒன்று, இரண்டு, மூன்று. ஜையையும் விஜயையும் மட்டும் தும்ம வில்லை.

தும்மலின் வேதனை தீர்ந்ததும் பெரியநாயகி சுற்று முற்றும் பார்த்தாள்.

பெரிய செட்டியார் பெரிய மளிகைக் கடை, சின்னச் செட்டியார் பலசரக்குக் கடை, நடுச் செட்டியார் மருந்துக் கடை, நாயுடு அரிசி மண்டி, ரகீம் புகையிலைக் கிடங்கு, செபாஸ்டியன் சோடா நிலையம் முதலிய எல்லா முக்கியக் கடைகளும் அங்கேதான் இருந்தன. வியப்பு மிகுந்து பெரியநாயகி கடைகளைப் பார்த்தாள். பெரிய செட்டியார் கடையில் கூடை கூடையாக, சாக்குச் சாக்காக, மளிகைச் சாமான்கள் வைக்கப்பட்டிருந்தன. கல்லாப் பெட்டிக்கு அருகில் பெரிய செட்டியார் கறுப்பாக, வைரக் கடுக்கன் மின்ன உட்கார்ந்திருந்தார்.

"என்ன அம்மா, எப்பொழுது ஊரிலே இருந்து வந்தீங்க? ரொம்ப நாளாகக் காணோமே? ஐயா சொகமா?" என்றார் செட்டியார்.

பெரியநாயகிக்கு விஷயம் விளங்கவில்லை.

"அடி ஜயை, இவர் என்னவோ சொல்லுகிறாரே!" என்று மெய்க்காப்பாளர் பக்கம் திரும்பினாள்.

"ஆள்மாறாட்டம் போலிருக்கிறதே!" என்று ஜயை பதில் சொன்னதும் செட்டியார் தலையை ஆட்டினார். "ஆள் மாறாட்டம் இல்லை அம்மா. சும்மா கேட்டேன். உங்களுக்கு வேண்டிய சாமான்களை இங்கேயே வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லத்தான் வந்தேன். எங்கே வாங்கினாலும் பணந்தானே? ரூபாய்க்கு ஒரு பைசாவுக்கு மேலே லாபம் வைக்கிறதே இல்லை. பணமா பெரிசு?

சுத்தமான சரக்கு; சல்லிசான விலை'' என்றார் செட்டியார்.

விஜயை சொல்லவந்த பதிலை யாரும் எதிர்பார்க்கவில்லை.

"எங்கள் வீட்டுக் குண்டோதரன் இதோ வருவான். வந்ததும் பார்ப்போம்'' என்றாள் விஜயை.

பெரிய வியாபாரம் நடக்கும் என்று செட்டியாருக்கு நப்பாசை!

"இப்படிப் பெஞ்சில் உட்காரலாமே!''

ஜயை பெஞ்சில் உட்கார்ந்தாள். இவர்கள் இருவருக்கும் அது பெரும் வியப்பாக இருந்தது. அடுத்த நிமிஷம் ஜயை கால் கொலுசுத் திருகாணியை இறுக முறுக்க ஆரம்பித்த பிறகுதான் இவர்களுக்கு விஷயம் ஒருவாறு விளங்கிற்று.

இதற்கிடையில், கடையில் இரண்டு மூன்று பேர் கூடி விட்டார்கள். ஆளுக்கு ஒரு சாமானின் பெயரைச் சொல்லிக் கேட்டார்கள். பெரியநாயகிக்கு நின்று பார்க்க வேண்டும் போல் இருந்தது. கடையில் நடப்பதைக் கவனித்தாள். சாமான்களைத் தராசில் எடைபோட்டு அவரவர்களுக்குக் கடைக்காரப் பையன் கொடுத்தான். கடைசியில் செட்டியாரிடம் ஒவ்வொருவரும் பணம் கொடுத்துவிட்டுச் சாமானை எடுத்துக்கொண்டு சென்றார்கள்.

வாடிக்கைக்காரர் கூட்டம் கிளம்பியதும் ஜயை பெஞ்சைவிட்டு எழுந்து புறப்பட்டு விட்டாள். எனவே பெரியநாயகியும் கடையைவிட்டு நகர்ந்தாள். தெருவில் உள்ள கடைகள் எல்லாம் அவள் கவனத்தை ஒருபுறம் ஈர்த்தன. மற்றொரு புறம் மனத்தில் ஒரு சந்தேகம். இரண்டு காரியத்தையும் பெரியநாயகி கவனிக்க முயன்றாள்.

"ஏண்டி ஜயை, இந்தச் சாமான்கள் எல்லாம் எப்படி இங்கே முளைக்கின்றன? ஜலம் இல்லாமல், செடி இல்லாமல், கொடி இல்லாமல், மரம் இல்லாமல்—என்ன ஆச்சரியம்! இந்த வித்தை எங்களுக்குக் கூடத் தெரியாதே!"

"நீங்கள்தான் இருட்டிலேயே இருக்கிறீர்களே! பிறந்த பிள்ளையை வளர்க்க வேண்டாமா? அப்படியே அநாதையாகத் தெருவில் போட்டுவிட்டால்? யாரோ எடுத்து வளர்த்தார். எப்படியோ வளர்ந்தது. இப்பொழுது எப்படி எப்படியோ இருக்கிறது! அந்த மாதிரி தான்."

"நாங்கள்தான் உலகத்தையும் ஆறறிவையும் படைத்துக் கொடுத்து விட்டோமே, வேறு என்ன செய்ய வேண்டும்?"

"ஆறறிவைப் படைக்காமல் இருந்திருக்க வேண்டும். பெற்றோரைப் பழிக்கத்தான் ஆறறிவு உதவுகிறது. வியாபாரத்தை வளர்க்கவும் உதவுகிறது. நீங்கள் கேட்டீர்களே, இந்தச் சாமான் ஒன்றும் இந்த இடத்தில் விளைவதில்லை. செடி, கொடி, மரத்தில்தான் வருண பகவான் தயவால் எங்கெங்கோ உண்டாகின்றன. இந்தச் செட்டியார் போன்றவர்கள் அந்தச் சாமான்களை எல்லாம், வலைவீசி மீன் பிடித்துச் சுருட்டிக் கொண்டு வருவதுபோல், இங்கே கொண்டு வந்து குவிக்கிறார்கள். அங்கெல்லாம் பணம் கொடுத்து வாங்கி இங்கே மறுபடி பணத்திற்கு விற்கிறார்கள்."

"இதென்ன ஆச்சரியம்! பணத்திற்கு வாங்குவானேன்? மறுபடியும் விற்பானேன்? அதிருக்கட்டும்; பணம் என்றால் என்ன? பணத்தை நாங்கள் சிருஷ்டி செய்ததாக ஞாபகம் இல்லையே!"

"வந்திருக்கிற வினை எல்லாம் அதனால்தான். நீங்கள் எதை எதை எல்லாம் செய்யவில்லையோ அதை

எல்லாம் ஆறறிவு செய்துவிட்டது. நீங்கள் எதை ரகசியமாக வைத்திருந்தீர்களோ அதை ஆறறிவு அம்பலத்தில் செய்து காட்ட முயலுகிறது. ஆருவது அறிவு சிருஷ்டி செய்ததுதான் பணம். செட்டியார் வாங்கிப் பெட்டியில் போட்டுக் கொண்டாரே, அதுதான் பணம்.''

"ரொம்பச் சுற்றலாக இருக்கிறதே! சாமான் வேண்டுமென்ருல் செடி இருக்கும் இடத்திலிருந்து எடுத்துக் கொள்ள வேண்டியதுதானே? செட்டியாரும் பணமும் குறுக்கே முளைப்பானேன்?''

''இவர்கள் ஆறறிவு சொல்லுகிறதைக் கேட்டால் உங்களுக்குக் கொஞ்சம் புரியலாம். பக்தன் உங்களை நினைக்க வேண்டுமென்ருல் நேரே நினைத்துவிட்டுப் போக வேண்டியதுதானே? அதை விட்டுவிட்டு அப்பாலில் இருப்பதை இப்பாலில், இருபாலில் வடித்துக் காட்டி, வணங்க வழிகாட்டுபவர்களை—சிவாசாரியர்களை—ஏற்பாடு செய்து, திரைபோட்டுத் திரைதள்ளும் தெய்வ நெறியைக் கூட்டி வைத்துவிடவில்லையா? அதேபோலத்தான் என்கிருர்கள். எல்லா பக்தர்களும் ஒரே காலத்தில் உங்களை நாடினுல் யாருடைய மனத்தில் என்று நீங்கள் இறங்குவீர்கள்? ஒழுங்கில்லாமல் ஒரே குழப்பமாக இராதா? அதேபோல, செடியண்டை போய் எல்லாரும் சாமான் பறிக்க ஆரம்பித்தால் சண்டைதான் மிஞ்சும். அதற்காகச் சொத்து என்ற ஏற்பாட்டையும், பணம் என்ற விபூதியையும், அதாவது அளவு கோலையும், ஆறறிவு படைத்து வைத்தது. இப்படிச் செய்திருப்பதனுல் தான் எல்லாருக்கும் பொதுவாய் நன்மை கிடைக்கிறதாம். இல்லாவிட்டால் சிலர் கைக்குள் சாமான்களும் நீங்களும் சிக்கி, பெருத்த சங்கடம் உண்டாகிவிடுமாம்.

"சொத்து, பணம் இரண்டையும் நாங்கள் உண்டாக்கவில்லை. இவற்றை உண்டாக்கத்தான் ஆறறிவு உபயோகப்பட்டது என்கிருயா?''

விஜயை பதில் சொல்வதற்குள் ஒரு பெரிய விபத்து நிகழப் பார்த்துவிட்டது. பெரியநாயகி நின்றுகொண்டிருந்த இடத்துக்கு மூன்று அங்குலம் தள்ளி, கிரீச் என்ற பெரும் சப்தத்துடன் ஒரு மோட்டார்க்கார் பிரேக் போட்டு நிறுத்தப் பட்டது. சத்தத்தைக் கேட்டதும் இவர்களுக்கெல்லாம் வெலவெலத்துப் போய்விட்டது.

தொப்பியும் நிஜாரும் பூட்சும் அணிந்த ஒரு கனவான் வண்டியை விட்டு இறங்கி வெகு கோபத்துடன் இவர்களை நோக்கி வந்தார்.

"நீ பெண்பிள்ளைதானா? நடு ரஸ்தாவிலே நிலாப் பேச்சில் முழுகி, செவிடாய், குருடாய், கல்லாய்—"

புயலைப்போல அடித்த பேச்சைக் கேட்டுப் பெரியநாயகி தலை நிமிர்ந்தாள். கனவான் பெரியநாயகியைப் பார்த்ததுதான் தாமதம், வந்த கோபமெல்லாம் பெட்டிப் பாம்பைப் போல் அடங்கிவிட்டது. தலையில் இருந்த தொப்பி தரையில் விழுந்துவிட்டது கையில் கட்டியிருந்த கடிகாரம் கொக்கி கழன்று விழுந்தது. பயத்தினால உடம்பு ஒட்டிப்போய்ச் சட்டை துணிமணி எல்லாம் தொளதொள வென்று தொய்ய ஆரம்பித்து விட்டன. பெரியநாயகியின் அழகு, மின் தாக்கியது போல, அவரைக் கருக்கிவிட்டது.

"மன்னிக்க வேண்டும். நடுத்தெருவில்—"

பெரியநாயகி அவர் மன்னிப்பைப் பொருட்படுத்தவில்லை.

"இதோ நிறுத்தி இருக்கிறாயே, இந்த மிருகத்திற்கு என்ன பெயர்? நாங்கள் சிருஷ்டித்ததாக ஞாபகமில்லையே!"

இப்படிப் பெரியநாயகி கனவானைக் கேட்டதும் அவருக்குத் தூக்கி வாரிப்போட்டது. பைத்தியத்துக்குத்தானா இவ்வளவு அழகு!

"ஏம்மா, பைத்தியத்தைத் தெருவில் அழைத்துக் கொண்டு வந்தால் உஷாராக இருக்கவேண்டாமா? என்னைப் பைத்தியக்காரன் ஆக்கப் பார்த்து விட்டீர்களே!" என்று மெய்க்காப்பாளர்களைக் கேட்டுவிட்டு வண்டியை ஓட்டிக் கொண்டு போய்விட்டார்.

"கடைத்தெரு உலாப் போதுமென்று நினைக்கிறேன்" என்றாள் பெரியநாயகி.

ஐயையும் விஜயையும் பெரியநாயகியை அழைத்துக் கொண்டு பக்கத்துத் தெருவில் புகுந்தார்கள். ஒற்றைச் சாரி வீதி; கூரையும், கொட்டகையும், மாட்டுப் பட்டியும், வைக்கோல் போருமாக இருந்தன. "இது ஏழைகள் தெரு" என்றாள் ஐயை.

"அதிருக்கட்டும். அந்தப் பிராணிக்குப் பெயர் என்ன? வெகு விநோதமாக இருக்கிறதே! அந்த மாதிரிப் பிராணியை நாங்கள் ஒன்றும் செய்ததாக இல்லையே!"

"அந்த மாதிரி இன்னும் எவ்வளவோ விநோதமான பிராணிகள் இருக்கின்றன. இவற்றிற்கெல்லாம் பெயர் விஞ்ஞானம். நல்ல வேளையாகப் போயிற்று; இல்லாவிட்டால், நீங்கள் பீடத்திற்குத் திரும்பிப் போக முடியாமல் போயிருக்கும். ஆறறிவு புது எமன்களைச் சிருஷ்டித்து வருகிறது. அந்தப் பட்டாளத்தில் இது ஒரு சின்ன எமன்!"

"மறுபடியும் அதே ஆறறிவுப் பெருமைதானா?"

பெரியநாயகியின் அலுப்புச் சொல்லத்தரம் அன்று.

"உலாப் புறப்பட்டீர்கள். அதற்குள்ளாகவே கசந்து விட்டதே! இன்னும் பார்க்க எவ்வளவோ இருக்கின்றனவே?"

"போதும் என்று தோன்றுகிறது. என்மீது போடுகிற மாலை மாதிரி உலகம் இருக்கிறது—தழையும் நாரும்

தான். ஆனால் ஒன்று : கொடுத்த பொருளைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும் சக்தி எங்களுக்கு இல்லை. ஆறறிவுக்கு அறிவு இருந்தால் ஆக்கட்டும் அல்லது அழிக்கட்டும். அத்துடன் தானும் அழியட்டும். பிறகு நாங்கள் புதிதாக மறுபடியும் ஆரம்பித்துவிடுகிறோம். இதுதானே சிருஷ்டி என்னும் லீலை? போதும், கோயிலுக்குப் போவோம்'' என்றாள் பெரியநாயகி.

"இந்தத் தோட்டத்து வழியாகப் போனால் சீக்கிரம் போய்விடலாம்."

தோட்டத்தில் நுழைந்ததும் பெரியநாயகிக்கு ஒரு நினைப்பு எழுந்தது.

"அடி ஜயை, என் சதங்கையை இனிமேல் காலில் கட்டிவிடு. மறந்து போய்விடும்'' என்றாள்.

ஜயை சதங்கையைக் காலில் பூட்டினாள். கலீர் கலீர் என்ற ஒலியலை தோட்டத்தில் பரவிற்று. அந்த இனிய ஒலியைக் கேட்டுத் தோட்டத்து மலர்கள் நாலு பக்கமும் திரும்பின மலரை நோக்கிச் சென்ற வண்டுகள் திசை தடுமாறின. மலர்களின் மணம் நடைபாவாடை விரித்துச் சென்றது. பாதை வழியே கொஞ்சதூரம் சென்றார்கள். நடுக் குளத்தங்கரை ஓரம் இருவர் உட்கார்ந்திருந்ததை இவர்கள் கவனிக்கவில்லை. அவர்களும் முதலில் இவர்களைக் கவனிக்கவில்லை. அருகில் சதங்கை ஒலி கேட்டதும் திடுக்கிட்டு எழுந்தார்கள். இவர்களை ஒரு நொடி பார்த்தார்கள். அதற்குப் பிறகு பார்த்ததெல்லாம் பெரியநாயகியைத்தான். பெரியநாயகி திகைப்படைந்து நின்றுவிட்டாள்.

''கண்காணுச் சண்பகமே
மண்காணு மரகதமே!''

என்று முணுமுணுத்துக்கொண்டே இருவரில் ஒருவர் நாயகி அருகில் வந்து வணங்கினார்.

"இந்த வழியே அதிசயமாகப் போகிறீர்களே, எந்த ஊர்?" என்ருர். பெரியநாயகி பதில் பேசவில்லை.

'மெய்யூர்" என்ருள் விஜயை.

"அம்மா பேர்?"

"மாயாதேவி."

இந்தப் பதில்களைக் கேட்டதும் அவர் பூரித்துப் போய் விட்டார்.

"'நித்திய சுந்தரி' என்ற படம் எடுக்கிருேம். படத்தில் அம்பாள் ஐந்து நிமிஷத்திற்குக் கொலு இருக்க வேண்டும். சிலை வைத்துப் படம் எடுக்காமல் முடிக்க வேண்டும் என்று மூன்று மாதமாகப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிருேம் — பிரார்த்தனை பலித்துவிட்டது. ஐந்து நிமிஷத்திற்கு மேல் மாயா தேவிக்குப் படத்தில் வேலை இல்லை."

மெய்க்காப்பாளர்களுக்கு இந்த நிலைமையைப் போரிட்டுச் சமாளிக்க முடியாது என்ற எண்ணம் தோன்றிவிட்டது. அதனுல்தான் விஜயை வேறு வழியைக் கைப்பிடித்தாள்.

"மாயா தேவி ஊமை ஆயிற்றே?"

"அப்படியா? அம்பாளே எங்கள் பிரார்த்தனைக்கு இரங்கி வந்துவிட்டாள் போலிருக்கிறது! எங்களுக்கு வேண்டியதும் வாயைத் திறக்காத அம்பாள்தான். கனககிரி பீடத்தில் அம்மாள் ஐந்து நிமிஷம் நின்ருல் போதும். பணத்தைப்பற்றி யோசிக்க வேண்டாம்" என்ருர்.

"கோயில் திருப்பணிக்குப் பணம் கொடுப்பீர்களா!"

"எப்படிச் செய்யச் சொன்னுலும் செய்கிருேம்."

இப்படிப் பேசிவிட்டு முடிவில் என்ன செய்வதென்று விஜயை மனத்திற்குள் ஒரு திட்டமிட்டிருந்தாள். தோட்டத்தைத் தாண்டியதும் விருட்டென்று

கோயில் சந்துக்குள் நுழைந்து போய்விடுவதென்று யோசனை செய்து வைத்திருந்தாள்.

போகலாமே என்று ஜயை கூறியதும் பெரிய நாயகியின் சதங்கைகள் விழிப்படைந்தன. தோட்டத்தைவிட்டுச் செல்லும் ரோஜாவைத் தேனீ தொடர்வதுபோலச் சினிமாக்காரர்கள் பின்னே சென்றனர். தோட்டத்து வாயிற்புறம் வந்தவுடன் சினிமாக்காரர்கள் முன்னே ஓடிப்போய் நின்றுவிட்டார்கள்.

கோயில் சந்துக்கெதிரில் ஒரு மோட்டார் கார் நின்றுகொண்டிருந்தது. இதைத் தாண்டிக் கோயிலுக்குள் எப்படிப் போகிறது என்று ஜயையும் விஜயையும் யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே, "ஏறுங்கள் வண்டியில்" என்றார் அவர்களில் ஒருவர். மற்றொருவர் சந்தில் நுழைய முடியாதபடி அடைத்துக்கொண்டிருந்தார்.

விஜயை போட்ட ரகசியத் திட்டம் பகற்கனவாகி விட்டது. இனி என்ன செய்வது என்ற யோசனை.

"ஏறுங்கள் வண்டியில்" என்று அவர் வற்புறுத்தினார்.

"எதற்காக ?" என்று தடுமாறினாள் விஜயை.

"இத்தனை நேரமாகச் சொல்லி வந்தோமே! நீங்கள் கூடச் சரி என்றீர்களே ?"

"சொன்னேன். வாஸ்தவம். நாங்கள் வந்து நேரமாயிற்று. தவிர, வீட்டில் தெரிவிக்க வேண்டாமா ? வந்த இடத்தில்—"

"ஏழே நிமிஷம்! வந்துபோனதே யாருக்கும் தெரிய வேண்டாம். அம்பாள் ஸ்தானத்தில் அமரும் பெருமையைவிட மாந்தருக்கு என்ன பெருமை கிடைத்துவிடும்? அம்மாளால் எங்கள் படத்துக்கும் பெருமை; உங்கள் திருப்பணிக் கோரிக்கையும் நிறைவேறிவிடும். ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம். ஏறுங்கள்."

இவர்கள் தயங்கி நின்றதைப் பார்த்து, புறுவைக் கூட்டில் அடைக்கக் கையை விரிப்பார்களே, அந்த மாதிரி இவர் செய்துவிடுவாரோ என்ற அச்சம் விஜயைக்கு உண்டாகிவிட்டது. விஜயை திடீரென்று தானாக வண்டியில் ஏறினாள். ஜயையும் பெரியநாயகி யும் மட்டும் வேறு என்ன செய்துவிட முடியும்? அவர் களும் காரில் ஏறினார்கள்.

கண்மூடித் திறப்பதற்குள் கார் ஸ்டுடியோ வாச லண்டை போய் நின்றது. எவ்விதப் பேச்சும் இல்லாமல் இவர்களை நெடுந்தூரம் உள்ளே அழைத்துக் கொண்டு போனார்கள். 'இதென்ன, தெய்வலோகம் போலிருக் கிறதே!' என்று பெரியநாயகி மனத்திற்குள் நினைத்துக் கொண்டே இருந்தாள்.

"நீங்கள் இருவரும் இப்படி உட்கார்ந்திருங்கள். அதோ மேடை தெரிகிறதே, அதுதான் கனககிரி பீடம். மாயாதேவி பீடத்தில் அப்படியே நின்றால் போதும். அம்மா இப்படி—"

பெரியநாயகி சிந்தனையிலிருந்து விடுபட்டு எதிரே பார்த்தாள்.

"என்ன பயப்படுகிறீர்களே! குறுஞ்சிரிப்புச் சிரித் துக்கொண்டு ஐந்து நிமிஷம் நின்றால் போதும். வாயைத் திறக்கவே வேண்டாம்" என்றார் அழைத்துக் கொண்டு வந்தவர்.

பெரியநாயகி தெய்வலோகத்தில் நடப்பது போல் சென்று மேடைமீது ஏறினாள். ஆனால் முகத்தின் கடுகடுப்பு மட்டும் மாறவில்லை.

அடுத்த நிமிஷம் வந்தவரில் மற்றொருவர் ஒரு குருக் களை அழைத்து வந்து ஒரு பெரிய நிலைமாலையைக் கழுத்தில் சாத்தினார். வலக்கையில் ஒரு தங்கக் கிளியைக் கொடுத்தார். இடக்கையை இடுப்பண்டை வரத ஹஸ்தமாக வைத்துக்கொள்ளச் சொன்னார்.

இந்த அலங்காரம் முடிந்ததும் பெரியநாயகிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. 'உருவம் மாறினாலும் தத்துவம் மாறாது போலிருக்கிறது; அந்தஸ்து அழியாது போலி ருக்கிறது' என்று எண்ணிக்கொண் டிருந்தாள்.

"பேஷ்! பேஷ்! அதே புன்சிரிப்புடன் ஆடாமல் அசையாமல் நில்லுங்கள்" என்று கூறிவிட்டு அந்த ஆண்கள் இரண்டுதரம் குறுக்கும் நெடுக்குமாக ஓடி இரண்டு மூக்குக் கண்ணாடிக்காரர்களை அழைத்து வந்தனர். வந்தவர்கள் பெரியநாயகிக்கு எதிரில் இருந்த காமிராவுக்குப் பின் கோணம் பார்த்து அமர்ந்துகொண் டார்கள்.

அடுத்த விநாடி ஜகத்ஜோதியாக மின்சார ஒளி பெரியநாயகி மீது விழுந்தது. கண்ணை விழித்திருக்க முடியாமல் அவள் கண்களை மூடிக்கொண்டாள்.

"கண்ணை மூடக் கூடாது" என்றது ஒரு குரல்.

இவ்வளவு வெளிச்சத்தில் கண்ணைத் திறந்து கொண்டிருப்பதா? பெரியநாயகியையும் அறியாமலே கோபம் பொங்கிவிட்டது.

"அம்பாள் இருக்கிற இடம் இருட்டாகத்தானே இருக்கிறது? அதைப்போய்ப் பட்டப் பகலை விட மோச மாக்கினால்? கருப்பையில் இருந்தால் குழந்தை வளரும். ரஸ்தா ஓரத்தில் பதைபதைக்கிற வெயிலில் வைத் தால்?" என்றாள்.

"உங்களுக்கு என்ன தெரியும்? இருட்டைக்கூட வெளிச்சத்தால்தான் நிலைநாட்ட முடியும் கொஞ்சம் சும்மா இருங்கள். கோடி புண்ணியம்" என்று கெஞ்சி யது பழைய குரல்.

பெரியநாயகியின் சிரிப்பு அலையாடிற்று. வெகு பிரயாசையுடன் கண்ணைத் திறந்து கொண்டாள். அதற்குப் பிறகு என்ன நடந்ததென்று பெரியநாயகிக்

குத் தெரியவில்லை. 'உஷார்!' 'ஓ. கே.' என்ற இரண்டு வார்த்தைகள் தாம் ஜயை விஜயை காதில் விழுந்தன.

"அவ்வளவுதான். ரொம்ப நன்றி."

"இந்த மாதிரி அதிருஷ்டம் படஉலகில் யாருக்கும் அடிக்கவில்லை" என்று கூறிக்கொண்டே பெரியநாயகியிடம் ஒரு பொட்டலத்தை நீட்டினார் சினிமாக்காரர். பெரியநாயகி பொட்டலத்தை வாங்கி, விஜயையிடம் கொடுத்துவிட்டுக் கோயிலுக்குப் புறப்பட்டு விட்டாள். எங்கிருந்தாலுந்தான் கோயில் கோபுரம் தெரிகிறதே!

கோபுர வாசல் வந்துவிட்டது. ஜயையும் விஜயையும் உறையில் இட்ட கத்தியை வெளியே இழுத்தார்கள். சுருக்கிய கோரைப் பற்களை நீட்டிக் கொண்டார்கள்.

"பொட்டலத்தைப் பிரித்துப் பார்க்கவில்லையே!" என்றாள் ஜயை.

"காட்டு" என்றாள் பெரியநாயகி.

பொட்டலத்தைப் பிரித்தால் நோட்டுகளாக இருந்தன!

"எதற்கு இந்தக் கடுதாசுகள்?"

"இதற்குப் பெயர்தான் நோட். இதுதான் வியாபாரியின் கடையிலே கண்ட பணம். வக்கீல் வீடாகி இருக்கிற பணம். உங்கள் திருப்பணி சம்பாத்தியம். இன்னும்—"

"இது இல்லாவிட்டால்?"

"உலகம் நடக்காது. இதை உங்களுக்குச் சிருஷ்டிக்கத் தெரியாததனால்தான் ஆறறிவு உங்கள் ஸ்தானத்தைப் பிடித்துக் கொண்டுவிட்டது."

''அப்படியா செய்தி! அடுத்த சிருஷ்டியில் தப்பைத் திருத்திக்கொண்டு விடுகிறோம்'' என்று சிரித்துவிட்டுக் கோயிலுக்குள் நுழைந்தாள் பெரியநாயகி.

கால் சதங்கைகள் கலீரென ஒலித்தன. பத்தி உலா மண்டபத்துச் சிங்கங்களும் யாளிகளும் காதை நெறித்தன. பெரியநாயகி பழைய பீடத்தில் அமர்ந்தாள். சதங்கைகள் ஊமையாயின. கருப்பை இருளும் நெய்ச தரும் குளிர் சுடரும் இனிமையாய்ச் சூழ்ந்தன.

# வேப்ப மரம்

நான் என்னவோ வேப்பமரந்தான். முன்பெல்லாம் காற்று அடிக்கும்; என் கிளைகள் பேயாடும். மழை பெய்யும்; வாசனை ஒன்றை விசிறுவேன். சித்திரை பிறக்கும்; என் மலர்கள் தேனீக்களை அழிக்கும். நான் வெறும் வேப்ப மரமாகத்தான் இருந்தேன்.

ஆனால் இப்பொழுது யோகம் அடிக்கிறது; நான் தெய்வமாகிவிட்டேன். எனக்கு வந்திருக்கும் பெருமையை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. நாள் தவறாமல் யாராவது இங்கு வருகிறார்கள். மரக்கடை வியாபாரி ஒருவன் மட்டும் என்னை முறையாக அறுத்துப் பலகையாக்கினால் 20 பலகையாகும்; வியாபாரத்துக்கு அறுத்தால் 25 ஆகும் என்று சொல்லிக்கொண்டிருந்தான் இப்பொழுது வருபவர்கள் எல்லாம் என் உடம்பைச் சுற்றி மஞ்சள் பூசிக் குங்குமம் இடுகிறார்கள். சாம்பிராணிப் புகை போடுகிறார்கள். அகலில் நெய்விளக்கு வைக்கிறார்கள். வெற்றிலை, பாக்கு, தேங்காய், பழம் வைத்துக் கும்பிடுகிறார்கள். வெள்ளிக்கிழமைதான் கூட்டம் தாங்கவில்லை. ஏராளமாக மாவிளக்குப் படைக்கிறார்கள்.

இந்த யோகம் ஒரு மாதமாக அடிக்கிறது. ஆனால் இந்தப் பங்களாக்காரருக்கு என்னால் தொந்தரவு இல்லை என்று சொல்லிவிட முடியாது. எப்போதுமே ஒருவிதம் இல்லாவிட்டால் ஒருவிதம் என்னால் தொந்தரவுதான். வேப்பம் பழத்தைத் தின்று காக்கை எச்சமிட்டதோ, சின்னச் செடியாய் முளைத்து நான் ஆளானதோ இப்பொழுது இருக்கிறவருக்குத் தெரியாது. அப்பொழுதெல்லாம் அவர் சின்னப் பையன். தகப்பனார்

இருந்தார். பல் குச்சிக்கு வேப்பங் கிளையைத் தெருவில் போகிறவர்கள் ஒடிக்க ஆரம்பித்ததிலிருந்து வம்பு ஆரம்பித்து விட்டது.

வேப்பமரம் ஒன்று இருக்கிற விஷயம் நகரசபை யார் வெளியிட்ட ஏல நோட்டீசைப் பார்த்த பிறகுதான் இவர் கவனத்துக்கு வந்தது. அதற்குப் பிறகு என் விஷயத்தில் இவருக்குத் திடீரென்று அக்கறை பிறந்தது. வக்கீல் வீட்டுக்குப்போய் நகரசபைக்கு ஆட்சேபணை நோட்டீஸ் ஒன்று கொடுத்தார். அதற்குப் பிறகு நகரசபை ஆணையாளரைப் பார்த்துப் பேசினார் முடிவாக, பிளான் சங்கிலி எல்லாம் எடுத்துக்கொண்டு அதிகாரி ஒருவர் வேலியோரம் வந்து அளந்து பார்த்தார். அவர் என்ன சொன்னாரோ என்னவோ, ஏலப் பேச்சு அதற்கு அப்புறம் அடங்கிப்போய் விட்டது.

ஆறு மாதத்துக்கு முன்பு மற்றொரு சங்கடம் முளைத்தது. எனக்கு அது சங்கடமாகத் தெரியவில்லை. ஆனால் மற்றவர்கள் அப்படி நினைத்தால்தானே? முளைப்பதும், இலை விடுவதும், கிளையாவதும், மலர்வதும் நாமாகச் செய்கிற காரியமா? அவை எல்லாம் தாமாக நடக்கின்றன. விரும்பினால்கூட, நம்மால் தடைப்படுத்த முடியாது. ரோட்டுப் புறமாகப் போகாதே என்று ஒரு கிளைக்குச் சொல்லிக் கொண்டே இருந்தேன். அது கேட்கவே இல்லை. அந்தக் கிளை பழுக்க ஆரம்பித்ததும் கவலையாகத்தான் இருந்தது. ஆனால் கவலைப்பட்டு என்ன பயன்? நாளடைவில் கிளைபட்டுப் போய் விட்டது.

ஒருநாள் யாரோ பிச்சைக்காரன் மரத்தடியில் தகரக் குவளையையும் கழியையும் வைத்துக்கொண்டு படுத்துக் கொண்டிருந்தான். நல்ல வெயில் வேளை! பலமான காற்று ஒன்று அடித்தது. மளமளவென்ற ஓசையுடன் பட்டுப்போன கிளை திடீரென்று முறிந்து விழுந்தது.

கிளை விழுந்த ஒரு நிமிஷத்துக்குள் அங்கே பெரிய கும்பலும் கூக்குரலும் ஆகிவிட்டன. அந்தக் கலவரத்தில் முதலில் ஒன்றுமே தெரியவில்லை. பிறகு தலையில் காயமபட்ட ஓர் இளைஞனைத் தூக்கி ரிக்ஷாவில் ஏற்றிக் கொண்டு சிலர் சென்றபொழுதுதான் விஷயம் புரிந்தது. கீழே சென்றுகொண்டிருந்த இளைஞன் தலையில் கிளை விழுந்து, ஆபத்தை உண்டாக்கிவிட்டது! ஆனால் நான் பிறந்து வளர்ந்ததற்கோ, தெருப்புறம் கிளை நீண்டு சென்றதற்கோ நானா பொறுப்பு? இந்தச் சின்ன விஷயம் அந்தக் கும்பலுக்குத் தெரியவில்லை. அடுத்தாற் போலப் பக்கத்தில் படுத்துக்கொண்டிருந்த பிச்சைக்கார னுக்கு ஒன்றும் நேரவில்லையே என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா?

ஒரே கும்பலாக விழுந்தடித்துக்கொண்டு பங்களா வுக்குள் நுழைந்தார்கள். பங்களாக்கார அம்மா பயந்து போய் முன் ஹாலுக்கு வந்தாள். ஆளுக்கு ஒருவராக, நெருப்புக் கக்க, தாறுமாறுகப் பேசினார்கள். "மரத்தை வெட்டிவிட்டு மறுகாரியம் பார்க்கிறீர்களா? இல்லை, நாங்கள் வெட்டி விடட்டுமா?" என்று அதட்டிக் கேட்ட போது அந்த அம்மாளுக்கு ஒன்றும் சொல்லத் தெரிய வில்லை. "ஐயா வந்தவுடன் சொல்லிச் செய்யச் சொல்லு கிறேன்" என்றாள். அதற்கு ஏற்றாற்போல, பங்களாக் காரர் நுழைந்ததும், கும்பல் அவர்மீது பாய்ந்தது. விஷயத்தை அறிந்துகொண்ட பங்களாக்காரர் இரண்டு நாளுக்குள் வெட்டிவிடுவதாக உறுதி கூறியபின் கூட்டம் கலைந்தது. ஒருவன் மட்டும், "இப்பொழு தெல்லாம் வெட்ட வேண்டாம். ஓர் ஆளைக் கொன்ற பிறகு வெட்டலாம்" என்று அவருடைய உறுதிமொழி யைக் கிண்டல் செய்துகொண்டே போனான்.

வீட்டுக்காரருக்கு ஒரே கோபம். மனத்துக்குள்ளாக என்மேல் பாய்ந்தார்; கும்பல்மேல் பாய்ந்தார்; இளைஞன்

மேல் பாய்ந்தார். இரண்டு நாள் வரையில் இந்தப் பாய்ச்சல் ஓய வில்லை.

மூன்ருவது நாள் நகரசபையிலிருந்து மரத்தை வெட்டிவிடும்படி ஓர் அவசர உத்தரவு வந்தது. உத்த ரவு வந்த பிறகு இந்தப் பாய்ச்சல் எங்கோ மறைந்து விட்டது. ஏலம் போடுச்சிற முயற்சி தோற்றுவிட்டதால் நகரசபையார் இந்த வேலையில் இறங்கிவிட்டதாக அவர் நினைத்துக்கொண்டார். பழையபடி வக்கீல் வீட்டுக்குப் போய், பதில் நோட்டீஸ் கொடுக்க ஏற்பாடு செய்தார். ஆனுல் வக்கீல் மட்டும் இதெல்லாம் பயன்படாதென்று சொல்லியும் இவருக்கு வீம்பு வந்துவிட்டது. என்ன ஆனுலும் வெட்டப் போவதில்லை என்று முடிவு செய்து விட்டார்!

நாளைக்கு நடப்பது இன்று யாருக்குத் தெரிகிறது?

அடுத்த நாள் மாலை ஐந்து மணிக்கு பங்களாக்காரர் பங்களா முகப்பில் உட்கார்ந்திருந்தார். திடீரென்று ஒரு பெரிய கும்பல் பங்களாவுக்குள் ஆரவாரத்துடன் நுழைந்தது. உடனே அவருக்கு விஷயம் விளங்காமல் இல்லை. இருந்தாலும் ஊமையனைப்போல் கண்ணை உருட்டினுர்.

"அந்தப் பையன் சாகவில்லை. யாராவது செத்தா லொழிய மரத்தை வெட்ட மாட்டீர்களாக்கும்!" என்று பலவாருகக் கும்பல் இரைந்தது. "கோடாலிக்காரன் வரவில்லை. என்மேல் வஞ்சனை இல்லை" என்று ராஜ தந்திரத்தைக் கடைப்பிடித்தார்.

அவர் பேச்சு எடுபடவில்லை. கும்பலின் அட்டகாச மும் கொதிப்பும் ஏறிக்கொண்டிருந்தன. எந்த நிமிஷம் என்ன ஆகுமோ என்று அவருக்குத் திகிலாக இருந்தது. அந்தச் சமயத்தில் அத்தனை பேர் கவனத்தையும் இழுக் கக்கூடிய பெரிய சத்தம் தெருப்புறத்தில் கேட்டது.

கும்பல் முழுவதும் பறந்துவிட்டது. பங்களாக்காரரும் பின்தொடர்ந்தார்.

ஒரு பஸ் நடைபாதை மீதேறி என்மீது முட்டிக் கொண்டு நின்றது. வண்டியை விட்டுப் பிரயாணிகள் கலவரத்துடன் இறங்கிக்கொண்டிருந்தார்கள். அதற்குள் இங்கிருந்து போன கும்பல், வீதிக் கும்பல் ஆக எல்லாமாகச் சேர்ந்துகொண்டு விட்டன. பத்து நிமிஷம் ஒரே குழப்பம். "இந்த மரம் மாத்திரம் இல்லாவிட்டால் என்ன கதியாகி யிருக்குமோ !" என்று ஜனங்கள் என்னைப் போற்றத் துவங்கிவிட்டார்கள். அதற்குப் பிறகுதான் விஷயம் விளங்கிற்று.

தெருவில் வந்துகொண்டிருந்த பஸ்ஸின் டயர் வெடித்துவிட்டது. பிரேக் பிடிக்கவில்லை. டிரைவர் ஏதோ கணக்குப் பண்ணி ஸ்டீயரிங்கை என்னை நோக்கித் திருப்பிவிட்டிருந்தான். என்மீது வண்டி மோதி நின்றுவிட்டது. நல்ல வேளை! பஸ் பிரயாணிகள் 24 பேரில் ஒருவருக்கும் சொற்பக் காயங்கூட ஏற்படவில்லை.

"மரத்தை வெட்டாததும் நல்லதாகத்தான் போச்சு. இல்லாவிட்டால் இத்தனை பேரும் எமப்பட்டணந் தானே?" என்று கும்பலில் பழைய சமாசாரத்தையும் இதையும் கலந்து பேசிக்கொண்டிருந்தார்கள். நான் என்ன, மரம் தானே? பார்த்துக் கொண்டிருந்தேன்!

இது நடந்த பிறகு மரத்தை வெட்டவேண்டுமென்ற பேச்சை யாருமே எடுக்கவில்லை. ஆனால் பங்களாக்காரருக்கு மட்டும் என்னைப் பற்றிய நினைப்புத் தடித்து விட்டது. ஒரு சமயம் என்னை வெட்டி விடவேண்டுமென்று நினைப்பார்; மற்றொரு சமயம் கூடாதென்று நினைப்பார். நான் பார்த்துக்கொண்டே இருந்தேன்.

ஆனால், இவ்வளவு குழப்பத்துக்கும் முடிவு ஏற்பட்டதே, அதுதான் அதிசயமாக இருக்கிறது. பஸ் வந்து

மோதிய மூன்றும் நாள் மற்றொரு கிளையின் அடிப்புறத்திலிருந்து பால்விடாமல் வடிய ஆரம்பித்தது. இதை யார் கவனித்தார்களோ, எப்படித்தான் இந்த விஷயம் ஜனங்களிடையே பரவிற்றோ தெரியவில்லை—அன்று முதல் தெய்வமாகி விட்டேன்! தேங்காய் உடைத்துக் கர்ப்பூரம் ஏற்றும் பெருமை எனக்கு உண்டாகி விட்டது. வெகு பக்தியுடன், வடிகிற பாலைப் பிடித்துக்கொண்டு போகிறார்கள். பல் நோய்கள் குணமாவதாகச் சொல்லிக் கொள்கிறார்கள், பங்களாக்காரர் இதுவும் ஓர் ஆச்சரியமா என்று பார்த்துக் கொண்டிருக்கிறார். நானும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

ஆனால் ஒரு விஷயம்: இன்று உச்சிப் பொழுதுக்குப் பிறகு ஒரு விஞ்ஞானி இங்கு வந்தார். அவருடன் ஒரு மாணவனும் வந்திருந்தான். மரத்தில் பால் வடிவதை ஊன்றிப் பார்த்தார்கள்.

"உடம்பில் உள்ள ரத்தக் குழாயில் ரத்தம் பாய்ந்து செல்வதைப் போல மரத்திலும் செடியிலும் ஜீவரசம் ஏறுவது இயற்கை. சிரங்கு வந்தால் சரீரம் பொத்துக் கொண்டு, ரத்தம் முதலியன வடிகின்றனவே, அதைப் போலவே மரத்தில் பொத்துக்கொண்டு ஜீவரசம் வெளியே வந்துகொண்டிருக்கிறது. அவ்வளவுதான் விஷயம்" என்று விஞ்ஞானி மாணவருக்கு விளக்கிக் கொண்டிருந்தார்.

விஞ்ஞானி சொன்னது சரியா? ஜனங்கள் சொல்வது சரியா? எனக்குத் தெரியாது. நான் வெறும் வேப்ப மரந்தானே?

# காவல்

சேவு செட்டியார் திடீரென்று இறந்துபோயிருக்கக் கூடாது.' ஆனால், ஓரணாக் காசு கொடுத்து வாங்குகிற பலூனே பட்டென்று உடையும் பொழுது, காசு கொடுத்து வாங்காத பலூன் உடையக் கூடாதென்று யாரால் கட்டளையிட முடியும்? சேவு செட்டி இருந்த பொழுது செங்கமலத்தின் மகிழ்ச்சி ஒன்றும் பொங்கி வழிந்துகொண்டு இருக்கவில்லை கண்ணில் விழுந்த தூசியைப் போல் சதா வாழ்வு உறுத்திக் கொண்டே இருந்தது. செங்கமலம் கொஞ்சம் அசடு. அவன் லேசான போக்கிரி. ஊர் வம்பை ஏதாவது கிளறிவிடாமல் நாளை விடமாட்டான். அவனைக் கண்டால், ஊரில் பயம் தான். அவன் போனதிலே செங்கமலத்திற்கு வேதனை குறைந்ததென்றாலும். வாழ்வு பெரிய மலை போல் எழுந்தது. கண்ணில் விழுந்த மணலை எடுத்து விடலாம் மலையை எப்படித் தாண்டுவது? புருஷன் கடன் வைத்துவிட்டுப் போகவில்லை. ஆனால், ஒன்பது வயதுள்ள நரியனை வைத்துவிட்டுப் போய்விட்டான். பிழைப்புக்கு ஒன்றும் வைக்கவில்லை. ஒரு ஓடு போட்ட சின்ன வீட்டை வைத்திருந்தான். பெரிய வீடாக இருந்தாலாவது சோறு போடும். அதுவுமில்லை பின்? அதனால்தான் மலையை எப்படித் தாண்டுவதென்று செங்கமலம் புரண்டு புரண்டு அழுதுகொண்டிருந்தாள்.

செத்த பதினேழாவது நாள் நரியன் அழுகையை வலுக்கட்டாயமாக ஓய வைத்து விட்டான். திடுதிப்பென்று மற்றொரு செக்கானை வீட்டுக்கழைத்துக் கொண்டுவந்து, செக்கை விற்று விடலாமா என்று தாயாரை நரியன் கேட்டான். தகப்பனைப்போல் வெகு தீர்

மானமாகக் காரியம் செய்திருந்ததைப் பார்க்கச் செங்க மலத்திற்கு வியப்பாக இருந்தது. அதோடு ஒரு ஆறு தல்! எந்த யோசனையும் தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்த செங்கமலத்திற்கு நாலு பணம் கிடைக்கச் சிறு பையன் தெளிவுடன் வழி செய்து விட்டானே என்ற மகிழ்ச்சி! சிறு பையனும் பெண்பிள்ளையும் செக்கு வைத்துக் கொண்டு தொழில் நடத்தி வெற்றி கண்டு விட முடியுமா? மூன்று நாளைக்குள் செக்கையும் மாட்டையும் செங்கமலம் விற்றுவிட்டாள்.

கைக்குப் பணம் வந்த பிறகு, அவளுக்கு ஒரு புதுக் குழப்பம் வந்துவிட்டது. இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு வாழ்நாளை முழுதும் ஓட்டிவிட முடியுமா? பணம் தீர்ந்து போய்விட்டால்? அரளி வேரும் நல்லெண்ணெயுமா? இல்லை என்றால் நரியனையா யோசனை கேட்பது? இருப்பதை இல்லாமல் செய்வதற்கு வழி சொல்லிவிட்டான்; அவளும் ஏமாந்துவிட்டாள்! இல்லாமல் இருப்பதைக் கொண்டு வருவதற்கு வழி சொல்ல அவனுக்கு என்ன தெரியும்? கையில் பணம் இருந்த வரையில் யோசித்துக்கொண்டே இருந்தாள்.

சேவு செட்டி செத்த ஏழாவது மாதம் நரியன் ஒரு வேலையைத் தேடிக்கொண்டு வந்தான் தனக்கல்ல, தன் தாயாருக்கு. உணவும் கொடுத்து ஒன்பது ரூபாய்ப் பணமும் கொடுப்பதாக ஒரு கிளப்புக்காரர் சொல்லுகிறார் என்று தாயாரிடம் சொன்னான். வேண்டும் வேண்டாம் என்று சொல்லக்கூடிய நிலையில் செங்கமலம் இல்லாததால், சரி என்று சொல்லிவிட்டாள். அப்பனைப்போல் மகனும் இருப்பான் போலிருக்கிறதே என்று நினைத்துக் கொண்டாள்.

மறுநாள் முதல் கிளப்பு வேலைக்குப் போகத் தலைப்பட்டாள். காலையில் ஐந்தரை மணிக்கு எழுந்திருந்தாள்.

நரியின் தூங்கிக்கொண்டிருக்கிறனே, எப்படி எழுப்பு வது என்று மயங்கிக்கொண்டிருக்கும் பொழுது, அவ னும் எழுந்து உட்கார்ந்தான். 'போகலாமா வேலைக்கு ?' என்று நரியன் கேட்டதும், அவளுக்கே வியப்புத் தாங்க வில்லை. நரியன் பிழைத்து விடுவான் என்ற எண்ணம் அவளுக்கு எழுந்தது.

இருவருமாகக் கிளப்புக்குப் போய்ச் சேர்ந்தார்கள். தண்ணீர் கட்டுவது, பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவு வது, எச்சில் இலைகளைத் தொட்டியில் போடுவது, கூட்டுவது—இவைதான் அவளுடைய முக்கிய வேலை. ரொம்பப் பழக்கப் பட்டவள் போலச் செங்கமலம் வேலை களைச் செய்து கொண்டிருந்தாள்.

காலை எட்டு மணி இருக்கும். கொல்லைக் கிணற் றண்டை அவள் ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தாள். கிளப்புப் பையன் ஒருவன் அவளுக்கு நாலு இட்லியும் காப்பியும் கொண்டு வந்து கொடுத்தான்.

'இது எனக்கும் அவனுக்குமா ?' என்ருள் செங் கமலம்.

'தெரியாது' என்று சொல்லிவிட்டுப் பையன் உள்ளே போய்விட்டான்.

'இது உனக்குத்தான். உன்னைத்தானே வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிருர்கள் ? எனக்கெப்படிக் கொடுப்பார்கள் ?' என்ருன் நரியன். அவன் செய்கை யிலும் பேச்சிலும் ஒரு உறுதி இருந்தது, அவள் மனத் தில் தைத்துக்கொண்டே இருந்தது.

பதிஞெரு மணிக்குமேல் பெரிய பாத்திரங்களைத் தேய்க்கும் வேலை, மளிகை சாமான்களைப் புடைக்கும் வேலை, கொழிக்கும் வேலை, பொறுக்கும் வேலை, அரைக் கும் வேலை—இப்படி ஏதேதோ வேலை செய்து, ஓய்ந்த பொழுது ஒரு மணி ஆகிவிட்டது. ஒன்றரை மணிக்குப்

பழைய பையன் சாப்பாடு போட வந்தான். செங்கமலம் இரண்டு இலையை எடுத்துப் போட்டுக் கொண்டாள். பையன் செங்கமலத்தை விறைக்கப் பார்த்தான். 'போடு வதை இரண்டு இலையிலும் நிரவிப் போட்டுவிட்டுப் போய்யா' என்று சொன்னதும், அவன் ஊமைக் கோட்டானைப் போல விழித்தபடியே காரியத்தை நிறை வேற்றி விட்டான்.

சாப்பாட்டுக்குப் பிறகு கொஞ்ச நேரம் ஓய்வு. வீட் டுக்குப் போய்விட்டுத் திரும்புவோம் என்று அவளுக் குத் தோன்றவில்லை. கவனிக்கவேண்டிய காரியம் எது வாவது இருந்தால்தானே வீட்டுக்குப் போகக் கால் இழுக்கும்?

இலைக்கட்டு கறிகாய் அறையில் உடம்பை நீட்டிக் கொண்டு படுத்தாள். நரியன் பக்கத்தில் படுத்துப் பார்த்தான். தூக்கம் வரவில்லை. எழுந்து காவல் நாயைப் போல் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு சின்ன உருளைக் கிழங்கைக் கோலியாக்கி, விளையாடிக் கொண்டிருந் தான்.

பிறகு மூணு மணியிலிருந்து எட்டு மணி வரையில் வேலை. அதற்குமேல் மத்தியானத்தைப் போல் சாப் பிட்டுவிட்டு ஒன்பது மணிக்கு வீடு திரும்பினார்கள்.

அன்று முதல் இதுவேதான் மாமூலாக இருந்தது. வேலை முறையிலே முக்கிய மாற்றம் எதுவும் இல்லை.

ஒன்பதாவது நாள் காலையில் கிணற்றங்கரையில் செங்கமலம் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்தாள். நரியன் நாரத்தை மரத்திலிருந்து தொங்கிய மஞ்சள் சிட்டுக் கூட்டண்டை ஏதோ நின்று பார்த்துக்கொண் டிருந்தான்.

குனிந்த தலை நிமிராமல் அவன் தாயார் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்ததால், முதலாளி கொல்லைப் பக்கம் வந்து வெந்நீர் அறை ஓரமாக நின்றதைக்

கவனிக்கவில்லை. பாம்பு இருந்தால் மாட்டுக்கு வாசனை தெரியும் என்பார்களே, அதைப் போல நரியன் மட்டும் இதைக் கவனித்துவிட்டான். அதற்குப் பிறகு மஞ்சள் சிட்டுக் கூட்டண்டை இருந்தபடியே கவனத்தை எல்லாம் முதலாளியின் மேல் திருப்பினன். முதலாளி அந்த இடத்தில் நின்றுகொண்டிருந்தாரே ஒழிய, வேறு எதுவும் செய்யவில்லை. சிறிது நேரம் கழித்து அவர் உள்ளே போய்விட்டார். தன்னையும் அறியாமல் நரியன் மனது உஷாரடைந்து விட்டது ஆனாலும், தன் தாயாரிடம் இதைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்ல வில்லை.

மறுநாளும் தாயார் வழக்கம் போலப் பாத்திரம் தேய்த்துக்கொண்டிருந்தாள். அதே மஞ்சள் சிட்டுக் குருவி கூட்டண்டை நரியன் நின்றுகொண்டிருந்த போதிலும் அவன் பார்வை எல்லாம் கொல்லைப் புறத்து வாசலிலேயே இருந்தது. எதையோ தேடுபவர் போல முதலாளி கொல்லைப்புறம் வந்தார். முதலாளி வந்ததைச் செங்கமலம் இன்று பார்த்து விட்டாள். விருட்டென்று ஆடை கலைய எழுந்திருந்தாள். முதலாளி ஒன்றையும் கவனிக்காதவர் போல் ஏதோ பேசத் தொடங்கினர். நரியன் இருந்த இடத்தை விட்டுத் தாயாருக் கருகில் வந்து நின்றுகொண்டான். 'சாப்பாடு எல்லாம் வேளைக்கு வருதா?' என்றார்.

செங்கமலம் வாய் திறந்து பேசாமல் கிடைத்தது என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினாள். 'வேலை எப்படி இருக்கிறது? செக்காத்திக்கு இந்த மாதிரி வேலை பழக்கமிருக்காதே?'

'வயிறு இருக்கல்ல. எதுவும் பழகிப்போகும்' என்றாள் மெதுவாக.

'வாஸ்தவம்தான். வேறென்ன—இந்த வேலை செய்கிற பயல்கள்—' என்று என்னவோ சொல்ல வந்தார் முதலாளி.

அதற்குள் செங்கமலம் குறுக்கிட்டுவிட்டாள்.

'கவுடு சூதில்லாமெ, திருட்டு புரட்டில்லாமே வேலே செய்யுறுங்க. சும்மா சொல்லலாமா ?' என்றுள்.

'மறந்து போய்விட்டேன். இந்த நரியனுக்கு ஏதா வது கொடுக்கிறுங்களா ?'

'எங்க ஆயாவுக்குக் கொடுக்கிறதே எனக்கும் கண்டு போகுதுங்க ' என்றுன் நரியன்.

முதலாளி நரியன் பக்கம் திரும்பவில்லே. செங் கமலத்தை உற்றுப் பார்த்துவிட்டு, வேறு ஒன்றும் பேசாமல் உள்ளே போய்விட்டார்.

'ஏண்டா ! ஐயா என்னேக் கேட்டால் நீ குறுக்கே மாட்டை விட்டு ஓட்ருப்போலப் பேசறே ? அவரு என்ன நெனேச்சுக்குவாரு ?' என்றுள் செங்கமலம் நரியனேப் பார்த்து.

'நடக்கறதை யார் சொன்னு என்ன ?'

'ஓங்கப்பாரு மாதிரி ஏதாவது வம்புலே இழுத்து வச்சுடப் போறெ ?'

'பயப்படாதே ஆயா ' என்று தைரியம் சொன்னுன் நரியன்.

செங்கமலத்துக்கு அப்பொழுதுதான் ஒரு விஷயம் தோன்றிற்று. நரியன் எப்பொழுதும் தன் கூடவே இருக்கிறுனே அன்றி, வேறெங்கும் செல்வதில்லேயே! வாயோ துடியாக இருக்கிறது ! முதலாளியை மற்றொரு சமயத்தில் ஏதாவது சொல்லிவிட்டால், பிழைப்புக்குத் தீம்பு ஏற்பட்டுவிடுமே !

'ஏண்டா நரியா ! நீ என்ன எனக்கு இடுப்புப் பிடிக் கிறுயா, இங்கியே சுத்திக்கிட்டு கிடக்கிறே? சின்னப் புள்ளேயா அங்கே இங்கே விளேயாடறதில்லே' என்றுள்.

'இனிமேத்தான் போவணும். எல்லாமே புதுசல்ல என்று பெரிய அறிவாளிபோல் பதிலளித்தான்.

மறுநாள் வழக்கம்போல் நரியன் தாயாருடன் சென்றான். நாரத்தை மரத்தின் கீழே ஒரு சிறிய பள்ளத்தைத் தோண்டி முந்திரிக் கொட்டைகளை வைத்துக்கொண்டு, வல்லா விளையாடிக் கொண்டிருந்தான். செங்கமலம் தன் பொறியைத் தொலைத்துக் கொண்டிருந்தாள்

வழக்கம் போல, எட்டு மணிக்குச் செங்கமலத்துக்கு ஹோட்டல் பையன் காலை உணவு கொண்டு வந்தான். ஆனால், வழக்கத்துக்கு விரோதமாக, நரியனுக்கு வேறு தனியாக உணவு கொண்டு வந்திருந்தான்.

'இவனுக்கா ?' என்று வியப்புடன் கேட்டாள் செங்கமலம்.

'ஆமாம்' என்றான் ஹோட்டல் பையன்.

'யாரு குடுக்கச் சொன்னாங்க?'

'முதலாளி' என்று கூறிவிட்டு, அவன் உள்ளே போய்விட்டான்.

முதலாளியின் கருணையைச் செங்கமலத்தால் மனத்தில் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. ஆனால், நரியன் மட்டும், முதலாளி இந்தக் காரியத்தை எதற்காகச் செய்தார் என்று யோசித்துக் கொண்டே, இட்லியைத் தின்று கொண்டிருந்தான். செங்கமலம் வாழ்த்திக் கொண்டே தின்றுகொண்டிருந்தாள்.

அப்பொழுது ஓட்டலில் இலை நறுக்கும் மலையாளி அங்கு வந்து சேர்ந்தான். கிளப்புக்கு வேலை செய்ய வந்த இரண்டு மூன்று நாட்களுக்குள்ளேயே யார் யார் அங்கு வேலை செய்கிறார்கள் என்பது இவர்களுக்கு அத்துபடியாகிவிட்டது. சிலருடன் பேசிக்கூடப் பழக்கமுண்டாய்விட்டது. இலை நறுக்குகிற மலையாளி, பிந்திய வகுப்பைச் சேர்ந்தவன்.

வந்தவன் கையிலிருந்த பேனாக் கத்தியைக் குழாய் அடியில் தேய்த்து அலம்பிவிட்டுத் திரும்பினான். இவர்

கள் உட்கார்ந்து சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்த இடத்தைத் தாண்டிக் கத்தியில் இருந்த தண்ணீரைப் போக்குவதற்காகக் கையை ஆட்டி, மலையாளி ஒரு தரம் உதறினான். தாயார்மேல் நான்கைந்து தண்ணீர்த் துளிகள் தெறித்தன. ஆனால், ஒன்றுகூட இவன்மேல் விழவில்லை. ஏதோ தவறுதலாக விழுந்திருக்கிற தென்றுதான் இருவரும் முதலில் நினைத்தார்கள். இரண்டாவது தடவையும் செங்கமலத்தின்மீதே துளி கள் விழுந்தன.

'பார்த்துத் தண்ணீரை உதறதில்லே—மேலே எல் லாம் விழுதே' என்றாள்.

'ஒடம்பு மழையா நனைஞ்சு போச்சா—சவுக்கம் கொணந்து தாரேன்' என்று சிரித்துக் கொண்டே உள்ளே போய்விட்டான்.

மலையாளி செய்ததோ பேசினதோ நரியனுக்குப் பிடிக்கவில்லை விஷமத்திற்காகத்தான் செய்தான் என்று நரியன் மனது சொல்லிவிட்டது. ஆனால், அவன் தாயாருக்குக் கோபமே வரவில்லையே, ஏன்? தன்மீது தண்ணீர் தெறித்திருந்தால் கட்டாயம் சண்டைக்குப் போயிருப்பான். தாயாருக்கு வரவில்லையே, ஏன்?

இப்படி ஏதோ நினைத்துக் கொண்டிருக்கும் பொழுதே, உள்ளே இருந்து குஞ்சான் வந்தான். கிளப் பிலே குஞ்சானுக்கு இன்ன வேலைதான் என்று இல்லை. அவன் கிளப்பில் எப்பொழுதும் இருப்பான். எல்லா இடத்திலும் இருப்பான். தலைமயிரை எப்பொழுதும் சாய்த்து முடிபோட்டிருப்பான்—கிராப் வைத்த உலகத் திலே ஒரு விதிவிலக்கு.

பெரிய பாத்திரங்கள் தேய்த்த களைப்பிலே செங் கமலம் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந் தாள். கொட்டைப் பாக்கில் ஆணி அடித்து, நரியன் பம்பரம் செய்து கொண்டிருந்தான்.

'என்ன செங்கமலம், குஷியாக வெற்றிலை போட்டுக் கொண்டிருக்கிறாய்?' என்று குஞ்சான ஆரம்பித்தான்.

தன்னுடன் பேச வந்திருக்கிறான் என்று அவள் நினைக்கவில்லை.

'சும்மாத்தான்' என்றாள்.

'அது சரி, குடி இருக்க உங்க வீட்டிலே ஒரு ரூம் இருக்குன்னு சொன்னாங்களே' என்று குஞ்சான் செங் கமலத்தின் முகத்தைப் பார்த்தான்.

'யார் சொன்னாங்க?'

'யாரோ!'

'யாருக்கு?'

'எனக்கேதான். எட்டாக் கையிலிருந்து இங்கே போகவர கஷ்டமாயிருக்கு' என்று சொல்லிக்கொண்டே சிரித்தான்.

'இடமில்லையே' என்று சொல்லிவிட்டு, பிசகுக்கு மன்னிப்புக் கேட்பதுபோல அவளும் சிரித்தாள்.

'யாரோ சொன்னாங்க கேட்டேன். ஒண்ணும் நெனைச்சுக்கிடாதே!' என்று கண்ணைச் சிமிட்டினான்.

கண் சிமிட்டலுக்குள்ள பொருள் செங்கமலத்திற் குத் தெரியாதென்று சொல்ல முடியாது. ஆனால், அவள் மறுபடியும் சிரித்தாளே ஒழிய, வேறு பதில் சொல்லவில்லை.

குஞ்சான் அவளை விட்டுவிட்டு நரியன் பக்கம் திரும்பினான்.

'ஏண்டா பயலே! கோழிக் குஞ்சுபோல ஆயா வையே சுத்திக்கிட்டுக் கிடக்கிறே? பம்பரம் கிம்பரம் எல்லாம் ரோடிலே ரெண்டு பயல்களோடெ போய் விளை யாடறதில்லே?'

நரியன் அவனை வெறிக்கப் பார்த்தானே ஒழிய, பதில் சொல்லவில்லை.

'சொன்னால்கூடப் போறதில்லை' என்று செங்கமலம் குறுக்கிட்டாள்.

'சின்னப் பயதானே!' என்று சொல்லிவிட்டு, குஞ்சான் அரைச் சிரிப்பு சிரித்துக்கொண்டே, உள்ளே போய் விட்டான்.

அன்று மத்தியானம் செங்கமலம் வழக்கம்போல இலைக்கட்டு அறையில் சாப்பாட்டுக்குப் பிறகு கண்ணயர்ந்தாள். நரியனுக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ, கிளப்பைவிட்டு வெளியே கிளம்பினான். அவன் கிளம்பிப் போன பொழுது முதலாளி பெட்டி அடியில் உட்கார்ந்திருந்தார். நரியனுக்குக் குறிப்பு எதுவும் இல்லை. கால்போன வழியே போனதில் சிறிது நேரத்திற்குள் குளத்தங்கரை அண்டை வந்து விட்டான்.

நல்ல உச்சிப் பொழுது. குளம் வெய்யிலிலே தவித்துக் கொண்டிருந்தது. கரையோரத்திலிருந்த மரங்களும் செடிகளும் சோர்ந்திருந்தன. நரியன் குளத்தைச் சுற்றி வந்தான். காவல்காரனைக் காணோம். குளத்தில் மூலைக்கொருவராய்த் தூண்டில் போட்டுக் கொண்டிருந்தார்கள். காவல்காரனில்லாவிட்டால் எத்தனை பேர் மீன் பிடிக்கிறார்கள்.

இவர்களை எல்லாம் பார்த்ததும் ஏனோ அவனுக்குத் தாயாரின் நினைப்பு வந்துவிட்டது. வழக்கமாக அவள் தூங்கும்பொழுது பக்கத்தில் உட்கார்ந்திருப்பவன், இப்பொழுது சொல்லிக் கொள்ளாமல் வந்துவிட்டான்! குளத்துக் காவல்காரன் செய்த காரியத்தைத் தானும் செய்து விட்டான்! இந்த ஞாபகம் வந்ததும் கிளப்புக்குத் திரும்பினான்.

இலைக் கட்டறையில் அவன் தாயார் தூங்கிக் கொண்டிருந்தாள். முதலாளி இலைக் கட்டுகளைப் பரிசோதித்து, அழுகினதையும் கிழிந்ததையும் ஒதுக்கிக்

கொண்டிருந்தார். நரியன் திரும்பி வந்ததைப் பார்த்ததும், திடுக்கிட்டவர்போல கைவேலை ஒரு நிமிஷம் தானாக ஓய்ந்தது. 'எங்கேடா வெய்யிலில் சுத்திவிட்டு வருகிறாய் ?' என்றார். அவர் கேட்ட மாதிரி, ஏன் திரும்பி வந்தாய் என்று கேட்பது போலிருந்தது. தாயார் தூங்கிக் கொண்டிருந்த அறையில் முதலாளி இலைக் கட்டைப் பரிசோதிக்க வந்தது அவன் மனத்தில் கோபத்தையும் வெறுப்பையும் தூண்டிற்று. அவன் பதில் சொல்லவில்லை.

'ஏண்டா, கேட்கிறேன்—?'

நரியன் அமைதியாகப் பதில் கூறினான் :

'சும்மா குளத்தங்கரைப் பக்கம் போனேன். காவல்காரன் இல்லை. ஆளுக்கொரு பக்கமாகத் தூண்டில் போட்டுக்கிட்டு இருந்தாங்க. பாத்துட்டு வரேன்.'

நரியன் பதில் முதலாளிக்குச் சுருக்கென்று தைத்தது. அவசர அவசரமாக இலைக்கட்டுகளைக் கட்டி வைத்துவிட்டு, அறையை விட்டு வெளியேறினார்.

சிறிது நேரம் கழித்து, செங்கமலம் தூங்கி எழுந்தாள்.

'நல்ல தூக்கம்போல இருக்கு' என்றான் நரியன்.

'காலையிலே இருந்து வேலை செய்யறது சோறு தின்னதும் தலையை அமட்டுது. நல்லாத் தூங்கிட்டேன்.

'நான் இப்போ குளத்தங்கரைப் பக்கம் போயிருந்தேன். குளத்திலே காவல்காரன் இல்லை. ஆளுக்கொரு பக்கமாகத் தூண்டி போட்டுக்கிட்டிருந்தாங்க. குளத்துத் தண்ணி சின்னச் சின்ன அலையா சிரிச்சு ஓடிக்கிட்டிருந்துச்சு. வேடிக்கை பார்த்துட்டு வரேன்...... ஆமாம், முதலாளி இங்கே வந்து இலைக்கட்டை எல்லாம் சரிப்படுத்திக்கிட்டிருந்தாரே, தெரியுமா ?'

'நான்தான் தூங்கிட்டேனே ! அறைக்கா வந்தாரு?' என்று செங்கமலம் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

'அதான் இங்கெல்லாம் தூங்கக கூடாது சொல்றேன். இனிமே உருமத்திலே சோறு தின்னூட்டு, ஊட்டுக்குப் போயிட்டுத் திரும்பி வந்தா என்னவாம்?'

திரும்பி வர நேரமாகிவிடும் என்று தாயார் சொன்னபோது, நரியனுக்குச் சரியாகப் படவில்லை. இருந்தாலும் தாயாருடன் தர்க்கத்திற்கு ஆரம்பிக்கவில்லை. மனதிற்குள்ளேயே ஒரு தீர்மானம் செய்து கொண்டான். எந்தக் காரணத்தைக் கொண்டும் ஆயா இருக்கும் இடத்தைவிட்டுப் போவதில்லை என்று முடிவு செய்து கொண்டான்.

ஆனால், கிளப்பிலிருந்தவர்கள் மட்டும் நரியனை ஒரு ஆளாகவே மதிக்கவில்லை. சின்னப் பயல் என்று நினைத்துக் கொண்டு, அவன் இருந்தால்கூட ஏதோ சாக்கிட்டு செங்கமலத்திடம் பேசினார்கள். செங்கமலம் எல்லாரிடத்திலும் சின்னச் சிரிப்பும் பெரிய சிரிப்புமாக எதிர்க்கடை பேர்ட்டாள். நரியனுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. குளத்துக்குக் காவல்காரன் இல்லை என்று நினைத்துக் கொண்டே இருக்கட்டும்; பிறகு தெரியும் என்று நரியன் நினைத்துக் கொண்டான்.

இப்படியே சில நாட்கள் போன பிறகு, நரியன் ஒரு மாறுதலைக் கண்டான். மலையாளி, குஞ்சான் முதலியவர்கள் தாயாருடன் பேச முயல்வதில்லை. அது ஒரு ஆச்சர்யமாக இருந்தது நரியனுக்கு. ஆனால், அதைவிடப் பெரிய ஆச்சர்யமொன்று அன்றிரவு காத்துக் கொண்டிருந்தது.

இரவில் கிளப் வேலை எல்லாம் முடிந்து சாப்பிட்ட பிறகு செங்கமலமும் நரியனும் வீட்டுக்குத் திரும்பினார்கள். வழக்கம்போலக் கால் கையைக் கழுவிக்கொண்டு செங்கமலம் முற்றத்தின் ஓரத்தில் சிம்மிணி விளக்கை ஏற்றி வைத்துவிட்டு, வந்து உட்கார்ந்து கொண்டாள். தன் இடுப்பிலிருந்த இரண்டு மூன்று பொட்டலங்களைப்

பிரித்துக் கீழே வைத்து, நரியனைப் பார்த்து, 'சாப்பிடு' என்றாள்.

நரியனுக்கு ஒரே பிரமிப்பாய் இருந்தது.

'இதேது, வாங்கினியா ?'

'இல்லியே ?'

'பின்னே ஏது ?'

'முதலாளி குடுத்தாரு.'

'எதுக்காக ?'

'சொச்சமிச்சம் இருந்தா, கிளப்புங்களிலெல்லாம் வேலைக்காரிக்குக் குடுக்கிற வழக்கம்தான்.'

'எப்பொ குடுத்தாரு ?'

உடல் அயர்ந்து வீட்டுக்கு வந்திருந்தவளுக்கு, நரியன் நச்சுநச்சென்று கேட்பது பிடிக்கவில்லை.

'எப்போ குடுத்தாரு—உனக்குக் காட்டினப் புறவு தான் குடுக்கணுமா என்ன ? தின்னுன்னு திம்பியா ?' என்று அதட்டினாள்.

ஆயா சொல்வதற்காக இரண்டை வாயில் எடுத்துப் போட்டுக் கொண்டான். தூக்கம் வருது என்று அந்த இடத்திலேயே குப்புறப் படுத்துக்கொண்டு விட்டான்.

அப்பொழுதுதான் செங்கமலத்துக்கு முதல் முதலாக மகனிடத்தில்—சின்னப் பையனிடத்தில்—பயம் வந்தது. தவறுதல் ஒன்றுமில்லாத போதே, என்னென்னவோ பேசுகிறானே ! இவன் வாய்த் துடுக்கு எங்கே போய் நிற்குமோ என்று பயந்தாள்.

மறுநாளைக்குக் கிளப்புக்குப் போய்விட்டுத் திரும்பு காலில் நரியன் ரொம்ப எச்சரிக்கையாக இருந்தான். கிளப்பை விட்டு வெளியே போகும்போது முதலாளி தாயாரிடத்தில் பொட்டலம் கொடுத்ததைப் பார்த்தான். பார்த்தவன் சும்மா இருக்கவில்லை.

'இது என்னுத்துக்குங்க ? கொசரு ?' என்ருன்.

'ஒனக்குத்தாண்டா; ஊட்டுலே போய்ச் சாப்பிடு' என்ருர்.

மேலே நரியன் பேச முடியாதபடி செங்கமலம் நடையைக் கட்டிவிட்டாள். நரியனும் மனதிற்குள் ஏதோ நினைத்துக் கொண்டே கிளம்பி விட்டான்.

அதற்குப் பிறகும் நாள் தவருமல் வீட்டுக்குப் பொட்டலங்கள் வந்து கொண்டிருந்தன. நரியன் சில நாள் பட்சணம் தின்பான். சிலநாள் தின்ன மறுத்து விடுவான். அவன் சிலநாள் தின்றபோதிலும் செங்கமலத்திற்குநரியனிடத்தில் இருந்த பயம் நீங்கவில்லை.

பதினைந்து நாளைக்குப் பிறகு வழக்கம்போல் செங்கமலமும் நரியனும் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். முதலாளி கொஞ்ச தூரம் பின்னுல் வந்து கொண்டிருந்தார். இதை இருவரும் பார்த்தார்கள். வழக்கமாக இந்த வழியே அவர் வீடு செல்வதில்லை. 'முதலாளி வருகிருரே ?' என்று கேட்டான் நரியன்.

'எங்கே போருரோ ?' என்ருள் செங்கமலம்.

அதற்குப் பிறகு செங்கமலம் வீட்டுக்கு வந்து சிம்மிணி விளக்கை ஏற்றிக்கொண்டு, முற்றத்தின் ஓரத்தில் உட்கார்ந்தாள், நரியனும் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். முதலாளி திடீரென்று வீட்டுக்குள் நுழைந்ததும், செங்கமலத்திற்குத் திகைப்பாய் இருந்தது. நரியனுக்கு குப்பென்று உடலில் சூடுண்டாயிற்று.

'என்னுங்க' என்ருள் செங்கமலம்.

'ஒண்ணுமில்லை; நாலு பசங்களுக்கு என் பிறந்த நாளைக்குச் சட்டைத் துணி வாங்கிக் குடுக்கிற வழக்கம். மூணு பேருக்குக் கொடுத்துவிட்டேன். இந்தா நரியனுக்கு' என்று ஒரு கடுதாசுப் பொட்டலத்தை அவிழ்த்து

ஒரு டிராயரையும் சட்டையையும் செங்கமலத்தினிடம் நீட்டினுர்.

செங்கமலத்தின் முகம் மலர்ந்தது. ஆனுல், வாக்கில் மட்டும் 'இதெல்லாம் என்னுத்துக்குங்க' என்ற சம்பிரதாயமான பேச்சு வெளிப்பட்டது. வாய் பேசிற்றே ஒழிய, கை அவைகளை வாங்கிக்கொண்டது. அவைகளைப் பிரித்துப் பார்க்காமல், 'இந்தா' என்று நரியனிடம் கொடுத்தாள்.

நரியன் தயங்காமல் வாங்கிக் கொண்டான். ஆனுல், அடுத்த நிமிஷம் அவன் செய்ததை யாரும் எதிர்பார்க்கவில்லை. துணிகளைச் சுருட்டி அவர் காலடியில் விசிறி எறிந்தான் முதலாளிக்கு முகம் தொங்கிவிட்டது. 'வெறும் தறுதலை' என்றுர்.

'இவன் அப்பாரைப்போல் எதுனுச்சும் நல்ல இடத்திலே பொல்லாப்பைக் கொண்டாந்துடுவான்னு நெனைச்சேன்; சரியாப் போயிட்டுது. சின்னப் பயல், மனசுலே வச்சுக்காதிங்க' என்றுள்.

முதலாளி தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு, வெளியே போய்விட்டார்.

செங்கமலம் நரியனுடன் பேசவில்லை. பாயைப் போட்டுக்கொண்டு தூங்கிவிட்டாள். மறுநாள் காலையில் வழக்கம்போல் கிளப்புக்கு வேலை செய்யக் கிளம்பும் சமயம். நரியனும், அப்பொழுது எழுந்துவிட்டான். 'ஆயா?' என்றுன்.

'ஏண்டா' என்று எரிந்து விழுந்தாள்.

'இம்மே இந்த வேலை வேண்டாம். காவல்காரன் இல்லாத குளமின்னு நெனைச்சுக்கிறுன்கள். ஆயா வரமாட்டான்னு நான் போய்ச் சொல்லிடறேன்' என்று நரியன் வீட்டைவிட்டுக் கிளம்பிவிட்டான்.

செங்கமலம் திகைத்து உட்கார்ந்து விட்டாள்.

# வெறும் மரமா?

**பி**ஸ்மில்லா என்று கடைத்தெருவின் முதல் கடையில் டேப்பைத் தட்டிக்கொண்டு பாட ஆரம்பித்தார் பக்கிரி.

''இப்பத்தான் கடை திறக்கிறேன், தெரியல்லையா?' என்று சீறி விழுந்தார் கடைக்காரர்.

பக்கிரி கோபம் கொள்ளவில்லை. தம் நெற்றியைத் தொட்டுச் சலாம் வைத்துக்கொண்டே அடுத்த கடைக்குப் போய் டேப்பைத் தட்ட ஆரம்பித்தார்.

''நம்ப கடையிலே வியாழக்கிழமைதான் தருமம், தெரியாதா சாயபு?'' என்றார் முதலாளி.

பக்கிரிக்குக் கோபம் என்பதே தெரியாது போலிருக்கிறது. யாசகந்தான் கேட்கிறார். அதனால் கோபத்திற்கு இடமில்லை. அலுப்பு இருக்கும் அல்லவா? பக்கிரிக்கு அலுப்புக்கூட இல்லை. யாரேனும் பக்கிரியின் தங்கமான தன்மையை ஊன்றிக் கவனித்திருந்தால் பேரின்பப் பெருவாழ்வுக்கு வழி கடைத்தெரு வழியாகக்கூடப் போகமுடியும் என்பது தெரிந்துவிடும். நிலை குலையாத அவ்வளவு அமைதியுடன் அடுத்த கடைக்குச் சென்றார்.

''நீ வந்த வேளை சில்லறை இல்லையே, சாயபு'' என்றார் கடைக்காரக் கிழவனார்.

யாசகம் கேட்பதில்கூட அதிருஷ்டம் துரதிருஷ்டம் இருப்பதுபோன்ற பழியைக் கிழவனார் பக்கிரிமீது சுமத்தினார். வழக்கம்போலச் சலாம் வைத்துவிட்டுப் பக்கிரி அடுத்த கடைக்குப் போய், டேப்டைத் தட்டினார். டேப் தகடுகள் ஜிகு ஜிகு என்று ஒலித்தன. கடை

முதலாளி புதியவர்; இளைஞர். எவ்விதத் தயக்கமும் இல்லாமல் ஒரு சின்னக்கட்டு ஊதுவத்தியும் அரையணாக் காசும் பக்கிரியினிடம் கொடுத்தார். பக்கிரி நெற்றியைத் தொட்டுச் சலாம் செய்து விட்டுக் கடைக்காரர் தலையை மயில்பீலியால் ஒரு தரம் தடவினார். பிறகு, அல்லாவின் நற்பெயரை,

அல்லாவின் நற்பயெரைச்
சொல்லு சொல்லு—எல்லாப்
பொல்லாங்கும் போகுமென்று
சொல்லு சொல்லு

என்று பாடிக்கொண்டே சென்றார்.

அடுத்தது புஷ்பக் கடை. பக்கிரியைக் கண்டதும் கடைக்காரருக்கு மகிழ்ச்சி ஒரு புறம், வியப்பு ஒருபுறம்.

"என்ன பக்கிரி! ரொம்ப நாளாகக் காணோமே?"

"காணாமல் என்னங்க? கழுதை கெட்டால் குட்டிச் சுவருதானுங்களே! குட்டிச்சுவா இல்லாட்டிப் பாழும் மண்டபம். அது மாதிரிதான் ஊரிலே சுத்திக்கிட்டுக் கிடக்கிறேன். அல்லா கண் திறக்கிற வரையில் சுத்தித் தானே ஆகோணும்? நாலு காசு கிடைச்சாப் போது மின்னு போயிடறேனுங்க."

புஷ்பக் கடைக்காரருக்குத் தம்மை அறியாமலேயே பக்கிரியிடத்தில் ஓர் அன்பு உண்டு.

"இப்பொத்தான் கடையைத் திறக்கிறேன். பக்கிரிக்குப் போணி பண்றேன்" என்று கூறிக் கொண்டே இரண்டணாக் காசையும் ஒரு பாகம் மல்லிகைப் பூச் சாரத்தையும் கொடுத்தார்.

"பக்கிரிக்குப் பூ எதுக்குங்க வீணா?"

"பக்கிரிகிட்டெ கொடுத்தால் அல்லாவுக்குப் போய்ச் சேரும்."

மயில்பீலியால் புஷ்பக்காரர் தலையில் தடவி விட்டுப் பக்கிரி அடுத்த கடைக்குப் போனார். அதற்குப் பிறகும் சில கடைகளுக்குப் போனார். சில இடங்களில் காசு கிடைத்தது; சில இடங்களில் வசவு கிடைத்தது. எது கிடைத்த போதிலும் யா அல்லா என்று கூறி வணக்கம் செய்துவிட்டு அவர் போய்க்கொண்டிருந்தார். பின்னும் சிறிதுநேரத்திற்குள் அவர் மனம் மாறிவிட்டது. கையில் இருந்த காசுகளை எண்ணிப் பார்த்தார். அன்றைப் பாட்டுக் தப் போதுமானது இருந்தது. ஒரு படி அரிசியும் உப்பும் மிளகாயும் வாங்கிக்கொண்டார். பத்தடிக்கு அப்பால் சென்றபொழுது ஒரு கோழிக் குஞ்சு விலைக்கு வந்தது. அதையும் வாங்கிக் கொண்டு ஊர்ப்புறத்துக் காட்டை நோக்கிச் சென்றார்.

காட்டின் முன்புறத்தில் பெரிய ஆலமரமும் குளமும் இருந்தன. டேப்பையும் கோட்டையும் மூட்டையையும் இறக்கி வைத்துவிட்டுச் சமையல் வேலையைத் தொடங்கினார். சமையல் அவருக்கு எப்பொழுதுமே பெரிய காரியமாய் இருந்ததில்லை. இப்பொழுதும் அப்படித்தான்.

மரத்தடியில் வேண்டிய செங்கல் கிடந்தது. புதரில் வேண்டிய சுள்ளி இருந்தது. பையில் நெருப்புப் பெட்டி இருந்தது. வேறு என்ன வேண்டும்? ஒரு கலயத்தைத் தண்ணீரும் அரிசியுமாக அடுப்பில் ஏற்றினார். அரை மணிக்குள் சோறாகிவிட்டது. பிறகு இறகைப் பிய்த்து விட்டுக் கோழிக் குஞ்சை மண் சட்டியில் போட்டு அடுப்பில் ஏற்றினார்.

கோழிக் குஞ்சு வாடிக்கொண்டிருந்தது. கொஞ்சங் கொஞ்சமாக ஈரத்தின் அரவம் சட்டியில் அடங்கி விட்டது. புரட்டிப் போட்டால் பக்குவம் ஆகிவிடும் என்று நினைத்தார். துடுப்பு வேண்டுமே! காட்டில் துடுப்பு ஏது? ஒரு விநாடி திகைப்படைந்தார். மறு

விநாடி எதிர்ப்புறத்தில் நின்றுகொண்டிருந்த தனி மரம் ஒன்று தென்பட்டது. அதிலிருந்து ஒரு சிறு கொம்பை ஒடித்து நுனியைக் கிள்ளி எறிந்துவிட்டுத் துடுப்பாக் கிக்கொண்டார்.

கோழிக் குஞ்சை அந்தக் குச்சியால் மூன்று நான்கு தடவை புரட்டி விட்டார் ஐந்தாம் தடவை புரட்டும் பொழுது விர்ர் என்ற ஓசை எழுந்தது. சட்டியில் இருந்த மாமிசம் சிறகு பெற்றுப் பறந்து போய்விட்டது. திரும்பத் திரும்பச் சட்டியைப் பார்த்தார். கோழிக் குஞ்சு இருந்த சுவடே தெரியவில்லை. திகைப்புடன் நிமிர்ந்து பார்த்தார்! கோழிக் குஞ்சு சிறகுடன் கண்ணெதிரே பறந்துபோய் எதிர்ப்புறத்து மரமொன்றில் உட்கார்ந்து கொண்டிருந்தது.

பசிக் கொடுமையுடன் அதைப் பிடிக்க ஓடினார். அது மற்றொரு மரத்திற்குப் பறந்து சென்றுவிட்டது. அதைத் தொடர்ந்து சென்றார். கைக்குக் கிட்டுவது போல் இருக்கும். ஆனால் கிட்டாது. இப்படியே ஆசை காட்டிக் கோழிக் குஞ்சு அவரை நெடுந் தூரம் இழுத்துச் சென்றுவிட்டது. பக்கிரி சலிப்படைந்தார். கால்கள் துவண்டன. பசி காதை அடைத்தது. இனித் தொடர் வதில் பயனில்லை என்று நின்றுவிட்டார்.

நின்றவுடனே மின் வெட்டினாற்போல ஓர் எண் ணம் எழுந்தது. 'உயிரற்ற கோழிக் குஞ்சுக்கு உயிர் ஊட்டியது எது? வெறும் மாமிசத்தைக் குஞ்சாக்கி இறகளித்து வெட்டவெளியில் பறக்கச் செய்தது எது?' என்ற எண்ணங்கள் முளைத்தன. தன் கையில் இருந்த துடுப்பு தென்பட்டது. துடுப்பால் கோழிக் குஞ்சைப் புரட்டியபொழுதுதான் அந்த அற்புதம் நிகழ்ந்தது என்று ஞாபகம் வந்தது. ஒரு விநாடி கண்ணை மூடியா அல்லா என்றார். மறுவிநாடி துடுப்பில் இருந்த இரண் டோர் இலைகளை எடுத்து மென்று தின்றார். இரண்

டொரு நிமிஷங்களுக்குள் கும்மென்று அடைத்திருந்த காது தெளிவாகக் கேட்க ஆரம்பித்தது. வயிற்றைக் கிண்டிய பசி ஆறிவிட்டது. மனத்தை அழுத்திய அலுப்பும், உடலை அழுத்திய அயர்வும் இருந்த இடம் தெரியவில்லை. அதற்கு மாருக அவருக்குள் புதிய ஒளியும் அமைதியும் சக்தியும் கடலலைபோல் எழுந்து பாய்ந்து கொண்டிருந்தன, 'வாஹ்வா! வாஹ்வா'! என்று மகிழ்ச்சியால் ஒரு கணம் பொங்கினுர்.

அடுத்த விநாடி 'இந்த மர்மம் அந்த மரத்தில்தான் ஒளிந்திருக்கிறது' என்ற நினைப்பு மூண்டது. அந்த மரத்தைத் தேடிக்கொண்டே பக்கிரி வந்த வழியே திரும்பினுர். ஆனுல் வழி தெரியவில்லை. மரமும் தென்படவில்லை.

அந்தக் கொம்பை வைத்துக்கொண்டு இன்னும் மரத்தைப் பக்கிரி தேடிக்கொண்டுதான் இருக்கிருர்.

இப்பொழுதெல்லாங்கூடக் கடைத்தெருப் பக்கம் சில சமயம் அவர் வருகிருர். ஆனுல் கையில் டேப் இல்லை. வயிற்றில் பசி இல்லை! கையில் அந்தக் கொம்பு! கண்ணில் ஒரு லாகிரி. எந்தக் கடை வாசலையும் இப்பொழுது அவர் மிதிப்பதில்லை.

பக்கிரிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று கடைக்காரர்கள் நினைக்கிருர்கள். புஷ்பக் கடைக்காரரும் ஊதுவத்திக் கடைக்காரரும் அவர் மஸ்தான் ஆகிவிட்டார் என்று மறுக்கிருர்கள். தாமாக யாரேனும் அவருக்கு இப்பொழுது கொடுத்தால் உண்டு. இல்லாவிட்டால் இல்லை. ஆனுலும் அவருக்குக் கிடைத்துக்கொண்டுதான் இருக்கிறது.

# பாம்பின் கோபம்

ஓதுக்குப்புறமான பாறை ஓரத்தில் பாம்பு படுத்துக் கொண்டு காற்றையும் வெயிலையும் குடித்துக் கொண்டிருந்தது. மிகவும் அழகான நல்ல பாம்பு. மின்னல் கோட்டினால் கோதுமையை வரைந்தது போல உடம் பெல்லாம் இருந்தது. செம்போத்தின் கொண்டையைப் போல் விரியவும் சுருங்கவும் சக்தி கொண்ட அமைப்பு; விரிந்தால் படம், சுருங்கினால் தலை! படத்தில் கறுப்பு மாலையை வாட்டியது போன்ற நாமம். இவ்வளவு அழகு தனக்கு ஏன் அமைந்தது என்று பாம்புக்கே தெரியவில்லை. தலையிலே நாகரத்தினம் இருக்கிறது. அதைப் பாதுகாக்கும் அழகிய பெட்டிதான் தலை என்று அசரீரி சொன்னபொழுதும் அதற்கு நம்பிக்கை பிறக்க வில்லை

கண்ணை மூடிய நிலையில் பாம்பு படுத்துக்கொண்டிருந்தால் கவலைகள் எழுந்தன. நாகரத்தினம் இருக்கட்டும், இல்லாமல் போகட்டும். சந்தேகமறத் தன்னிடம் வேறு ஒன்று இருப்பது அதற்கு எப்பொழுதும் தெரிந்துகொண்டே இருந்தது. பசி, பசி, தீராத பசி! சுளுவாக எங்கும் காற்றுக் கிடைக்கிறது, மலர் கிடைக்கிறது, இலை கிடைக்கிறது. ஆனால் இவைகளால் பசி ஆறுவதில்லை. மற்றப் பிராணிகளோ கதவைச் சாத்திக்கொண்டு ஒளிந்துகொள்வது போலக் கண்ணுக்கே அகப்படுவதில்லை. பசிப் பிணியும் வாழ்வும் ஒன்றாகவே இருந்தன. இரை தேட ஊரைச் சுற்றச் சென்றால் தடி கொண்டு அடிக்க வருகிறார்கள். தன் பசியோடு போனால்கூடப் பரவாயில்லை; குட்டிகளின் பசிக்கு வேறு வகை சொல்ல வேண்டி இருந்தது. எங்களைக் கேட்காமல்

ஏன் உண்டாக்கினுய் என்று அவை சதா சீறிக்கொண்டிருந்தன.

இப்படிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த பொழுதே யாரோ ஒரு வழிப்போக்கனின் நிழல் ஆடிற்று. விருட்டென்று கிளம்பி பாம்பு மறைவிடத்தை நோக்கி ஓடிற்று. சொந்த வீடா, வாசலா ? ஒரு நிமிஷம் கவலையின்றித் தலை வைத்துப் படுக்க இடம் உண்டா ? என்ன பிழைப்பு ! தவிப்புடன் இங்கும் அங்கும் ஓடிற்று. வருத்தம் அதையும் மீறிக் கோபமாக மாறும் சமயத்தில் நல்ல வேளையாக ஒரு பெரிய கறையான் புற்றுத் தென்பட்டது.

புற்றுக்குள் பாம்பு நுழைந்தபொழுது யாரும் அதைத் தடுக்கவில்லை. யாராவது வழியில் இருந்தால் தானே ? பாம்பு தன் பாட்டில் சரசரவென்று இறங்கி ஒரு பெரிய மைய மண்டபத்தை அடைந்து,அப்பாடா என்று கவலை இல்லாமல் சுருட்டிப் படுத்துக் கொள்ள ஆரம்பித்தது.

"யார் நீ ?" என்று அழுத்தமான பெண் குரல் கேட்டது.

நிமிர்ந்து பார்த்தபொழுது மண்டபத்தின் மத்தியில் கறையான் ராணி பஞ்சணைச் சிம்மாதனத்தில் ஒயிலாக வீற்றிருப்பது தெரிந்தது. 'யார் நீ ? கேள்வி முறை இல்லாமல் என் அரண்மனையில் எப்படி நுழைந்தாய் ?" என்று ராணி மறுபடி அதட்டினுள்.

பாம்புக்குக் கோபம் வந்து விட்டது.

'திறந்த வெளியில் பாத்தியம் உண்டா என்ன ? யார் வேண்டுமானுலும் நுழையக் கூடாதென்ருல் இந்தப் புற்றுக்குத் தொண்ணூற்றெட்டு வாசல் வைப்பானேன் ? வீட்டுடன் நீ பிறந்தாயா என்ன, அரண்மனை உன்னுடையது என்று சொல்ல ? எல்லோருக்குங்

தான் உரிமை உண்டு. கஷ்டப்படும் பொழுது உபயோகிக்க.''

"இதை நான்தானே கட்டினேன் ?''

"நீ மாத்திரம் எப்படிக் கட்டினுய் ? மெத்தையில் உட்கார்ந்தபடியே பொட்டை அதிகாரம் செய்தாய். வாயில்லாத அலிக் கறையான்கள் வீட்டைக் கட்டிவைத்தன. கட்டினவர்களையும் விட்டுவிட்டுத் திண்டில் கிடந்து புரளுகிறவள் எனக்குச் சொந்தம் என்று சட்டம் படிக்கிருய் !''

"ஏ பாம்பே, ராணியோடே தர்க்கம் பண்ணுதே. பிறகு எனக்குக் கெட்ட கோபம் வந்துவிடும்'' என்று ராணி சீறினுள்.

சீறலுக்குப் பதில் சீறவேண்டும் என்று பாம்பு நினைத்தது. ஆனுல் முடியவில்லை. மண்ணுக்கு அடியில் வெப்பத்தால் நாக்கு வறண்டு விட்டது. "போய் விட்டு வந்து சொல்லுகிறேன்'' என்று பாம்பு புற்றை விட்டு வெளியேறிற்று.

வெளியே வந்த பிறகு பாம்பு அங்கும் இங்கும் பார்த்தது. ஈரத்தின் வாடையைக்கூட எங்கும் காணவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் சோர்ந்திருக்கும் தருணம் ஒரு நத்தை மெதுவாக ஊர்ந்து போவதைக் கண்டது. ஆனுல் நத்தை பாம்பைக் காணவில்லை. ஏனென்ருல் அதற்குக் கண்கள் இல்லை. எதையும் உணர்ந்துகொள்ளத்தான் முடியுமே அன்றிப் பார்க்க முடியாது.

"நீ யார் ? எங்கே போகிருய் ?'' என்று பாம்பு அதட்டிற்று.

"நான் தான் நத்தை. எங்கேயோ போகிறேன்.''

"குறிப்பில்லாமலா போகிருய் ?''

போகிற பாதை தெரியும் : ஆனால் போகிற இடந் தான் தெரியாது."

"அழகாகப் பேசுகிறாயே ! அது போகட்டும், முதுகில் என்ன மூட்டை ?"

"அதுதான் என் வீடு, வாசல், சொத்து, சுதந்திரம் எல்லாம்"

"எனக்கு எங்கே வீடு, வாசல், சொத்து, சுதந்தரம் எல்லாம் ?"

"உனக்கு இல்லையா ?"

"இருந்தால் கஷ்டப்படுவேனா ? பசிக்குமா ? படுத்துக் கொள்ள இடம் இல்லாமல் பரிதவிப்பேனா ? எல்லாருக்கும் பகையாகக் காட்சி அளிப்பேனா ? தண்ணீர்த் தாகத்தால் தத்தளிப்பேனா ?... இதெல்லாம் உனக்கு மட்டும் எப்படிக் கிடைத்தது ?"

"என் தாயார் கொடுத்தது."

"உன் தாயாருக்கு ?"

"அவள் தாயார் கொடுத்தது."

"அவளுக்கு அவள் தாயார் கொடுத்தது. இப்படியே நீளமாகக் கதை போகிறது—அப்படித்தானே ?"

"இருக்கலாம்."

"இருக்கலாம். இருக்காதா ? தாகத்திற்குத் தண்ணீர் இல்லை. பசிக்கு உணவு இல்லை. சம்பாதிக்க வழியும் இல்லை. படுக்க நிழல் இல்லை. நீ மாத்திரம் சொத்துச் சுதந்தரத்தை வைத்துக் கொண்டு சுகமாக இருந்து கொண்டிருந்தால் பாக்கிப் பேர் சும்மா விட்டுவிடுவார்களா ? உன்னைப்பற்றி மாத்திரம் நினைத்துக் கொண்டால் போதுமா ? உலகம் இருக்கிறது. நான் இருக்கிறேன். பசி, தாகம், கொடுமை எல்லாம் இருக்கின்றன."

"இருந்தால் என்ன செய்வாயாம் ?"

"என்ன செய்வேனென்று எனக்கே தெரியாது, பாரேன்" என்று பாம்பு சொல்லி முடிப்பதற்குள் நத்தை கூட்டுக்குள் ஒடுங்கிவிட்டது.

பாம்புக்குச் சிரிப்பாக வந்தது.

"நத்தை, நீ ஒரு முட்டாள்! உள்ளே போய் ஒளிந்து கொண்டால் என்னுல் ஒன்றும் செய்ய முடியாதென்று நினைக்கிருயா? புஸ் என்ருல் உன் வீடும் கீடும் நீயும் இருக்கும் இடமும் தெரியாது. ஓடி ஒளிவதிலே பிரயோஜனம் இல்லை. உன்னைப்போல உலகம் ஒன்று இருக்கிறது. அது சரியாக இருந்தால் நீ பிழைக்கலாம் என்பதை மறக்கக் கூடாது. மரியாதையாய் வெளியே வா."

பயந்துகொண்டே நத்தை வெளியே வந்தது.

"எனக்கு ஒரு காரியம் செய்தால் உன்னைச் சும்மா விட்டுவிடுகிறேன்" என்றது பாம்பு.

"முடிந்தால் செய்கிறேன்."

"எனக்குத் தாகமாக இருக்கிறது. போய்த் தண்ணீர் கொண்டுவா. இதே மாதிரி தாகத்துக்குத் தண்ணீர் கொண்டு வருவதுதான் உன் வேலை; தெரிந்ததா? அசதியாய் வரும்பொழுது கறையான் புற்றில் போய்ப் படுத்துக் கொள்ளுகிறேன். பசித்தால் காற்றைக் குடிக்கிறேன். பசி தீராவிட்டால் பட் என்று படத்தால் ஒரு போடு போட்டு விடுகிறேன். வேறு வழி? போ, தண்ணீர் கொண்டுவா" என்றது பாம்பு.

அது முதல் பாம்புக்கு நத்தை தண்ணீர் கொண்டு போகிறது.

# பட்டணம்

**ப**ட்டணத்திற்கும் கிராமத்திற்கும் என்ன வித்தியாசம் என்ருல். கிராமத்தில் நம்பிக்கை வளரும்; பட்டணத்தில் அவநம்பிக்கை வளரும் அவநம்பிக்கை என்ருல் எல்லாவற்றிலும்தான். கடவுளிடத்தில் மட்டும் என்றல்ல; கண்ணுக்குத் தெரிகிற பொருளுக்கெல்லாம் கண்ணுக்குத் தெரியாத பொருள்தான் காரணம் என்ற தத்துவத்தில் மட்டும் அல்ல; மனிதனிடத்திலும் அவநம்பிக்கைதான். மனிதர்கள் பசுத்தோல் போர்த்த சுயநல வேங்கைகளாகவோ, ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் காத்திருக்கும் கொக்குகளாகவோ காட்சி அளிக்கிருர்கள். இதை எல்லாம் பற்றி ஏன் நினைக்க வேண்டி இருக்கிறதென்ருல்...

நேற்று பஸ்ஸில் போய்க்கொண்டிருந்தேன். பஸ் ஒரு அலதியான உலகம். ஐயனுர் கோயிலில் அமர்ந்திருக்கும் மண் பொம்மைக் குதிரைகளைப்போல் அசைவு ஆட்டமின்றி அதில் சில பெரிய மனிதர்கள் உட்கார்ந்திருந்தார்கள். நவராத்திரி கொலு பொம்மைகளைப்போல் சில நவநாகரிக ஸ்திரீகள் உட்கார்ந்திருந்தார்கள். குளத்துத் தண்ணீரில் நிலவு விழுந்து மின்னுவது போலும். அஜந்தாக் குகை அழகிகள் வழி தவறி வந்து விட்டதுபோலும் சில சினிமா எக்ஸ்டிராக்கள் பஸ்ஸை அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள். சில தொழிலாளிகள் மட்டும் கூலியைப்பற்றி உரக்கப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனுல், பொதுவாக ஒரு சிறப்பு உண்டு. யாராவது வாயைத் திறந்தால் யாரையாவது விழுங்குவதற்காகத்தான் இருக்கும் என்ற திகில் பஸ் முழுவதும் நிறைந்திருந்தது. போதாக்குறைக்கு பஸ் வாசலில்

ஜேப்படி மாணிக்கமும், சக்கரத்தடியில் தென்திசைக் கோனும் ஒளிந்துகொண்டிருந்தார்கள்.

இவ்வளவு சம்பிரமங்களுக்கிடையில்தான் நான் பஸ்ஸில் உட்கார்ந்திருந்தேன். எனக்கு முன்னுல் ஒரு தொழிலாளி உட்கார்ந்திருந்தான். அங்கு வேறு பிரயாணிகள் இல்லை.

பஸ் கொஞ்சதூரம் போயிற்று. தெருவில், ஏதோ ஒரு பள்ளத்தில், பஸ் பதிந்து, டக்கென்ற சத்தத்துடன் நிமிர்ந்து எழுந்தது. வண்டியிலிருந்த பேர்களை எல்லாம் அது ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. எனக்கு முன்பு உட்கார்ந்திருந்த ஆளின் கையிலிருந்து ஏதோ சிதறி விழுந்தது. கண்ணுக்கு எதிர்த்தாப்போல் கீழே ஒரு அணு கிடந்தது.

நான் பார்த்தேன். அந்த ஆளும் பார்த்தான். குனிந்து பளிச்சென்று அதை அவன் எடுக்கவேண்டியதுதானே! திருடனைப்போல் அங்கும் இங்கும் பார்த்தான். கண்ணை மேலும் கீழும் உருட்டினுன். காசென்னவோ அவனுடையதுதான். விழுந்ததை நானேதான் பார்த்தேனே! காசைப் பளிச்சென்று எடுப்பதற்கு என்ன தடை? காற்றைப்போலும் தண்ணீரைப்போலும் காசும் பொது உடைமைதானே என்ற சந்தேகமோ?

பாத்திரத்திற்குள் அடைபட்டுக் கிடக்கும்போது காற்றும் தண்ணீரும் பாத்திரத்தின் உருவத்தைத் தானே அடைகின்றன? அந்தக் காரணத்தினுல்தானே அவை பாத்திரத்திற்குச் சொந்தமாகின்றன? அதைப் போலவே, ஒருவர் கையில் இருக்கும் வரைதான் காசு அவருக்குச் சொந்தமோ என்னவோ! கைநழுவிப் போய்விட்டால் உரிமை கோவிந்தா ஆகிவிடுகிறதோ என்னவோ! இல்லாவிட்டால் கெட்டுப்போன பணத்தைக் கண்டுபிடித்துக் கொடுப்பவருக்கு இனும் தருகி

றேன் என்று சிலர் விளம்பரம் செய்வானேன்? எனவே, தன் காசைக்கூட எடுக்கத் திருட்டு வேஷத்துடன் முயன்றது எனக்கு ஓரளவு விளங்காமல் போகவில்லை.

இப்படியே இரண்டொரு நிமிஷம் பார்த்துவிட்டு, யாரும் கவனிக்கவில்லை என்ற நினைப்புடன் காலால் காசைத் தன்னருகில் முதல் கட்டமாக இழுத்துக் கொண்டான். அடுத்த கட்டமாக அதைக் குனிந்து எடுத்துக்கொண்டான்.

மறுபடியும் பஸ்ஸில் தேடினான், தேடினான், அப்படி மௌனமாகத் தேடினான். அவனைக் கிண்டல் செய்ய வேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று.

'என்னப்பா தேடுகிறாய்?'

அவன் பதில் சொல்லவில்லை. காதில் விழவில்லை போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன்.

'என்னப்பா தேடுகிறாய்?' என்றேன் இரண்டாம் முறையாக.

அப்பொழுதும் பதில் இல்லை. ஒருவேளை செவிடாக இருக்கலாமோ என்ற சந்தேகம் வந்துவிட்டது. லேசாக அவன் தோள்பட்டையைத் தொட்டுவிட்டு, என் வலது கைவிரல்களை மடக்கிக்கொண்டு 'என்ன தேடுகிறாய்?' என்று பரத நாட்டிய முத்திரையைக் காட்டிக் கேட்டேன். அவன் மிரள மிரள விழித்தானே ஒழிய, வாய் திறக்கவில்லை. கண்ணாலே திருட்டுத்தனமாகத் தேட ஆரம்பித்தான்.

அதற்குள் பஸ் கண்டக்டர் யாருக்கோ பாக்கிச் சில்லறை கொடுப்பதற்காக அந்தப் பக்கம் வந்தார். இந்த ஆள் முகத்தைப் பார்த்தவுடனேயே, 'என்னய்யா தேடுகிறாய்?' என்றார்.

எனக்குத்தான் பதில் சொல்லவில்லை என்ருல், அவருக்கும் சொல்லவில்லை. சில்லறையை எண்ணி, பஸ் பிரயாணியிடம் கொடுத்துவிட்டுத் திரும்புகாலில் மறுமுறை ஒருதரம் அதே கேள்வியைக் கேட்டார். அப்பொழுதும் பதில் கிடைக்கவில்லை. அதற்குமேலும் அங்கு நிற்பதற்குப் பஸ் கண்டக்டருக்கு நேரமில்லை. செவிடு போலிருக்கிறது என்று சொல்லிக்கொண்டே போய்விட்டார்...

எனக்கு ஒரு புதுச் சந்தேகம் முளைத்தது. ஒருக்கால் ஆள் ஊமையோ என்னவோ! எத்தனை தரம், யார் கேட்ட போதிலும், இவரிடமிருந்து பதில் எப்படிக் கிடைக்கப் போகிறது?—என்று முடிவு செய்தேன். அடுத்தபடியாகப் பரத நாட்டிய முத்திரையோடு, பே, பே, பே' என்ற ஊமைகளின் பாஷையையும் கூட்டிக் கொண்டு ஜாடை செய்து பார்த்தேன். ஆள் மசியவில்லை. தன்னைக் கொள்ளை அடிக்க நான் முயல்வது போன்ற திகிலுடன் குளத்தில் தண்ணீர்ப் பாம்பு மறைவதுபோல் தன் இடத்தை விட்டு இறங்கிக் குனிந்து தேடிப் பார்த்தான்.

நானும் விடாமல் கவனித்தேன். இரண்டொரு நிமிஷத்திற்குள் மூலையில் உருண்டு கிடந்த ஒரு அரை ரூபாயை எடுத்துக்கொண்டு, எழுந்து என் பக்கம் திரும்பினுன். எனக்கு வெகு ஆச்சரியமாக இருந்தது.

'நான் செவிடும் இல்லை, ஊமையும் இல்லை' என்ருன் நிதானமாக.

'பின்னே?'

'இது விழுந்திருந்த இடம் தெரியவில்லை' என்று அரை ரூபாயை எனக்குக் காட்டினுன்.

'பதில் சொன்னுல் நான் எடுத்துக்கொண்டு விடுவேன் என்று பார்த்தாயா?'

'அப்படி இல்லே. தோலிருக்கச் சுளே விழுங்கி என்பாங்களே—'

'என்னே அந்த மாதிரி—'

'நீங்க ஊருக்குப் புதிசு போலிருக்கிறது! இதுக்குப் பேரு பட்ணமுங்க' என்று சொல்லிக்கொண்டே, பஸ் நின்ற இடத்தில் இறங்கிப் போய்விட்டான்.

இதுவா பட்ணம்?

# காதல்

அன்று எனக்கு வேலை இல்லை. கடலைப் பார்த்து வெகு நாளாகிவிட்டதே என்று தோன்றவும் புறப்பட்டேன். கிடைக்காத பொருளுக்காகப் பித்துப் பிடித்து ஏங்கிக் கரையோரம் வந்து மோதித் திரும்பும் கடலலை போன்ற வழக்கமான எண்ணங்கள்கூட அன்று நெஞ்சில் பொங்கவில்லை. மனம் சித்திரை மாதத்து ஆகாயம்போல் தெளிந்திருந்தது. மன திருந்த நிலையிலே வழி நெடுகிலும் தலைவிரித்தெழுந்த மாடமாளிகைகளோ குபேர பட்டணம் கொள்ளையோ, ஒரு பொருளாகத் தோன்றவில்லை. அவ்வளவு கும்பலான தெருக்களை எல்லாம் எப்படிக் கடந்தேன் என்று எனக்கே தெரியாது நாகரிகத்தின் சந்தை வாசலை விட்டு, அந்தப் பெரிய தோப்புக்குள் நுழைந்தபொழுதுதான் மனது தரை தட்டியது.

தோப்பின் இரு புறத்திலும் இரண்டு பெரிய பஞ்சாலி மரங்கள் பூத்திருந்தன. பச்சை என்பதே தெரியவில்லை. ஒரே வெறி பிடித்து, தீப்பற்றியது போல மரங்கள் பூத்திருந்தன. அவைகளுக் கப்பால் பேணுவாரற்ற பாதையும் சவுக்கையும் இதர மரங்களும் அடர்ந்திருந்தன. மாலை மணி மூன்று தான் என்றாலும், தோப்புக்குள் அந்தி கவிந்திருந்தது.

தோப்பை மிதித்ததும் கடலின் ஞாபகம் போய் விட்டது. சொந்த வீட்டுக்குத் திரும்பியது போன்ற ஒட்டு நெஞ்சில் படர்ந்தது. ஒரு மரத்தினடியில் உட்கார்ந்தேன். அமைதியான மனத்தில் அமுதமான நிறைவு புகுந்தது. இந்தப் பெருக்கில் எத்தனை நேரம் ஆழ்ந்திருந்தேன் என்று எனக்கே தெரியாது. பிறகு கண்

திறந்தபொழுது எதிரே இருந்த மருத மரம் கவனத்தைக் கவர்ந்தது. கட்டு விரியனைப்போல் செதில் செதிலாகத் தோல் போர்த்த அடிமரமும், கொய்யா மரத்தைப் போன்ற வழவழப்பான கிளைகளும் மினுமினுப்பும் எந்த இடத்திலும் கவனத்தைக் கலைக்காமல் விடாது. ஒரு விநாடிக்குப் பிறகுதான் என் கவனத்தை மருதமரம் மட்டும் ஈர்க்கவில்லை என்ற உண்மை தெரிந்தது. கிளையில் இரண்டு மணிப் புறாக்கள் உட்கார்ந்திருந்தன.

இதற்கு முன்பு மணிப் புறாக்களைப் பார்த்திருக்கிறேன். எங்கென்றால், வேடன் கையில். பெரிய மூங்கில் தட்டைத் தொம்பைகளில் பலவகைக் குருவிகளை அடைத்துக் காவடி கட்டித் தூக்கிக் கொண்டு கடைத் தெருவில் போகும் வேடனைப் பார்த்திருக்கிறேன். அவன் கையில் கொத்தாக வக்காவோ மணிப்புறாவோ இல்லாமல் இருக்காது. வக்காவைக் கண்டு மனம் நெகிழ்ந்ததில்லை. ஆனால், மணிப்புறாக் கொத்தைக் கண்டபொழுதெல்லாம் நெஞ்சு நீராகிவிடும். வக்காவை அழகில் சேர்க்க முடியாது. ஆனால், மணிப்புறா அப்படி அல்லவே! தோப்பிலிருந்து குமுறிக்கொண்டு வரும் அதன் குரலினிமை ஏதோ ஒரு உலகத்துக் கல்லவா படகாகி ஓடுகிறது! அதனால் தானோ?...

நான் அவைகளைக் கவனித்தேனே ஒழிய, அவைகள் என்னைக் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால் பறந்து போயிருக்கும். மணிப்புறாக்கள் காக்காய்களல்ல— கையைக் காட்டி ஓட்டினால்கூட அசைந்து கொடுத்து விட்டு, அதே இடத்தில் உட்கார்ந்திருக்க. கண்டால் பறந்துவிடும்—அவ்வளவு பயம்! நியாயம்தானே! வாழும் உரிமையை மறுப்பவர்களிடம் காதலா கொள்ள முடியும்?...

பழுப்பு வர்ணமான உடலில் கறுப்புப் புள்ளிகள். இறகுகளின் ஓரம் கறுப்பு வரி. கறுப்புக் கயிறு கழுத்

தில் கட்டியது போன்ற கோடு. கொஞ்சம் தட்டையான தலை நீண்ட உடல். குறுகிய கால்கள். எல்லாவற்றிற்கும் மேலாகக் கறுப்புப் பாசுமணியைப் போன்ற கண்கள். கண்களில் தான் என்ன நீரோட்டம்! அமைதிக்கும் அடக்கத்திற்கும் புகலிடமான கோயில்!

அடக்கமாக ஒன்றுக்கொன்றின் அருகில் உட்கார்ந்து அவைகள் சிறகைக் கோதிக் கொண்டிருந்தன. உடம்பைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு மூக்கு போதும் என்று நினைக்கும் முட்டாள்கள்! உடலின் ஒவ்வொரு பாகமாகக் கோதிக் கொண்டிருந்தன. சிறிது நேரத்திற்குள் ஒரு மணிப்புறு உடலைக் கோதுவதை நிறுத்திவிட்டுச் சிலிர்த்துக் கொண்டு, உடலை ஒரு தரம் சிலுப்பியது. சல்லி இறகுகள் பூப்போலக் காற்றில் மிதந்தன. மறு விநாடி அதன் உடல் பட்டுப்போல் அமர்ந்து விட்டது.

அதற்குப் பிறகு, ஏதோ நினைவு வந்ததுபோல் அருகிலிருந்த பிணையை அந்த மணிப்புறு நோக்கிற்று. காதலியின் அலங்காரம் முடிந்தபாடில்லை இன்னும் உடலைக் கோதிக் கொண்டிருந்தது. காதலியின் சிறகுகளைக் கோத ஆண் புறுவும் துவங்கிற்று. பெண் புறு தன் பாட்டில் மற்றொரு பக்கத்தைச் சீர்படுத்திக் கொண்டிருந்தது. உடல் செம்மையாகி விட்டதென்ற உணர்வெழுந்ததும் உடலைப் பெண் புறு சிலுப்பிக்கொண்டது. பஞ்சைப் போன்ற சல்லி இறகுகள் காற்றில் மிதந்தன. இரு மணிப்புறுக்களும் மணவறையில் அமர்ந்திருப்பது போல் கிளையின்மேல் அமரிக்கையாக உட்காந்திருந்த காட்சி தெவிட்டாத இன்பமாக இருந்தது. இன்பம் நீடிக்கக் கூடாது போலிருக்கிறது? ஏனெனில் அடுத்த விநாடி ஒரு மணிப்புறு என்னைப் பார்த்துவிட்டு விறுக்கென்று பறந்துபோய்விட்டது. இணை பறந்ததும் மற்றொன்றும் பறந்து விட்டது.

அதற்குமேல் என்னுல் தோப்பில் இருக்க முடிய வில்லை. தோப்பு சடமாகிவிட்டது. உயிர் பறந்துவிட்டது. கடலைப் பற்றிய நினைப்பும் கடலலையின் ஓசையும் மனத்தில் மோதிக் கொண்டு எழுந்தன. கடலை நோக்கிப் புறப்பட்டேன்.

மெரிஞவை வர்ணிக்க வேண்டியதில்லை. அது மோட்டார் கார் ராஜ்யம் ! ஜவுளிக் கடைக் கண்காட்சி : சிற்ப—ஓவிய—சினிமா ! கலாசாரத்தின் அலங்கோலம் ! அவற்றை எல்லாம் தாண்டிக் கடல் அலையை நோக்கி நேரே நடந்தேன். வழி நெடுகிலும் கிளிஞ்சல். கிளிஞ்சலைப் பொறுக்கினேன். ஒன்றைவிட மற்ருென்றின் வர்ணமும் நயமும் ஆசையைத் தூண்டின. சில கிளிஞ்சல்களைப் பொறுக்கி ஒரு இடத்தில் வைத்துவிட்டு, அலைகளண்டை சென்றேன். அலைகள் பரவித் திரும்பும் மணலில் கால்கள் பதிந்தன. மேய வந்த சிவப்பு நண்டுகள் காலடி ஓசையைக் கேட்டு நடுங்கி வளைகளுக்குள் புகுந்தன. சிறிது நேரம் அலைத் தண்ணீர் காலைக் கழுவ நின்றுவிட்டு, கிளிஞ்சலைப் பொறுக்கி வைத்திருந்த இடத்திற்குத் திரும்பினேன்.

கிளிஞ்சலைப் பொறுக்குவதென்று என்ன ஆசை ? இன்னும் குழந்தையா என்ன ? ஒருக்கால் மனத்திற்கு ஏதேனும் குருட்டு வேட்கை இருக்கிறதோ என்னவோ ! சம்பாதிப்பதும் செலவழிப்பதும் என்னும் சகடத்தில் சிக்கி, வேதனை என்னும் மிச்சத்தைச் சேமிக்காமல் நிலையான அழகையும் மெய்யையும் காணும் மர்மமான மோகம் இதுவோ என்னவோ ! கீழே கிளிஞ்சல் ! மேலே மேகங்கள் ! எதிரே கண்ணுடிச் சுவர்கள் சரிந்து விழுவது போன்ற அலைகள் ! விளையாட்டு என்பதுதான் உண்மையான வினையோ ?

இப்படி ஏதோ எண்ணிக் கொண்டிருக்கும்பொழுது, பக்கத்தில் பேச்சுக் குரல் கேட்டது. திரும்பிப் பார்த்

தேன். மேல்நாட்டு முறையில் உடை உடுத்தி இருந்த ஒரு இளைஞர் உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் பஞ்சாலி மரம் பளிச்சென்று எரிவது போல், ஒரு யுவதி சினிமாப் பாணியில் படுத்திருந்தாள். எல்லாமே சிவப்பு—உதடும் விரல் நுனிகளும் உள்பட !

'நாளைக்கே மாற்றிவிட வேண்டும்' என்று அழுத்தமாகக் கூறினாள் அந்த யுவதி.

'எதை ?' என்றது ஆண் குரல்.

கொஞ்ச நேரமாக அவர்கள் பேசிக்கொண்டு இருந்திருப்பார்கள் போல் தோன்றிற்று.

'அப்பொழுதே சொன்னேனே, கவனிக்கவில்லையா ? ஏன் கவனிக்கப் போகிறீர்கள் ?'

'கோபம் செய்யாதே !'

'இப்பொழுதாவது—அதோ பாருங்கள்.' பெண் சுட்டிக் காட்டிய திசையில் நாகரிகத் தம்பதிகள் போய்க் கொண்டிருந்தனர்.

'பார்த்தீர்களா ?'

'அடுத்த தெரு சுசீலா அசட்டுடன் போய்க்கொண் டிருக்கிறாள். பிற ஸ்திரீகளைப் பார்ப்பது ஒரு வேலையா ?'

'அந்த வேலையை நானில்லாதபோது செய்யலாம். அவள் வண்டியை மாற்றிப் புது வண்டி வாங்கிவிட்டாள்.'

'அவன் ஒரு அசடு. அந்த வண்டியை நமக்குப் பிறகுதானே வாங்கினான் ? அவள் உத்தரவிட்டதற்காக மாற்றிவிட்டான் என்று சொல்ல வருகிறாயா ?'

'இல்லை, இல்லை. அவர் ஒரு அசடு. நீங்கள் ஒரு....

'பைத்யங்கள் எதை வேண்டுமானாலும் செய்யும்' நாம் பைத்யங்களா ?'

'பின் என்னவாம்? நேற்று கிளப்பில் சுசீலாவின் பக்கத்தில் இருந்த கோடி வீட்டுக்காரி அவசர அவசர மாக நான் உட்கார்ந்திருந்த சோப்ாவுக்கு வந்தாள். பழக் கூடையை விற்கப் போகிருயாமே? என்று கேட்டாள். எனக்குப் புரியவில்லை. பழக் கூடை என்ருல் தெரியாதா—ஐந்தறைப் பெட்டி என்ருள். அப்பொழுது தான் நம்முடைய மோட்டாரைப் பற்றிக் குறிப்பிடுகிருள் என்பது பளிச்சிட்டது நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகவேண்டும் போலிருந்தது.

'உனக்கு ஹாஸ்யம் பிடிக்காது என்று அவளுக்குத் தெரிந்திருக்காது.'

'ஹாஸ்யமென்ருல் எனக்கு நன்ருய்த் தெரியும். கசப்பான உண்மையைத் தமாஷான சர்க்கரையில் புரட்டி எடுத்து மாத்திரையாக உருட்டிவிடுவது.'

'சரி போகட்டும்...அதற்காக?'

'நாளைக்கே வண்டியை மாற்றிவிட வேண்டும். கௌரவம் போன பிறகு இருந்தாலும் ஒன்றுதான், இல்லாவிட்டாலும் ஒன்றுதான்.'

'அதற்குப் பணம் வேண்டாமா?'

'இந்தத் தகர டப்பாவில் இனி நான் வரமாட்டேன். புதுக் கார் வாங்கிருல் சரி; இல்லாவிட்டால் மரவட்டை மாதிரி சுருட்டிக்கொண்டு வீட்டில் கிடக்கிறேன்.'

'இந்தக் கார் வாங்கி ஒன்பது மாதம்கூட ஆக வில்லையே? யாரோ ஏதோ சொன்ஞள் என்பதற்காக.'

யுவதி அதற்குமேல் பேசவில்லை. அதுவரை மணலில் படுத்திருந்தவள், எழுந்திருந்து கணவனுக்கு முதுகைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்தாள். அவள்

முகத்தருகில் போய்க் கணவன் ஏதோ சொல்ல முயன்ருன்.

என் காதில் அது ஒன்றும் விழவில்லை. மணிப்புரு வையும் கடற்காற்றையும் ஏற்ற என் மனக் கிளை, இப் பொழுது முறிந்துவிட்டது. மறுகணம் அந்த யுவதி விருட்டென்று எழுந்து ரஸ்தாவை நோக்கிக் கிளம்பி விட்டாள். அவள் போன வேகத்தைக் கோபம் என்று கடல் மணல் பதிவு செய்துகொண்டே போயிற்று. மணிப்புருக்களும் பறந்து சென்றன. இவர்களும் பறந்து விட்டனர். ஆனல்...

வீடு திரும்புவதற்காக வந்து பஸ்ஸில் ஏறினேன். மாறுபட்ட காட்சிகளைக் கண்டு முறிந்த மனக் கிளை, ஊசலாடிக் கொண்டிருந்தது. பஸ்ஸில் ஏறிய பிறகு அடுத்த நிற்கும் இடம் வந்தது. யாரோ ஏறினுர்கள். மறுபடியும் புறப்படும் சமயம். அரைச் சக்கரம் உருண்டு விட்டது.

'இரு இரு' என்று வண்டிக்குள் இருந்து பல குரல் கள் எழுந்தன. மோட்டார் ஓட்டி வண்டியை நிறுத்தி ஞன். யாரோ இருவர் வண்டி ஏறுவதற்காகத்தான் தாமதப்படுத்திஞர்கள் என்ற உண்மை, பக்கத்துச் சீட்டில் இருவர் வந்து உட்கார்ந்தபோதுதான் தெரிந் தது.

'மெதுவா, மெதுவா' என்றது ஆண்குரல் ஈனமான சுரத்தில். ஆளைப் பிடித்துக்கொண்டே ஒரு ஸ்திரீ தள் ளாடிக் கொண்டே வந்தாள். இருவரும் இடத்தில் அமர்ந்த பிறகுதான் கவனித்தேன்.

ஆண்பிள்ளைக்கு முப்பது வயதிருக்கலாம். எண் ணெய் காணுத கிராப். கொத்தவரைக்காய் போன்ற உடல். பழுப்படைந்த வேஷ்டி. அதெல்லாம் கூடப்

பெரிய விஷயமாகத் தோன்றவில்லை. அந்த முகம்! முகத்தில் முற்றிய நோயின் களை! பார்க்கவே பயமாக இருந்தது. நிமிஷத்திற்கு ஒரு தரம் முகத்தின் தசைநார்கள் ஏதோ வேதனையில் சுழித்து நெளிந்தன. என்ன கோளாறோ?

அடுத்தாற்போல் அந்த ஸ்திரீயைப் பார்த்தேன். யாருக்கு நோய் அதிகம் என்று சொல்லக்கூடவில்லை. சுரத்தின் களை சொட்டிக் கொண்டிருந்தது. இயற்கை தந்த வனப்பெல்லாம் வாழ்வின் வறண்ட காற்றில் உலர்ந்திருந்தது. 'மெதுவாக மெதுவாக' என்று கணவன் சொன்னதில் பிசகொன்றும் இல்லை.

இவர்களைக் கவனித்துக் கொண்டிருந்த பொழுதே கண்டக்டர் ஊதிவிட்டான். வண்டி நகர ஆரம்பித்தவுடன், அந்த ஸ்திரீ செய்ததுதான் எனக்கு வியப்பாக இருந்தது, கணவனுக்கு ஆதரவு தேவை என்ற நினைப்பில், தனது வலது கையால் கணவனை அரவணைத்துக் கொண்டாள். வண்டி அசைவதினால் அவனுக்கு வேதனை அதிகப்பட்டுவிடக் கூடாதல்லவா? 'மெதுவாக' என்று அவளுடைய நிலைக்குப் பரிந்துகொண்டு கணவன் சொல்லிவிட்டதனால் என்ன? சுவர் இருந்தால் தானே சித்திரம் மினுக்கும்? கணவனை அரவணைத்துக் கொண்டு நிமிஷத்திற்கொருதரம் அவள் பார்த்த பார்வையை என்னால் மறக்கவே முடியாது. முறிந்து ஊசலாடிக் கொண்டிருந்த மனது வெள்ளம் வடிந்த நாணலைப் போல் தலை தூக்கிற்று.

ஆஸ்பத்திரிக்கருகில், பஸ் நிற்கும் இடம் வரையில், அரவணைக்கும் கையை அவள் எடுக்கவே இல்லை. அந்த ஆதரவில் அவன் கண்ணை மூடிக்கொண்டே வந்தான். ஆனால், எனக்குமட்டும் ஒன்று தெரிந்தது. ஸ்திரீ மூச்சு விடும்போதெல்லாம் சூடான துர்நாற்றம் ஒன்று என்வரையில் எட்டிற்று. இவள் நோய்வாய்ப்பட்ட

தற்காகக் கணவன் இவளை அரவணைத்துக்கொண்டு வந்திருந்தாலும் பொருத்தமாகத்தான் இருந்திருக்கும். அப்பொழுதும் இதே மன நிறைவைக் கண்டிருப்பேன் !

ஆஸ்பத்திரியண்டை நிற்கும் இடம் வந்ததும் ஒருவர் கையை மற்றவர் பிடித்துக்கொண்டு, நிதானமாக இறங்கினார்கள். நான் அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

# அடுப்புக்கு எதிரில்

வெந்நீர் அடுப்பின் முன்னால் நான் உட்கார்ந்து கொண்டேன். விறகு புகைந்து வீட்டைத் தேர்தல் காலத்து நண்பர்களைப்போல் சூழ்ந்துகொண்டு வேதனை செய்கிறதே என்று விசிறியும் கையுமாக அடுப்பின் முன் போய் உட்கார்ந்தேன் என்பதைப் பற்றிச் சந்தேகம் இல்லை. ஆனால் ஏதோ இந்திரஜாலம் ஒன்று நடந்து விட்டது. என்ன நடந்ததென்று சொல்லத் தெரிய வில்லை.

கண்ணுக்கு எதிரே ஒரு செடி முளைத்தது. அது இரண்டு இலையாகி ஒளியின் வேகத்தில் கொழுகொம் பாகவும், மரமும் பூவும் பிஞ்சும் பழமுமாகச் சிலுப்பிக் கொண்டு பெரிய மரமாக வளர்ந்து விட்டது. பிறகு ஒரு மின்வெட்டு! ஒன்றுடன் ஒன்றாகப் பிணைந்த இரண்டு கிளைகள் என் கவனத்தை ஈர்த்தன. அதில் ஒன்று பட்டுப்போய்க் கொண்டிருந்தது. பலமாகக் காற்று அடித்தது. கிளைகள் ஒன்றோடொன்று உராய்ந் தன. முதலில் தீனமான பெருமூச்சு எழுந்தது. பிறகு ஒரு முனகல் தொடர்ந்து ஓய்ந்தது. அதற்குப் பின்பு புலம்பல் ஒன்று குமுறி அலைபாய்ந்தது.

“வாழ்வு பழுத்துப் போச்சு. காப்பு இற்றுப்போச்சு. ஒட்டம் ஒடுங்கிப் போச்சு. இனி கதை அவ்வளவுதான். பகலின் எழுச்சிக்குப் பிறகு இரவின் ஒடுக்கம். முதிர்ச் சிக்குப் பிறகு முறிவு” என்ற சொற்கள் காதில் விழுந் தன.

யாரையும் காணோமே என்று நினைத்துக் கொண் டேன். மாமரத்தின் அடிப்பாகத்தில் ஒரு கிழவியின்

தலை தெரிந்தது. தாமரைக் குளத்தைப்போல் கண்களில் நீர் துளும்பிக் கொண்டிருந்தது.

"ஏன் பாட்டி, வருத்தப்படுகிறாய் ?"

"ஐயோ தம்பி ! கதை முடிந்து போச்சு. நான் பூக்க மாட்டேன். காய்க்க மாட்டேன். நிழல தரமாட்டேன். பழம் தர மாட்டேன் குயிலுக்கும் கிளிக்கும் என்னிடம் வேலையில்லை மரங்கொத்திப் பறவை வந்து ஏணிமீது ஏறுவதுபோல் படிப்படியாக ஏறி மரப்பட்டையின் இடுக்கிலுள்ள புழுக்களைத் தேடும். நான் ஓய்ந்து விட்டேன். ஒடுங்கி விட்டேன் காய்ந்து விட்டேன்," என்று கிழவி குமுறினாள்.

"பாட்டி, இதற்காக வருத்தப்படுவானேன் ? பசட்டுடன் பிறருக்குக் காட்சி அளித்தால் தானா உபயோகம் ? பிள்ளைப்பூச்சியைப் போல் ஓடிக்கொண்டே இருந்தால் தான் சிறப்பா ? வாழ்வின் அறம்—"

வாக்கியத்தை நான் முடிக்க வில்லை. மறுபடி ஒரு மின்வெட்டு ! பிறகு கருந்திரை ! திரையைத் தள்ளியது யார் ?

கண் முன்னே ஒரு பெரிய மாளிகை தெரிந்தது மைய அறையில் நான் உட்கார்ந்துகொண்டு உத்தரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பெரிய உத்தரம். உத்தரத்தின் நடுவில் ஒரு சாளரம். சாளரத்தைத் திறந்து கொண்டு பழைய கிழவி முகத்தைக் காட்டினாள்.

"என்ன பாட்டி, இங்கே எப்பொழுது வந்தாய் ?" என்றேன்.

கிழவி சிரித்தாள். இங்கு வந்து நூறு வருஷம் இருக்கும். இந்த வீட்டுச் சுமையைத் தாங்கிக்கொண்டிருக்கிறேன். இந்தக் குடும்பச் சுமையை வீடு தாங்கிக்

கொண்டிருக்கிறது. இப்பொழுதுதான் ஒன்றை அறிந்து கொண்டிருக்கிறேன். வேலை செய்வதும் வேலை தான். வேலை செய்யாமல் இருப்பதும் வேலைதான். இது வேலையைவிடப் பெரிய வேலை. அந்தப் பெரிய வேலையை இப்பொழுது செய்து வருகிறேன். இங்கு வருபவர்கள் எல்லாம் என்னைப் பார்த்து என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா?''

''என்ன சொல்லுகிறார்கள்?''

''இந்த உத்தரம் இருக்கும்வரை இன்னும் எவ்வளவு மாடிகள் வேண்டுமானாலும் வைத்துக் கட்டலாம் என்கிறார்கள்.''

''அடங்கி ஆறிப்போன வைரமாச்சே நீ! வாய் திறவாமல் சும்மா சுமக்கப் பூமியைப் போல அன்பு வேண்டும். வெளியைப் போன்ற தெளிவு வேண்டும்.''

''முன்பெல்லாம் ஒவ்வொரு மூச்சையும் காரியத்தையும் நான் செய்வதாக நினைத்துச் சிலுப்பிக் கொண்டிருந்தேன். பழுப்பு இலைச் சேலையை உடுக்கக் கொடுத்தபொழுது ஐயோ என்று வருந்தினேன். ஆனால் இப்பொழுது புரிந்து கொண்டேன். குயிலும் கிளியும் குருவியும் உட்காருவதற்குப் பதிலாகக் குழந்தைகளும் பெண்களும் ஆண்களும் என் ஆதரவை நம்பி உட்காருகிறார்கள் எல்லாமே ஒரு விளையாட்டு, ஒரு வேலை என்பதை அறிந்து கொண்டு விட்டேன்'' என்றாள்.

மெய் வழி என்று குறுக்கிட்டேன். பாட்டி விடவில்லை.

''அதனால்தான் இப்பொழுதெல்லாம் கவலைப்படுவதே இல்லை. இப்பொழுதுகூடப் பார்! நேற்று இங்கே வந்தவர் ஒருவர் என்னைக் குச்சியால் தட்டிப் பார்த்துவிட்டு, 'உத்தரங்கூடச் சளைத்துப் போக ஆரம்பித்துவிட்டதே' என்றார். வீட்டுக்காரர் வந்து இரண்டோர்

இடங்களைக் கிள்ளிப் பார்த்தார். 'காலம் என்ற ஒன்று இல்லை என்று சிலர் சொல்கிறார்கள் ஆனால் உண்டு என்பதுதான் உண்மை. இந்த உத்தரம்போட்டு நூற்றிருபது வருஷமாச்சு. இந்த உத்தரத்தின் ஜாதகத்தைத் தந்தையார் ஒரு கணக்குப் புத்தகத்தில் எழுதி வைத்திருக்கிறார். ஒரே வேலையை எத்தனை நாள்தான் இந்த உத்தரம் செய்துகொண்டிருக்கும்? ஏதோ இருந்த வரையில் லாபம்' என்றார். உண்மைதானே? இப்பொழுதானாலும் எப்பொழுதோ ஆனாலும் எனக்கு ஒன்றுதான். உயிரின் சுமையை இறக்குவதென்பதே கிடையாது. உயிர் சுமையா என்ன? உன்னுடைய குழந்தையைத் தொலை தூரம் தூக்கிச் செல்ல வேண்டியபொழுது கை வலிக்கலாம். மனசு வலிக்குமா?" என்றாள்.

அநேக சமயங்களில், கேட்ட கேள்விக்கு நம்மால் சரியாகப் பதில் சொல்லக் கூடுவதில்லை சொன்னாலும் அவர்கள் புரிந்து கொள்வதில்லை; அல்லது தவறாகக் கொண்டு விடுகிறார்கள்.

இப்பொழுது கேட்ட கேள்விக்கு என்னால் விடை அளிக்க முடியவில்லை. திகைப்புடன் நின்றேன். வீடு மரம் ஒன்றையும் காணோம். அடுப்பு மட்டும் ஏழு வர்ணம் விளங்க எரிந்து கொண்டிருந்தது. நெருப்பின் நடுவில் கிழவியின் முகம் சட்டம் போட்ட படம் போலத் தெரிந்தது.

"என்ன பாட்டி, அதற்குள்ளாக—" என்று இழுத்தேன்.

"அதற்குள் என்ன வந்தது? உத்தரம் களைத்துப் போய் விட்டதென்று என்னை எடுத்துப் போட்டுவிட்டார்கள். எனக்கு வருத்தம் பிறக்கவில்லை. பிறகு கோடாலிக்காரன் வந்து என்னை விறகாக உடைத்து விட்டான். இப்பொழுது நான் இல்லாமல் சோறுவ

தில்லே. வெந்நீர் அறை புகைவதில்லே. வெந்நீர் அறையில் இந்தக் குழந்தைகள் அடிக்கும் கொட்டம் ரொம்பத் தமாஷாக இருக்கிறது. விளேயாட்டை எல்லாம் பார்த்தாகி விட்டது. இனிமேல் நானும் விளேயாட்டும் ஒன்ருகி விட்டோம். நான் என்பதில் உனக்குக் கிழவிதான் மிச்சம்.''

''ஆனல் உன்னேப் பார்க்க முடியாதா ?''

''கண் இல்லாவிட்டால் முடியாது. இருந்தால் காற்றில், நட்சத்திரத்தில், உங்கள் வீட்டுக் குழந்தையில், நாயில், பசுமாட்டில்—'' என்று கிழவி அடுக்கிக் கொண்டே போனுள்.

''அதிருக்கட்டும். இவ்வளவு நாளாகப் பழகி உன் பெயரைத் தெரிந்து கொள்ளவில்லேயே !'' என்றேன்.

''எனக்குப் பெயரா ?'' என்று கிழவி சிரித்தாள். சிரிப்பின் தசை வட்டம் கொஞ்சங் கொஞ்சமாக விரிந்து கிழவியை விழுங்கி விட்டது. கிழவியைக் காணவில்லே.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். எதிரே வெந்நீர் அடுப்பு, பிசாசுபோல் எரிந்து கொண்டிருந்தது. முழங்காலேக் கட்டிக் கொண்டு நான் எதிரிலே உட்கார்ந்திருந்தேன். ஆனுலும் என்னுல் நம்ப முடியவில்லே.

# அவரும் அவளும்

அவர்களுக்கு இடையே சண்டை இல்லாத நாளும் கிடையாது; சமாதானமில்லாத நேரமும் கிடையாது. இது எப்படி முடியும் என்ருல், குளத்தில் அலையும் அமைதியும் குடிகொண்டிருக்கவில்லையா ? அதே மாதிரிதான். ஆனால், ஒன்று. எனக்கு ஒளித்த ரகசியங்கள் அவர்களிடம் இல்லவே இல்லை, அதாவது சிருங்காரம் நீங்கலாக.

'அவர் சுத்த மோசம் ! வீட்டுக் காரியம் ஒன்றையும் கவனிக்கத் துப்புக் கிடையாது. ஈர விறகை வாங்கிக் கொண்டுவந்து போட்டுவிட்டு, புகை கண்ணை அவிக்கிறதே என்று என்னுடன் சண்டை போடுகிருர். எப்படி நியாயம் ? காய்ந்த விறகை வாங்கக் கூடாது என்று ஆணை இட்டிருக்கிறேனு ? அவர் கண்ணில் ஏற்றம் போட்டு இறை என்று புகையின் காதைக் கடித்திருக்கிறேனு ? தனி வீட்டை அமர்த்த முடியாமல் காலுக்கு விலங்கு போட்டு விட்டேனு ? ஒரு எழவும் தெரிகிறதில்லை. விறகுக் கடைக்காரன் ஏதோ கொடுத்தான். இவர் வாங்கிக்கொண்டு வந்துவிட்டார். அவ்வளவு தான். இவரைப் போலவே உலகமும் இருக்கிறதென்று நினைத்துக்கொண்டு ஏமாந்து விடுகிருர். இந்தக் காலத்தில் எச்சரிக்கையாக இல்லாவிட்டால் வந்தது மோசம். இது தெரியாமல் எதற்கெடுத்தாலும் என்மேல் பாய்கிருர்'—இது 'அவள்' குற்றச்சாட்டு.

'என்ன சொல்லுகிருள் அவள் ? மகா மோசம் ! எப்படி விறகு வாங்கிக்கொண்டு வந்தாலும், 'கண் டாக்டர் வீட்டுக்குப் புறப்படுங்கள்' என்கிருள. 'நேரே போய்

வாங்கிக்கொண்டு வாயேன்' என்றால் தனக்குக் கடைக்குப் போகத் தெரியாது என்கிறாள். ஏதாவது ஒரு தடவைக்கு இரண்டு தடவை சொல்லிவிட்டால் முகம் மரவட்டையைப் போல் சுருட்டிக்கொண்டு விடுகிறது. குளத்தில் கிடக்கும் எருமை மாடு மாதிரி, புத்தியில் அசைவே கிடையாது ஏதாவது ஒரு காரியம் தானாகச் செய்யக் கூடாது ? மகா மோசம்'—இது அவர் குற்றச் சாட்டு.

நான் தான் நீதிபதி.

இப்படிக் குற்றச்சாட்டும் எதிர்க் குற்றச்சாட்டும் இருந்துகொண்டே இருக்கும். ஒவ்வொருவர் சொல்லும் போதும் அதுதான் சரி என்று தோன்றும் ஆனால் நல்ல வேளையாக எனக்குத் தீர்ப்பு எழுத வேண்டிய தொல்லை கிடையாது. இருந்தாலும் என் மனத்தில் ஒரு கற்பனை ஓடும். வெட்டவெளியான மைதானத்தில் நிலவு பொழிவது இன்பமா ? அல்லது மரநிழல் கலந்த நிலவு தெருவில் தேங்கிக் கிடப்பது இன்பமா ?—என்ற கேள்வி எழும். விடைதான் தங்கத் தராசு முள் மாதிரி ஊசலாடிக் கொண்டிருக்கும்.

இப்படி ஊசலாடிக் கொண்டிருக்கும்பொழுது மாலையில் அவர் வந்து சேர்ந்தார்.

''அவள் செய்தது தெரியுமா ? சுத்த மோசம் !'' என்றார்.

'என்ன விஷயம் ?'

'நேற்றுக் காலை அவளுக்கு உடம்பு சரியாக இல்லை என்று சொன்னேன் அல்லவா ?'

'ஆமாம்.'

'அவள் என்ன செய்தாள் தெரியுமோ ?'

'தெரியாதே !'

'உங்களிடத்தில் பாடம் ஒப்புவிக்கவில்லையா? வாலை சுருட்டிக்கொண்டு இருக்கக்கூடாது? நான் ஆபீசுக்குப் போன பிறகு தாம்பரத்திற்குப் போய்விட்டுத் திரும்பியிருக்கிறாள். பிறந்ததே தொட்டுப் பழகின உடம்பாச்சே, அது 'தொட்டால் சுருங்கி' என்று தெரிய வேண்டாம்! வெயில், காற்று, மேகம், வாடை எதுவானாலும் வேண்டாத பெண்டாட்டியைப் போலத்தான்; எதுவும் குற்றம். நான் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்தபோது பார்த்தேன். ஆட்டிடையன் கம்பளியைப் போர்த்துக்கொண்டு இவள் படுத்துக் கிடந்தாள். தொட்டுப் பார்த்தால் 130 டிக்கிரி சுரம்.'

'130 டிக்ரி ஏதையா ?'

'ஏதோ ஏறத்தாழ இருக்கும்...அப்பொழுதுதான் தாம்பரத்துக்குப் போய்விட்டு வந்த கதையைச் சொன்னாள். இவளுடைய மாமா பேத்தியைப் போய் தாம்பரத்தில் பார்த்து வராவிட்டால், சூரியன் மலைவாயிலில் விழமாட்டேன் என்று சபதம் செய்துவிட்டானாம்! ராத்திரியில் என்ன செய்வது? காலையில் பார்த்துக் கொள்ளலாம் என்று சாப்பிட்டுவிட்டுப் படுக்கையைப் போட்டேன்.

'படுப்பதற்குமுன் அவள் உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். உச்சிப் பொழுது தார் ரோடுபோல இருந்தது. மூச்சோ, கோட்டை அடுப்பைப்போல இருந்தது. எதுவும் சரியாக இருக்கும் வரையில் சரிதான். தவறிப் போனால் தவறினதுதான். நீங்களும் நானும் என்ன செய்ய முடியும்?'

'என்ன செய்ய முடியும்? ஒன்றும் முடியாது என்று ஒத்து ஊதினேன்.

'கடவுள் ஒரு சுமைதாங்கி மாதிரி...அப்படி ஒன்றில்லாவிட்டால் உலகம் எப்படி இருக்கும் என்று கற்

பணை கூடப் பண்ண முடியவில்லை. பாரத்தை அவர் மேலே இறக்கிவிட்டுப் படுத்துக்கொண்டேன். தூக்கம் வந்தால் தானே ? எப்படியோ ராத்திரிப் பொழுது கழிந்தது.

'காலையில் அவளையும் அழைத்துக்கொண்டு பெரிய ஆஸ்பத்திரிக்குப் போனேன். ஒரு இடத்தில் பேரைப் பதிந்துகொண்டு இன்னொரு இடத்திற்குத் தள்ளிவிட்டார்கள். அந்த இடத்தில், இன்ன நம்பர் அறைக்குப் போ என்று நம்பர் எழுதிக் கொடுத்து மற்றொரு இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். கடைசியாக டாக்டரிடம் மருந்து எழுதி வாங்கிக்கொண்டு, மருந்து வாங்குகிற இடத்திற்கு வந்து சேர்ந்தோம். பெண்களுக்கு மருந்து கொடுக்கும் ஜன்னலண்டை பாட்டிலைக் கொடுக்கும்படி அவளிடம் சொன்னேன்.'

'சிவனே என்று ஆண்பிள்ளை ஜன்னலண்டை போய் நீங்க மருந்து வாங்கி இருக்கப்படாது ?' என்று ஒரு குறுக்கு ஏர் ஓட்டினேன் நான்.

'சர்க்கார் வேலையில் இருப்பவர்கள் எல்லாம் பிறருக்குச் சட்டம் சொல்வதில் புலி. 'ஏனய்யா, நீ பெண் பிள்ளையா?' என்று கேட்பானே என்று நினைத்துத்தான் இப்படிச் செய்தேன். ஆனால் இந்த ஆஸ்பத்திரி சமாசாரம் உமக்குத் தெரியுமா?' என்றார்.

'எனக்கொன்றும் தெரியாது. சும்மாதான் கேட்டேன். சொல்லும்' என்றதும் அவர் மேலே தொடர்ந்தார்.

'அங்கே ஒரே கும்பல், குளத்திலே கிடக்கும் கட்டையில் தவளைகள் ஒட்டிக்கொண்டிருக்குமே, அது மாதிரி இருந்தது. இவள் பாட்டிலைக் கொடுத்துவிட்டு நான் நிற்கும் இடத்திற்கு வந்துவிட்டாள். தன்னால் நிற்க முடியவில்லை என்று மருந்தை என்னை வாங்கி வரச்

சொன்னாள். பிறகு ஒரு பெஞ்சில் போய் உட்கார்ந்து கொண்டு விட்டாள். ஜன்னலண்டை போய் நானும் கும்பலுடன் நின்றேன். அரை மணி நேரம் காலை மாற்றிக்கொண்டு கொக்கைப்போல் தவம் செய்தேன்.

'மேருன்னிஸ்ஸா! மேருன்னிஸ்ஸா!' என்று ஒரு சீட்டையும் மருந்தையும் வைத்துக்கொண்டு கம்பவுண்டர் ஜன்னலுக்குள்ளிலிருந்து கூவினார். புர்க்கா அணிந்திருந்த ஒரு முஸ்லிம் ஸ்திரீ வந்து சேர்ந்தாள். சரியான பீப்பாய்! நான்தான் என்று கைநீட்டி மருந்தை வாங்கிக் கொண்டாள். பிறகு நகர்ந்து போகவேண்டியதுதானே? போகவில்லை. அதற்குப் பதிலாக பாட்டிலைப் பார்த்து விட்டு, கம்பவுண்டரைக் கூப்பிட்டாள். யாரும் வரவில்லை. கொஞ்சம் உரக்கக் கூப்பிட்டாள். அப்பொழுதும் யாரும் வரவில்லை. அவளுக்குக் கோபமே வந்து விட்டது. ஜன்னலைவிட்டுத் தள்ளி வந்து நின்று கொண்டு, உர்துவில் திட்ட ஆரம்பித்துவிட்டாள். 'சர்க்கார் சம்பளம் வாங்கிக்கிறவங்க, கார்க்கைத் திருட ஆரம்பிச்சுட்டாங்க' என்று திருப்பித் திருப்பிச் சொன்னாள். புண்ணில் துரும்பு பாய்ந்ததுபோல் இருந்ததோ என்னவோ! யாரோ ஒரு கம்பவுண்டர் ஜன்னலண்டை வந்து தலையைக் காட்டிக் கேட்டார் :

'என்னம்மா கத்தறே?''

'என் பாட்டில் கார்க்கு ?'

'கார்க்கா ? கொடுத்தீங்களா ?'

'நல்லாக் குடுத்தேன். நல்லாக் குடுத்தேன்' என்றாள்.

'பார்க்கிறேன்' என்று கம்பவுண்டர் உள்ளே மறைந்துவிட்டார்.

'என் சமாசாரம்தான் உங்களுக்குத் தெரியுமே ?'

'எனக்குத்தான் உங்களை நன்றாய்த் தெரியுமே' என்று நான் பேச்சைக் குறைக்கப் பார்த்தேன். அவர் விடவில்லை.

'இப்படி ஊழியர்கள் இருந்தால் தேசம் என்னுவது என்று யோசித்தேன். கார்க்கைத் திருடிச் சேகரித்து, கம்பவுண்டர்கள் பழைய சாமான் கடை வைக்க உத் தேசித்திருக்கிருர்களா? இல்லை என்ருல் கார்க்கு எங்கே போயிற்று? ஐந்தாறு கம்பவுண்டர்கள் இருக்கும் இடத் தில் தட்டுக்கிடல் ஏற்படுவது நியாயம். வேறு ஒரு மூடியோ கார்க்கோ பதிலுக்கு வந்திருக்க வேண்டாமா?'

'வந்திருக்க வேண்டியதுதான்.'

'ஆனுல், வரவில்லையே! இந்த சர்க்கார் சிப்பந்தி களுக்குச் சில பயிற்சிகள் நடத்தச் சர்க்கார் ஏற்பாடு செய்தாக வேண்டும். காரியாலயத்திற்கு வந்தவர்களை என்னவேணும் என்று உடனே கேட்கச்செய்யவேணும். ஏதேனும் கேட்டால் மேஜைக்குமேஜை போகச்சொல்லித் தட்டிக் கழிக்கக்கூடாது என்று சொல்லித் தரவேணும். மூன்ருவதாக, வந்த கடுதாசை இல்லை என்பதையோ கொடுத்த சாமானைத் திருப்பிக் கொடுக்காமல் இருப்ப தையோ கண்டு விட்டால், ஊழியர் கழுத்தை வெட்டி விட வேண்டும். எனவே...என்று என்னென்னவோ எண்ணமிட்டுக்கொண்டிருந்தேன். 'காமாட்சி!காமாட்சி!' என்று கம்பவுண்டர் கூப்பிட்டதைக் கேட்டுத் திடுக் கிட்டு ஜன்னலண்டை கையை நீட்டினேன்.

கம்பவுண்டர் பாட்டிலைக் கொடுத்தார். சீட்டைக் கொடுத்தார். அடுத்த விநாடி மறைந்துவிட்டார். பார்த்தால் பாட்டிலில் மூடி இல்லை. மேருன்னிஸ்ஸா கதை ஞாபகம் வந்துவிட்டது.

'பார்த்தீர்களா இவங்க சமாசாரம்?' என்ருள் பக்கத் திலிருந்த மேருன்னிஸ்ஸா.

'சார்! சார்!' என்று கூப்பிட்டேன். உள்ளே இருந்து எவ்விதப் பதிலையும் காணேம் ஆளையும் காணேம். அதன் பேரில் 'சார் சார்' என்று ஆறு

தடவை 'சரி கம பத நிச' வரிசையாக உச்ச ஸ்தாயிக்குப் போய்விட்டேன்.

''ஏன் அய்யா, சும்மா கத்துகிறுய்?' என்று அந்தக் கம்பவுண்டர் வந்து கேட்டார்.

'இந்த பாட்டில் மூடியைக் காணோமே, சார் ?'

'கொடுத்திருக்க மாட்டீர்.'

'இல்லே சார். இதே பாட்டைத்தான் இன்னொருவர் 'மேருன்னிஸ்ஸாவு'க்கும் பாடினுர். உள்ளே போய்ப் பாருங்கள்' என்றேன்.

கம்பவுண்டர் எங்கோ போய்விட்டு, 'காணோம் சார்' என்ருர்

எனக்குப் பற்றிக்கொண்டு விட்டது. 'இதற்காகத் தானு சார், ஜனங்களெல்லாம் வரிப் பணம் கொடுத்து சம்பளம்,கிராக்கிப்படி,வீட்டுப்படி, நகரப்படி, வைத்தியச் சலுகை, கல்விச் சலுகை, வருஷாந்தரச் சம்பள உயர்வு எல்லாம் உங்களுக்கு அழுகிறோம்' என்று ஒரு போடு போட்டேன். உண்மையிலேயே கம்பவுண்டர் பயந்து போய்விட்டார் போலிருக்கிறது. ஏனென்ருல், அடுத்த நிமிஷம் கம்பவுண்டர் அறைக்குள் 'ஸ்டெதஸ்கோப்' பைத் தொங்கப் போட்டுக்கொண்டிருந்த ஒரு டாக்டர் தென்பட்டார். வந்தவர் என்ன செய்தார் தெரியுமா?''

'எனக்கெப்படித் தெரியும் ?' என்றேன்.

'நீர் என்ன பெண்பிள்ளையா?' என்ற பெரிய கேள்வியைப் போட்டார்.

'இதுகூட உங்களுக்குத் தெரியவில்லையா ? பெண்பிள்ளைக்காக மருந்துவாங்குகிறேன். உங்கள் கம்பவுண்டர் கார்க்குச் சேமிப்பு வாரம் தொடங்கி இருக்கிருர்' என்றேன்.

'அந்தப் பக்கம் முதலில் வா அய்யா, கார்க்கு தருகிறேன்' என்ருர் டாக்டர்.

'இங்கு கொடுத்த கார்க்கை அங்கே வந்து வாங்கு வானேன் ?'

'நீர் உத்தரவுக்குக் கீழ்ப்படிய மாட்டீரோ ?'' என்று அதட்டினுர்.

கம்பவுண்டர் குற்றத்தை மறைப்பதற்காக என் குற்றத்தைச் சுட்டிக் காட்டியது எனக்குப் பொறுக்க வில்லை. அதற்காக நான் செய்த தவறை நீடிக்கவும் விரும்பவில்லை. டாக்டரைச் சும்மா விடவும் இஷ்டமில்லை. 'கார்க்கை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள், சார்!' என்று அப்பாலே நகர்ந்து போய்விட்டேன்.

என் மனைவி உட்கார்ந்திருந்த பெஞ்சண்டை வந்து 'கிளம்பு' என்றேன். 'மருந்து வாங்கியாகிவிட்டதா?' என்று கேட்டாள். பாட்டிலைக் காட்டினேன்.

'இந்தாருங்கள்' என்று இடுப்பிலிருந்து எடுத்து, பாட்டில் மூடியை என் முன்னே நீட்டினுள். எனக்கு எப்படி இருந்தது தெரியுமா ?'

'இத்தனை நாழியாக கார்க்குக்கு ரகளை பண்ணிக் கொண்டிருக்கிறேன். பார்த்துக்கொண்டே இருந்து விட்டு—'

'உள்ளே மூடியோடு கொடுத்தால் மூடி திரும்பி வராது என்று ஒருத்தி சொன்னுள். அதனுல் எடுத்து வைத்துக்கொண்டு பாட்டிலை மட்டும் கொடுத்தேன்.'

'இங்கே மூடி இருக்கிறது என்று ஒரு வார்த்தை சொல்லக் கூடாதோ ? ஒரு ஜாடைக் காட்டக் கூடாதோ ?'

'எனக்கு இங்கிலீஷா தெரியும் ? ஏதோ சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நினைத்தேன்.'

'களிமண் உன்னை விட்டுப் போகாது.'

'அதிருக்கட்டும். பாக்கிச் சண்டையை வீட்டில் போய்ப் போட்டுக்கொள்வோம். இது ஆஸ்பத்திரி,' என்று பொறுமையுடன் குத்திக் காட்டினுள்.

அவ்வளவுதான். ஊமைமாதிரி வீடு வந்து சேர்ந்தோம்.

'பாக்கிச் சண்டை?' என்று கிண்டி விட்டேன், நான்.

'அத்தனை நாழி ஜன்னலண்டை பேசுகிறேனே! என்ன என்று வந்து கேட்கத் துப்புக் கிடையாது' என்று ஆரம்பித்தேன்.

'நான்தான் களிமண். நீங்களாவது 'இந்தப் பாட்டில் மூடி எங்கே?' என்று ஒரு வார்த்தை கேட்டிருக்கக் கூடாதோ? நாளைக்கு ஒரு இங்கிலீஷ் அரிச்சுவடி ஞாபகமாக வாங்கிக்கொண்டு வந்து விடுங்கள்' என்று அமரிக்கையாகச் சொல்லிவிட்டுக் குளிக்கப் போய்விட்டாள்.

'சுத்த மோசம்! ஒரு மண்ணும் தெரிகிறதில்லை' என்று கதையை நிறுத்தினர்.

'மனைவியை மண்ணென்று சொன்னுல் உங்களை ஆகாயம் என்று சொல்லலாமா?' என்று கேட்டேன். நான் சொன்னதை அவர் புரிந்து கொண்டாரோ என்னவோ!

'பூமியும் ஆகாயமும் சேராவிட்டால் மழை ஏது? இடி ஏது?' என்றுதான் நான் கேட்டேன்.

# விளக்கு

மெழுகுவர்த்தி வரிசையை ஒவ்வொன்ருகக் கொளுத்தி வைத்தது போல, ஒவ்வொரு பாடகராக மல்ஹார் ராகத்தை ஆலாபனே செய்துகொண்டு வந்தனர். தர்பார் மண்டபத்தில் இசை வெள்ளத்தின் அலேகள் எழுவதும் விழுவதுமாக இருந்தன. உள்ளக் கடலில் சிற்றலேயாக எழுந்த நாத இன்பம் வரவரப் பேரலே யாகி, சபையில் உள்ளவர்களேப் பிரமிக்க வைத்துக் கொண்டிருந்தது. முதலில் பாடியவரைவிட என்ன தான் அடுத்தவர் பாடிவிட முடியும் என்று ரஸிகர் கள் சர்ச்சை செய்து கொண்டிருக்கும் பொழுதே இரண்டாவது அலே முதல்அலேயை விழுங்கிவிடுவது போலப் பாட்டின் தரம் ஏறிக்கொண்டே வந்தது. சபை யின் உற்சாகமும் கரைபுரண்டு கொண்டிருந்தது.

கடைசியாகப் பாட ஆரம்பித்தார் தான்சென். தான் சென் அரைப் பைத்தியம் என்று பெயர் வாங்கியவர். இரண்டு கால்களேயும் மண்டி இட்டுக்கொண்டு உட் கார்ந்த உடனே புலியைப்போல் இரண்டுதரம் உறு மினர். மலேக் குகையில் ஆண் புலி தரைக்கரு கில் வாயை வைத்துக்கொண்டு உறுமும் பொழுது எழும்அதிர்ச்சி திக்குகளேயும் காட்டையும் கலங்க வைப்பது போன்று ஓசை பரவிற்று. புலியும் இல்லே; ஒன்றும் இல்லே என்று சபையினருக்கு நன்ருகத் தெரிந்த போதிலும் தங்கள் குலே நடுக்கத்தைத் தடுக்க முடியவில்லே. மேதையின் சேஷ்டை என்ற எண்ணத் தையும் விலக்க முடியவில்லே உண்மையை அவர்கள் கண்டார்களா? அதுதான் அவருடைய குரு வணக்கம்! அந்த உறுமல் காரணமாகத்தான் இந்த இசை உலகத்

திலே அவர் புகும்படி நேர்ந்தது. அந்தச் சம்பவத்தை அவரால் எப்படி மறக்க முடியும் ?

தான்சென் சிறு பிள்ளையாக இருக்கும்பொழுது அவர்கள் குடும்பத்திற்கு ஒரு புன்செய்த் தோட்டம் சொந்தமாகஇருந்தது. வெகுசிரமப்பட்டுக் குடும்பத்தினர் அதில் பயிரேற்றி மரம் நட்டு வளர்த்து வந்தனர். ஆனால், அதனுடைய பயன் அவர்களுக்குக் கிட்டு வதில்லை. தோட்டம் ரஸ்தா ஓரமாக இருந்தபடியால், வழிப்போக்கர்கள் தோட்டத்தில் கை வைக்காமல் போவதே இல்லை.

தோட்டத்திற்குக் காவலாக இருக்கும்படி தான் செனை அவனுடைய தகப்பனார் நியமித்திருந்தார். சிறு பையனாக இருந்த போதிலும் தான்செனுக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. தோட்டத்திற்குள் செடி மறைவில் ஒளிந்துகொண்டு ஆண் புலியைப்போல் உறுமினான் கண்ணால் தோட்டத்தைப் பார்த்த வழிப் போக்கர்கள் காதில் புலியின் உறுமல் விழுந்ததும் அவர்களைப் பயம் கவ்விக்கொண்டது. தோட்டத்திற்குள் எங்கோ புலி இருக்கிறதென்று கருதினார்கள். நாளா வட்டத்தில் அந்தப் பாதை வழியே ஜனங்கள் செல்வதுகூட அருகி விட்டது.

ஒருநாள் இரண்டு சாதுக்கள் பாதை வழியே சென் றனர். அவர்களைக் கண்ட தான்சென் புலியைப்போல் உறுமினான். ஒரு சாது பிழைத்தேன் என்று ஓடிவிட் டார். சாது ஹரிதாஸ்மட்டிலும் தைரியமாகத் தோட் டத்திற்குள் நுழைந்து பார்த்தார். தான்சென் செடி மறைவில் ஒளிந்து கொண்டிருந்தான் ! சாது ஹரிதா ஸுக்குத் தான்செனுடைய திறமையில் அபார பற்று உண்டாயிற்று. எனவே, தனக்குத் தெரிந்த இசைக் கலையைப் பையனுக்கு அன்றுமுதல் புகட்டி வைக்க ஆரம்பித்தார். வெகு சீக்கிரத்தில் அவன் ஒப்பற்ற

இசை மேதையாகி விட்டான். மேதையாய்ப் போய் விட்ட பிறகும்கூட, தோட்டத்துக் காவல் வேலை ஒரு கதையாகப் போய்விட்ட பிறகும்கூட, தான்சென் பாட ஆரம்பிக்கும் பொழுதெல்லாம் புலியைப்போல் உறுமாமல் துவங்குவதில்லை. உறுமலே தான்செனின் குரு வணக்கம்! ஆனால், சபையினர் இந்த ரகசியத்தைக் கண்டார்களா?

மூன்றும் தரம் உறுமிவிட்டு, தான்சென் மல்ஹாரை யே பாட ஆரம்பித்தார். விளம்ப காலம்! தொடங்கிய சில நிமிஷங்களுக்குள் இவருக்கு முன்பு பாடியவர்கள் ஆலாபனை எல்லாம் சுத்தமாக மறந்துபோய்விட்டது. மண்டபத்தின் சம்கி வேலை செய்த விதானத்திலிருந்து தொங்கிய வெல்வெட் பாபட்டாக்கள் காற்றில் ஊசலாட வில்லை, பாட்டில் ஆடுகின்றன என்று ஒரு ரசிகர் தன் உணர்ச்சியை உருவகப் படுத்திக்கொண்டிருந்தார். கல் தூண் குதிரைகள் காதை நெறிக்குமா என்று மற்றொரு வர் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். இப்படியே ஒவ் வொருவரும் ஒவ்வொரு பிரமையுடன் தடுமாறிக் கொண் டிருந்தனர்.

விளம்ப காலம் துரித காலமாக மாறிற்று. நள்ளிர வில் புதை வாணங்களைக் கொளுத்தியது போல சாரீரம் விசும்பி எழுந்து. ஒலி மலர்களாக உதிர்ந்தது சீர் வாணங்களைப் போல் ஜாருக்கள் விரைந்து நெளிந்து சரிந்து விழுந்தன. பிர்காக்கள் அவுட் வாணத்தைப் போல் உணர்ச்சி பொதிந்த இன்னிசையைக் கொட்டின. மண்டபம் வானமாகிவிட்டது. ரசிகர்கள் தேவர்களாகி விட்டனர்.

சமயம் பார்த்துத் தான்சென் ஒரு விநாடி ஓய்ந்தார். யாரோ ஒருவர் அவரை நெருங்கி, 'தங்கள் காதலி வந்தி ருக்கிறார். அரண்மனைச் சேவகர்கள் உள்ளேவிட மறுக் கிறார்கள்' என்றார். 'யாரிடமாவது சொல்லி, எப்படியா

வது அழைத்து வந்துவிடு' என்று சொல்லிவிட்டு, தான்சென் சபையினரைப் பார்த்தார். அகல விரித்த ஆயிரம் கண்கள் அந்தரத்தில் நிற்கிறோமே என்று முறை இடுவது போலிருந்தது.

மல்ஹாரை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து பாடி முடித்தார். சபையினரின் கரைகடந்த இன்ப வெறி பெருத்த ஆரவாரமாக மாறிற்று.

அப்பொழுது ஒரு பாடகர் எழுந்து தலையைச் சிலுப்பிக் கொண்டார். அவர் கட்டியிருந்த சிகப்புத் தலைப்பாகை சண்டைக் கோழியின் கொண்டையைப் போலத் திகழ்ந்தது.

'கலைஞரே! மல்ஹார் ராகத்திற்குக் காந்தாரம் உண்டா? காகலி நிஷாதமும் கைசிக நிஷாதமும் உண்டா?' என்று வினவினார்.

இதற்குப் பிறகுதான் சபையிலிருந்த வித்வான்களுக்கெல்லாம் சுய உணர்வு திரும்பிற்று. கண் திறந்தது. 'ராகமோ மாறவில்லை. பாவமோ குன்றவில்லை. ஆனால், மரபுக்கு ஒவ்வாத ஸ்வரங்கள் மட்டும் எப்படிச் சேர்ந்தன? அப்படிச் சேர்ந்தும் ராகத்தின் தன்மையைக் குலைக்காமல் ஒன்றி ஏமாற்றிவிட்டனவே, என்ன விந்தை!' என்று இசை நுணுக்கப் புதிரை விடுவிக்க முயன்று கொண்டிருந்தனர்.

தான்சென் தனக்குத்தானே சிரித்துக்கொண்டே பதிலளித்தார்.

'மிதந்தாலும் மல்ஹார்தான். நிலைத்தாலும் மல்ஹார்தான். படுத்தாலும் மல்ஹார்தான். மாற்றம் தான் புதுமையின் பிறப்பிடம். விரிவுற்றுப் பரவுவதற்கான கால்வாய். இதற்குப் பெயர்தான் மியான்கி மல்ஹார்.'

'பெரியவர்கள் தடுக்கி விழுந்தால் கூட—' என்று மேலே வாதமிட முயன்ற வித்வானுக்கு, சபையினர் இடம் தரவில்லை. மூலைக்கொரு குரல் எழுந்து அவரை உட்கார்த்தி வைத்து விட்டது.

தான்சென் யாரையோ எதிர்பார்ப்பது போலக் கூட்டத்தில் கண்ணோட்டம் விட்டார். பக்கத்திலிருந்தவரையும் குறிப்பிட்டுப் பார்த்தார் 'தர்பாருக்கு வரும் படியான உடை இல்லை என்று திருப்பி அனுப்பிவிட்டார்களாம்' என்று அவர் தான்செனிடம் குசுகுசுத்தார்.

'திருப்பி அனுப்பி விட்டார்களா?' தான்சென் மனம் இருண்டது. கண்கள் இருண்டன. மண்டபம் இருண்டது. உட்கார்ந்திருந்தவர்கள் எல்லோரும் நிழலானார்கள். என்ன சொல்கிறோமென்று அவருக்கே தெரியவில்லை.

'திருப்பி அனுப்பி விட்டார்களா? இருட்டில் உடையை எப்படிப் பார்க்க முடியும்? இருட்டில் எப்படிப் பாட முடியும்? அரண்மனையில் கூடவா இருட்டு? இங்கு கூடவா கடமையில் வழுவல்? விளக்கை ஏற்றச் சொல்லுங்கள். இருட்டு தெரியாவிட்டால், கண்ணால் என்ன பயன்? விளக்கைப் போடட்டும்' என்று தான்சென் உறுமினார்.

சபையில் இருந்தவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. எப்படி விளங்கும்? மாலை வெயிலின் மஞ்சள் பாளம் மண்டபத்து வளைவுகளூடே புகுந்து சபையினருடன் இசையை மாந்திக்கொண்டு கண்ணெதிரே கிடக்கும்பொழுது தான்சென் சொல்வதற்காக இருட்டி விடுமா? விளக்கேற்றச் சொல்ல முடியுமா? அந்திக்கு முந்தி யார்தான் விளக்கேற்றுவார்கள்? பைத்தியத்தினுடைய வாடைக் காற்றோ என்ற ஐயமும் சபையினர் நெஞ்சில் எழுந்த போதிலும், இனமறியாத உண்மை

ஒன்று அவருடைய பேச்சில் ஒலித்தது போலவும் தோன்றிற்று. 'ஆனால், விளக்கை ஏற்ற மாட்டீர்களா? திரியைத் தூண்டி ஒளியைக் கட்டவிழ்த்து விடமாட்டீர்களா? மாட்டீர்களா? வேண்டாம். கொளுத்த வேண்டாம். நானே கொளுத்தி விடுகிறேன்' என்று கூறிக் கொண்டே, மறுமுறை தான்சென் உறுமினார்.

ஒரு விநாடி அமைதி வழிந்தது. மறு விநாடி தான்சென் முனகினார். பிறகு தொடர்ந்து பாட ஆரம்பித்து விட்டார். உலைக் கூடத்தின் அடியிலிருந்து துருத்தியின் காற்று உந்தித் தள்ளும் ஜ்வாலையின் கொழுந்துகள் முதலில் தலை காட்டின. தான்செனின் குரல் வரவர உருகிக் கம்பியாகி, மேல் எல்லையில் புகையாகி மருகிற்று. 'தீபக்' ராகமல்லவா உலவுகிறது? நெருப்பல்லவா எரிகிறது? ஒளி அல்லவா சுடர் விடுகிறது? உண்மையில் இங்கு இருட்டுத்தான். தான்செனுக்குப் பைத்தியமில்லை. இப்படி ஒரு தோற்றம் சபையினரைப் பற்றிக் கொண்டது.

ஆனால், தான்சென் இந்த உலகத்தில் இல்லை. தீப லோகத்தில் மிதந்து சென்று கொண்டிருந்தார். குரலா, மின்னலா என்றே தெரியவில்லை. பயங்கரமான இடியின் குமுறல் மண்டபத்தின் எதிரொலித்தது. மின்னல் வெட்டியது. மண்டபத்தில் தொங்கிக்கொண்டிருந்த லஸ்தர்களும் குளோபுகளும் திடீரென்று சுடர்விட்டெரிந்தன! தீபக் ராகம் விளக்குகளை ஏற்றிவிட்டது!

சபையினர் பிரமித்தனர், திகிலடைந்தனர். இருட்டில்லா விட்டால் சுடர்கள் முத்தைப்போல் எரியுமா? மண்டபம் இருட்டுத்தான். நாமும் நிழல்தான். தான்சென் தான் விளக்கு என்று ஒவ்வொருவர் மனத்திலும் தோன்றிற்று.

விளக்குகள் சுடர் விட்டு எரியத் தொடங்கிய உடனே தான்சென் மூர்ச்சையாகி விட்டார். முகம் கன்றிவிட்டது இந்த உண்மை நிலையை உணர்வதற்கே சபையினருக்குச் சில நிமிஷங்கள் ஆகிவிட்டன. பரபரப் படைந்த சிலர், தான்சென் முகத்தில் பன்னீரை வாரி இறைத்தனர்.

தான்சென் கண்களை மெதுவாகத் திறந்தார். ஆனால், கைகள் மட்டும் அவர் வயிற்றைப் பிடித்த படியே இருந்தன! கொடிய சூலை நோய் அவரைத் திருகிப் பிழிந்துகொண்டிருந்தது கன்னத்தின் கதுப்பு களும் முகமும் வேதனையின் அலைகளை ஏந்தித் தவித்தன.

சபையினருக்கு இந்த அனுபவம் புரியவில்லை. அரண்மனை வைத்தியர்கள் தான்செனின் நாடிகளைப் பிடித்துப் பார்த்தனர். நாடிகள் சரிபாகப் பேசவில்லை! நோயின் மூலமும் தென்படவில்லை! வைத்தியர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர். ஆனால், யார் முகத்திலும் தெளிவு தோன்றவில்லை. ஒரு வைத்தியர் மட்டும் தன் பையிலிருந்த கஸ்தூரியை எடுத்து வெற்றிலையில் தடவி, தான்செனிடம் நீட்டினார்.

நெருப்பில் நெய்யை விட்டால் அணையுமா?' என்று தான்சென் தணிந்த குரலில் வெட்டிக் கேட்டார்.

'எங்களுக்கு ஒன்றும் விளங்கவில்லையே!'

'இதற்கு மருந்து உங்களிடம் இல்லை. தீபக் ராகத் திற்கு மருந்து மேக மல்ஹார்தான். யாரேனும் மேக மல் ஹார் பாடுவார்களா?'

இசைப் புலவர் யாரும் வாயைத் திறக்கவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டார்கள்.

இரண்டு பேருக்குத்தான் மேக மல்ஹார் பாடத் தெரியும். ஒருவர் பாடும் நிலையில் இல்லை. மற்றொருத்

திக்குத் தெரியும். ஆனால், அவளை இங்கு வரமுடியாதபடி ஆசார வாசலிலேயே விரட்டி விட்டார்கள். இனி என்ன நடந்தால் என்ன?' என்று தான்சென் வருந்தினார்.

அதற்குள் ஆசார வாசல் சம்பவத்தைப் பற்றிச் சபையினர் அறிந்துகொண்டு விட்டனர். உடனே அரண்மனைச் சேவகர்கள் பல்லக்குடன் சென்று, அவளைத் தேடிப் பிடிக்க முயன்றனர்.

பாதையோரத்தில் ஒரு கிராமக் கிணற்றண்டை அவள் தண்ணீர் இழுத்துக் கொண்டிருந்தாள். அரண்மனைச் சேவகர்களைக் கண்டதும் அவளுக்குப் பயம் உண்டாகவில்லை.

'என்னை உள்ளே போகக் கூடாதென்று அரண்மனையில் சொன்னார்கள். திரும்பி வந்துவிட்டேனே! இன்னும் என்ன?'

'உங்கள் மேல் குற்றமில்லை. அவர் எங்கள் அறியாமையைச் சுட்டிக் காட்டினார். எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. தீபக் ராகத்தைத் தான்சென் பாடியபொழுது புரிந்து கொண்டோம். அதனால்—'

'தீபக் ராகத்தையா பாடினார்? தீபக்கையா? நானில்லாத போதா?' என்று புலம்பிக் கொண்டே, பல்லக்கில் ஏறி அமர்ந்து கொண்டாள்.

'ஓடு ஓடு ஓடு ஓடு! அது, கொள்ளிவாய்ப் பிசாசாயிற்றே! ஓடு! ஓடு!'

பல்லக்கு அரண்மனை வாயிலை அடைந்ததும், கருமுகிலைத் துரத்தும் பேய்க் காற்றைப்போல், அவள் தர்பார் மண்டபத்திற்குள் புகுந்தாள்.

மண்டபம் முழுவதும் வேதனைப்படும் முகங்கள்! இசை மேடையின்மேல் தான்சென் வெல்வெட் திண்டின்

மீது சாய்ந்து கொண்டிருந்தார். கண்கள் மூடி இருந் தன. கைகள் வயிற்றைப் பிடித்தபடியே இருந்தன.

'ஆ' என்று ஆரம்பித்தாள். மேக மல்ஹார் ராகம் இனிய காற்ருய், நீர்த் துளியாய், ஆவியாய், மேகமாய் மண்டபத்தைக் கப்பிக் கொண்டது. வேதனைப்பட்ட சபையோர்கள் முகத்தில் கூட ஒரு அசைவு கண்டது. மேக மல்ஹாரை அவள் பாடிக்கொண்டே இருந்தாள். திடீரென்று உண்மையாகவே மழை பொழியத் தொடங்கி விட்டது. மழையைக் கண்ட கூட்டம் திகைத்தது, பிரமித்தது, தான்சேனை நோக்கிற்று.

அவளும் பாடிக்கொண்டே, தான்சேனை நெருங் கிஞள். மேக மல்ஹார் மழையை வரவழைத்துவிட்டது. ஆஞல், தான்செனின் இமைகளைத் திறக்க முடிய வில்லை.

# செலாவணி

இது உண்மையாகவே நடந்தது. ஆனால் இதில் ஆச்சரியமென்னவென்றால் எங்கே, எப்பொழுது நடந்ததென்று எனக்கே தெரியவில்லை. இதற்குக் காரணம் அந்த உண்மையின் வலிமை என்றுதான் நினைக்கிறேன். சூரியனை நேருக்கு நேராகப் பார்த்தவர்கள் யார்? ஒன்று, கண் மூடிப்போகும்; அல்லது மயக்கம் உண்டாகிவிடும். அதைப் போலத்தான் இந்த உண்மை எனக்கொரு மயக்கத்தை அளித்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் எங்கே, எப்பொழுதென்பது மறந்து போகுமா?...

நான் எங்கே போய்க்கொண்டிருந்தேன். எதற்காகப் போனேன் என்பதும் தெரியவில்லை. போகாமல் இருப்பதற்கென்ன என்றால் நான் வந்த பாதை மறு நிமிஷமே கண்ணுக்குப் புலப்பட வில்லை—அழிந்து கொண்டே வந்தது. ஆகையால், திரும்பிப் போகிற பேச்சுக்கே இடமில்லாமல் போய்விட்டது. ஆனால் எனக்கு ஒரு ஆறுதல் இருந்தது. என்னைப்போல இன்னும் பலர் எனக்கு முன்னே சென்றுகொண்டிருந்தனர். அவர்களுக்கு ஆவது நமக்கும் ஆகட்டுமே என்று நினைத்துக்கொண்டே சென்றேன்.

கொஞ்ச தூரம் சென்ற பிறகு ஒவ்வொருவராகத் தேங்கி நிற்க ஆரம்பித்து விட்டார்கள். எட்டத்திலிருந்து பார்த்தால் பெரிய வியாபார ஸ்தலத்தைப் போன்ற சுறுசுறுப்பு அங்கு தென்பட்டது. மெதுவாக நானும் அங்கு சென்று விட்டேன். ஆனால் எனக்கு இன்ன விஷயம் என்று புரியாததால் சற்று நின்று பார்க்கலாமே என்று தோன்றிற்று.

முதலில் இங்கேன் இவர்கள் நிற்கிறுர்கள் என்பதைச் சோதனை செய்த பொழுது ஒரு கடை தென்பட்டது. பார்வைக்கு சாதாரணக் கடையைப் போலத்தான் இருந்தது. ஆனுல் கடையில் உட்கார்ந்திருந்தவரைப் பார்த்தால் அசாதாரணமாக இருந்தது. ஏனென்றுல் ஒரு சமயம் இரண்டு கண் இருப்பது போலவும் ஒரு சமயம் மூன்று கண் இருப்பது போலவும் தோன்றியது பெரிய அதிசயமாக இருந்தது. 'செலாவணி' என்று கடைக்குமேல் விலாசப் பலகை தொங்கிக் கொண்டிருந்தது.

கடை என்றுல் நாம் பணம் கொடுத்துச் சாமான்கள் வாங்கும் இடம் என்றல்லவா நினைக்கிறேம்? இங்கே அப்படி நடக்கவில்லை. 'கடைக்கார ஐயா! செலாவணி கொடுங்கள்' என்றுர் ஒருவர்.

'என்ன சரக்கு?' என்றுர் கடைக்காரர்.

'எங்கள் பாட்டனுர் லட்சாதிப் பிரபுவாக இருந்தார். பன்னிரண்டு கோயில் திருப்பணி நடத்திக் கும்பாபிஷேகம் செய்தார். ஒரு ஊருணிக்கு ஏற்பாடு செய்தார். அவருடைய முன்னேர்கள் சிற்பத்திலும், இசையிலும் இயலிலும் விற்பன்னர்களாக இருந்தார்கள். அவர்கள் திறமைதான் நாடெங்கிலும் இறைந்து கிடக்கிறது. குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமா?' என்று நிறுத்திஞர்.

'அதெல்லாம் குழிப் பிணத்துக்கு இழவு கொடுக்கிற சமாசாரம். இப்பொழுது சொல்லய்யா' என்றுர் கடைக்காரர்.

'என் தகப்பனுர் பெரும் புலவர். நம்முடைய இலக்கியத்தை எல்லாம் கரைத்துக் குடித்து அமுத மழையாக விரிவுரை கூறுவார்.'

'அதெல்லாம் சரி. உம்முடைய சமாசாரத்தைச் சொல்லும்'

'நானும் வியப்புரை கூறுகிறேன். பழஞ் செல்வத்தைப் பாதுகாத்து மெருகிட்டு வருகிறேன். இன்னும்—'

கடைக்காரர் அவரை முடிக்க விடவில்லை.

'உமக்குக் கண் பின்புறமிருக்கிறது. இங்கு செலாவணி இல்லை. வணக்கம்' என்றார் கடைக்காரர்.

அந்த மனிதர் 'இதென்ன அக்கிரமம்' என்று முணுமுணுத்துக்கொண்டே ஒரு பக்கமாக ஒதுங்கிவிட்டார்.

உடனே மற்றொருவர் கடைக்காரர் எதிரில் போய் நின்று செலாவணியைக் கோரினார்.

'என்ன சரக்கு?' என்றார் கடைக்காரர்.

அந்த மனிதர் புயல் வேகத்துடன் பதில் உரைத்தார்.

மனிதனுக்குத் தொடுவான் லட்சியம். மண்ணிலுள்ள மரத்திற்கு வானம் லட்சியம். நமக்கெல்லாம் லட்சியம் எதிர்காலம். பொற்கதவு அமைந்த இன்ப மாளிகையினின்று மிதந்து வரும் இன்னிசை காதில் விழவில்லையா? ஊக்கமும் உறுதியும் அளித்து உயிரை முன்னே இழுத்துச் செல்லும் காந்தக் குதிரையின் குளம்போசை காதில் விழவில்லையா? எதிர்காலமே வாழ்வு. விவரம் தேவையானால்—' என்றார்.

கடைக்காரர் பேச விடவில்லை.

'கடையைமண்ணில்தான்வைத்திருக்கிறேன்.வானவில்லை நம்பி இந்தக் கடையை நடத்தும் திறமை எனக்கில்லை. பூர்ணச் சந்திரன் கவிழ்த்து உருட்டிவிடும் அமுத வெள்ளத்தைப் போய்ப் பாரும். உமக்கு வேண்டியது கிடைக்கும்' என்று கடைக்காரர் அவரை விரட்டி விட்டார்.

'சுயநலக்காரத் துரோகி!' என்று வைதுகொண்டே இந்தப் பக்கமாக அவர் நகர்ந்துவிட்டார்.

பிறகு ஒரு சில நிமிஷம் யாரும் கடைக்காரரிடம் பேசவில்லை. நான் கூர்ந்து கவனித்த பிறகு தான் ஒரு ரகசியம் தெரிந்தது. அங்கிருந்தவர்கள் அத்தனை பேரும் முதல் ஆள் பக்கம் சிலரும், இரண்டாவது ஆள் பக்கம் சிலருமாகச் சேர்ந்துகொண்டு விட்டார்கள்.

ஒரு நிமிஷம் யோசித்தேன். நாம் போய் நின்றால் என்ன? நிற்கலாம். அவர் கேள்வி கேட்பாரே? கேட்கட்டுமே. கைக்கு வந்ததைச் செய்வதும் மனத்தில் படுவதைச் சொல்வதையும் தவிர வேறென்ன செய்யக் கிடக்கிறது?— இந்தமாதிரி தைரியத்தில் கடைக்காரர் முன்னே போய் நின்றேன்.

வழக்கம்போல் கடைக்காரர் கேள்வி கேட்டவுடனே நான் தலையையும் வயிற்றையும் தொட்டுக்காட்டிவிட்டு இரண்டு கைகளையும் நீட்டிக் காட்டினேன. பயித்தியம் என்ன உளறுமோ என்று பயந்துகொண்டு நின்றேன்.

'சபாஷ் மகாராஜா! கடையை நீயே எடுத்துக்கொள்' என்று கூறிக்கொண்டே கடைக்காரர் ஓடிவிட்டார்.

அவர் எங்கு ஓடினார் என்று எனக்குத் தெரியவில்லை! எங்கேனும் இருந்து பார்த்துக்கொண்டு தானிருப்பார்!

# ஒரு நாள்

'அப்பா! ஏந்திரு. மணி ஏழரை ஆச்சு.'

'என்னடி சனியன்! தூங்கவிடமாட்டேன்கறேள்?

'துப்பட்டியை இழுத்துப் போத்திக்கோ. நானு விட மாட்டேங்கறேன்? இந்தக் கடிகாரத்தைக் கேளு. அப் பறம் ஆபீசுக்கு நாழியாகிவிடும். சொல்லிப்பிட்டேன்.'

'சனியன்! சனியன்! சுருட்டு மெத்தையை...நன்னு யிருக்கு' மெத்தையும் தலைகாணியும், பஞ்சு பிதுங்கி விழறதே! ஒரு தையல் போடு இன்னு எத்தனை தரம் அடித்துக்கொண்டிருக்கிறேன்! ஒரு தையல் போட உங் களால் முடியவில்லை?'

'நூல் இருக்கு. ஊசி வாங்கிண்டுவான்னு எத்தனை தரம் சொல்லி இருக்கிறேன்?'

'என் மேலே திரும்பு—சண்டைக்கிடா மாதிரி. ஊசி வாங்கத் துப்புக் கிடையாது. பொழுதிருந்தால் நானே வாங்கித் தைத்துவிடுவேன். நான் படுகிற அவஸ்தை யிலே ஒன்றும் ஞாபகமிருப்பதில்லை.'

'நாளைக்குத் தெச்சு வச்சூடறேன் அப்பா.'

'ரொம்பச் சரி, ஏண்டி! பல்லுப்பொடி எங்கே?'

'பல்லுப்பொடி இல்லியே!'

'இந்த வீட்டில் என்னதான் இருக்கும்? எப்பவும் இல்லைப் பாட்டுத்தான். அரசமரத்தடிப் பிள்ளையாருக்கு இல்லை. சின்னமலை தகப்பன்சாமிக்கு இல்லை. கோயி லில் இல்லை. வயக்கரைத் தொந்தி வீரனுக்கும் இல்லை.

விஞ்ஞானியின் அணுவில் இல்லை. பேச்சில் இல்லை. பாட்டில் இல்லை. வார்த்தையில் இல்லை. ஆனால், அப் பாலுக்கப்பாலாய் முப்பாலுக்கும் அப்பாலாய்மட்டும் உண்டாம்! இருக்கட்டும், இருக்கட்டும். இங்குமட்டும் இல்லைப் பாட்டுத்தான். வாங்கிக்கொண்டு வரச் சொல்றதுதானே?'

'சொன்னேன். அதற்குப் பெரியவன் என்ன சொன் ஞன் தெரியுமா? பள்ளிக்கூடம் போகக்கூட வாடிக் கைக் கடை வீதி வழியே போறதில்லை இன்னுன். ஏண் டான்ஞல் மளிகைக் கடைச் செட்டியார், மாசத்துக்கு ஒங் களுக்கு மட்டும் அறுபது நாளா இன்னு கேக்கருராம். இவன் சாதுவோ இல்லியோ, அந்தப் பக்கம் போகப் பயப்படுகிருன். செட்டியார் கடையில், நூத்தி ஐம்ப தாக ஏறிப் போச்சு.'

'அப்பொ சரி...'

'செட்டியார் திருட்டுப் பயலாச்சே! இந்தப் பண மில்லாமல் அவன் கப்பல் கவிழ்ந்து போகிறதோ! வரு ஷத்துக்கு வருஷம் புது மோட்டார் மாற்றுவதில் குறை வில்லை. அவனுக்குச் சரக்குக் கொடுக்கிற வியாபாரி யைக் கேட்டால் செட்டியார் நாணயம் புரியும்!...'

'வேண்டாம், இரண்டணுக் காசுகொடுத்து வாங்கப் படாதோ?'

'காசில்லை. 13-ஆம் தேதி ஆயிடல்லியா? அந்தப் பக்கத்திலே குடி இருக்கிறவர்களைக் கேட்டேன் நகை பண்ணக் குடுத்தேன், கூலிக்குத் திண்டாட்டமாய் இருக்கு, முழி பிதுங்குகிறது இன்னுர்.'

'போறும், அழுகை. சாம்பல் இருக்கோ இல்லியோ?'

'பட்டணத்திலே பசுமாடு ஏது? எல்லாம் எமவாகனம் தானே! தப்பித் தவறி வரட்டி வாங்கி எரிச்சால் வீட்

டுக்கார அம்மா இடுப்பிலே கையை வச்சுண்டு வந்தூட ருள். சுண்ணும்படிச்சு ஒரு அமாவாசைகூட ஆகல் லியே, கரிஅடுப்பு வாங்கி வைத்துக்கொள்ளக் கூடாதா என்கிருள். அதிலேருந்து வரட்டி வாங்கறதில்லை'

'ரொம்ப நல்லதாப் போச்சு. காப்பிப் பொடி கொண்டா?'

'இப்பத்தான் காபிக்கொட்டை வறுத்திருக்கிறேன்.'

'காபி உண்டா?'

'பல் தேச்சு முடியறதுக்குள் ஆய்விடும்.'

'அவ்வளவு பெரிய யானைப் பல் முப்பத்தி இரண்டா எனக்கு இருக்கு—அவ்வளவு நாழியாக?'

'இதோ ஆயிடும். பல் தேய்ங்கோ—'

எதாலே தேய்த்தால் என்ன? செங்கல் பொடியைக் கண்டால் இளப்பமாக இருக்கிறது. ஆனுல், அவர்களுக் கெல்லாம் இதுதானே அந்தக் காலத்திலே பணம் சேத் துக் கொடுத்தது! ஒரு மூட்டை அரிசிக்கு மூணு பட்ணம் படி கல் பொடின்னு அரிசி மண்டி சாஸ்திரம். மூணு படிக்கு மூணு ரூபாய் லாபம், அப்புறம் மூட்டை லாபம் வேறே...இந்த மாதிரி ஆயிரம் ஆயிரம் மூட்டையில் ஒளிந்துகொண்டு ஆஸ்தி சேர்த்துக் கொடுத்த பொருள் எனக்கு இளப்பமாக இருந்தால், யார் பேரில் குற்றம்? சிறப்பு பொருளில் இருக்கிறது என்று சொல்வதைவிட அதை உபயோகிக்கும் விதத்தில் இருக்கிறது என்று சொல்வது உண்மை. அதைச் சொல்வானேன்? இந்தப் பல்பொடி காசு கொடுத்து வாங்கித் தேய்க்கிறேனே, அதிலே சலித்து எடுத்துக் கலந்த செங்கல் பொடி இல்லை என்ருவது நிச்சயமாகச் சொல்ல முடியுமா என்ருல் முடி யாது தான்! தில்லை வெளியிலே கலந்துவிட்டார் பின் னும் திரும்பியும் வருவாரோ? பாக்கி சாமானேடு ஒன்ற றக் கலந்துபோன சாமானைச் செங்கற்பொடி என்று எப்

படிச் சொல்லலாம்? வாஸ்தவம்தான். செங்கற்பொடி என்பதற்காகவா காசு கொடுத்து வாங்குகிறோம்? இல்லை இல்லை; பல் பொடி என்பதற்காக விலை கொடுக்கிறோம். ஆகையினால், ஒரு பொருளின் உண்மையான தன்மையைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அத்துடன் நமக்கு என்ன சம்பந்தம்? அதனுடைய தோற்றத்தைக் கண்டுதான் நாம் மதிப்பிட முடியும்? தோற்றம் என்பதும் பொய் என்று தெரிந்தால் மாத்திரம் என்ன பிரமாத வித்தியாசம் ஏற்பட்டுவிடுகிறது? நேற்று அந்த விஞ்ஞான நிபுணர் உதாரணம் சொன்னதைக் கேட்ட பிறகு, எனக்கு ஒரே குழப்பமாகப் போய்விட்டது. ஒரு டம்ளரில் தண்ணீர் இருக்கிறது. தண்ணீரின் மேல் மட்டத்தைப் பார்த்தால் அசைவற்றிருப்பது போல் தோன்றுகிறது. தோற்றத்தில் அமைதி! ஆனால், உண்மையில்—பூதக் கண்ணாடி கொண்டு பார்த்தால்—சமுத்திரத்தைப் போல் அலை பொங்க மேடும் பள்ளமுமாக இருக்கிறது! தோற்றத்தில் அமைதி. ஆனால், உண்மையில் ஓய்வற்ற சலனம்! தோற்றம் பொய்யா? அப்படியானால் உண்மையிலிருந்து பிறப்பது பொய்யா! அல்லது தோற்றமும் பொய், உண்மையும் பொய்...மாயை!...இருக்கலாம் பல் தேய்த்து வாய்கொப்பளித்தேனே, அந்தத் தண்ணீரில் வானவில்லின் ஏழு வர்ணமும் தெரிகிறது. வானவில்லாகவே தெரிகிறது; வானத்தில் பெரிதாகத் தெரிகிறது; கொப்பளித்து உமிழ்கிற தண்ணீரில சிறிதாகத் தெரிகிறது. என் வாய்க்குள் வானவில் இருக்கிறதென்று என்றால் நம்ப முடியாது. ஆனால், அப்படித்தான் இருக்குமோ என்று தோன்றுகிறது கங்காளத்தில் இருந்து எடுத்த தண்ணீர் தானே இது! கங்காளத்தில் இந்த வானவில் இருந்தால் தெரியவேண்டாமா? தெரியவில்லையே! நான் துப்பிய தண்ணீரில் மட்டும் தோன்றுவதால், இந்த ஏழு வர்ணமும் என்

னுள் இருக்கலாமோ? இந்த ஒளி தோற்றமோ? வர்ணங்கள் தான் உண்மையா ? தோற்றத்திற்கும் உண்மைக்கும் என்ன உறவு ? உண்மையும் தோற்றமும் ஒத்துப் போய்விட்டால் செங்கல் பொடி பல்பொடி ஆகிவிடுகிறது... பல்லேச் சுத்தம் செய்தாகிவிட்டது ஆடுமாடு பல் தேய்ப்பதில்லேயே ! அதற்காக அவைகளுக்கு எந்த வியாதியும் வரக் காணேமே! பல் டாக்டரோடு பேசினுல் ரொம்பப் பயங்கரமாக இருக்கிறது !...

'காபி போட்டு ஆறிப் போகிறது. இன்னும் பல் தேய்த்து முடிந்தபாடில்லே...'

இந்தப் பாழும் காப்பியினுலே எவ்வளவு தொல்லே ! இதை நிறுத்திவிட்டால் குறைந்தது 30 ரூபாயாவது மிச்சம். ஒவ்வொரு மாதம் கடன் வாங்குகிற பணமும் ஏறக்குறைய இவ்வளவுதான் ஆகிறது ! மனசு வச்சால் நிறுத்திவிடலாம். யார் வைக்க வேண்டாமென்ருர்கள் ? ஒருவருமில்லே. பாவம் ! இவர்களுக்காகப் பார்க்க வேண்டி இருக்கிறது ! பழயதுன்னு சொன்னுல் தாத்தா ஊருக்குப் பயணம் கட்டுகிறேன் என்கிருர்கள்...

'காபிக்குக் கொஞ்சம் சர்க்கரை போடு. போறும் போறும் இதென்னடி டிகாக்ஷன் சரியாக இல்லே போலிருக்கே ? காபிப் பொடியைக் குறைத்துப் போட்டுவிட்டியா ? செட்டுப் பிடிச்சியா ?'

'அதெல்லாம் ஒண்ணும் இல்லே. வழக்கம்போல கோபுரமாக இரண்டு கரண்டிதான் போட்டேன். அவசரமாக டிகாக்ஷன் இறங்கிவிட்டது. அதுக்குக்கூட உங்கள் ஆபீஸ் அவசரம் தெரிகிறதனுல் ஒவ்வொரு நாள் இப்படி ஆகிவிடுகிறது...'

'வரவர உனக்குக்கூடச் சலிப்பு ஏற்பட்டுப் போச்சு. நியாயந்தானே ! எழுந்திருக்கிறது, காபி வைப்பது,

குடிப்பது, சமைப்பது, எனக்குச் சோற்றைப் போட்டு ஆபீசுக்கு விரட்டுகிறது குழாய்த் தண்ணி நிற்பதற்குள்ளே துணிமணிகளைத் துவைக்கிறது, மத்யானம் படுத்துத் தூங்கப் பார்க்கிறது...வந்தால் தானே ! சந்தை இரைச்சலில் குடி இருந்து கெட்டேனே என்பது போல. அடுத்த வீட்டம்மா, எதிர்த்த வீட்டம்மா அவாள் அவாள் வீட்டு மூட்டையைக் கொண்டு வந்து போட்டு எல்லோருமா, பொதுவிலே வெளுக்கிறது ! மத்யானம் இவாளெல்லாம் டிபன் டிபன் என்று ரகளை ! உன்மேலே என்ன வஞ்சனை ? சாமர்த்யமாக மோருஞ் சாதத்தைப் போட்டு விரட்டறது. பிறகு இரண்டாந் தரம் காபி, சடை போட்டுக் கொள்வது, ராத்திரி சமையல்—எல்லாம் மிஷின் மாதிரி நீயே செய்யணும். மிஷின் என்றால் அலுப்பாகத்தான் இருக்கும். செய்கிற காரியத்தைத் திரும்பத் திரும்பச் செய்வதில் இன்பம் கண்டு பிடிக்கிறவர்கள் அறிவாளிகள் ஆகின்றனர் தேவராகக் கூட இருக்கின்றனர். இந்தச் சூரியனுக்கு அலுப்புச் சலிப்பு உண்டா? மேகம் வந்து ஒளியை வேண்டுமானால் மூடலாமே ஒழிய, அவனாக அலுப்பிலோ சலிப்பிலோ ஒளியைக் குடைபோல மடக்கிக் கொண்டதில்லை. சூரியன் மாதிரி வேலை செய்வதற்கு உலகத்திலே ஆளுண்டா ?...'

'என்னை வேலை வாங்கறத்திலே புலி என்று எனக்குத் தெரியும். இந்தச் சலவை நேற்று வாங்கிக்கொண்டு வந்தது. கயிறு கட்டினபடியே பெட்டி மேலே உட்கார்ந்திருக்கிறது பாருங்கோ. உள்ளே எடுத்து வைக்கிறதற்கு இவர்களுக்குத் துப்பு இல்லை. அதைப் பாருங்கோ...சாமா ! அந்தத் தெருவிலே இருந்து பேப்பர் வாங்கிக்கொண்டு வந்தாயோ இல்லியோ ?'

'நான் போனேன் அம்மா. அந்த மாமா மார்க்கெட்டுக்குப் போயிட்டார். மாமிக்குப் பேப்பர் வச்சிருக்கிற

இடம் தெரியல்லே. அவர் திரும்பி வந்த பிறகு வரச் சொன்னு !

'ஆமாண்டா, அவர் திரும்பி வருகிற வரையில் கடியாரம் நின்றுகொண்டிருக்க வேண்டும். மகாராஜா உத்தரவு !'...சனியன் பிழைப்பு ! கூட்டு வியாபாரமே மகா மோசம் ! வருகிற பேப்பரை ஒழுங்கா விற்றுக் கணக்கு வைத்துக் கொண்டால்—அதைச் சொல்ல முடியவில்லே. ஆனுல். அப்படி நான் நினைக்கிறேன் என்று அவன் நினைக்கிருனென்று எனக்குத் தெரியும் ! இந்த மனசென்று ஒன்று இருக்கிறதே ! ஆச்சர்யமான சாமான் ! ஒருவருடைய தயவும் இல்லாமல் உண்மையைக் கண்டு பிடித்துக் கொண்டு விடுகிறது ! நாளைக்கு நடக்கக் கூடியதை இன்றைய தினமே உணர்ந்து கொண்டு விடுகிறதே ! உலகத்தில் நடக்கும் எல்லா நிகழ்ச்சிகளும் யானைமாதிரிதான் யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே ! இந்த நிகழ்ச்சிகளை முன் கூட்டிச் சொல்லும் மனியோசை ஒன்று எப்படியோ இந்த மனசுக்கு எட்டி விடுகிறது. இந்தச் சக்திக்குப் பேர்தான் உணர்வோ ? பிராணிகளுக்கெல்லாம் அடிப்படையாதாரம், இந்த உணர்வுதான் ! ஆனுல், அறிவு இருக்கிறதே, அது முற்றிலும் வேறு வகை. எறும்பு மரத்தின் மேலுள்ள பழத்தை எட்ட வேண்டுமென்ருல் தரையிலிருந்து ஒவ்வொரு அங்குலமாக ஏறிப் போக வேண்டி இருக்கிறது. ஆனுல், கிளிக்கு அந்தப் பிரயாசை எல்லாம் இல்லே. கரையையோ, மரத்தையோ தொடாமல் நேரே பழத்தின் அருகில் பறந்து போய் உட்கார்ந்துவிட முடியும் ! அறிவு எறும்பைப்போல் ஊர்ந்து தான் செல்ல முடியும். ஆனுல், உணர்வு நேரே இலக்கைப் பிடிக்கிறது ! அந்த உணர்வுதான் கூட்டு வியாபாரமே உருப்படாது என்று மொண மொணத்துக் கொண்டே இருக்கிறது ! எல்லாம் சரிதான். தனியாகப் பேப்பர் வாங்குவதற்கு யோக்யதை வேண்டாமா ? எல்

லாம் தெரிந்து போய்விட்டது; பணம் பண்ணத்தான் தெரியவில்லை. அது தெரியாவிட்டால் அரை ஆறு தாண்டின கதைதான். அதனால் தான் வாழ்வு இப்படித் தத்தளிக்கிறது. மணி என்னடா! அந்தச் சலவையை எடு. முழு உருப்படியாக இருக்கிறதா அல்லது ஜன்னல் வைத்திருக்கிறான பார்ப்போம். ஒண்ணு, ரெண்டு...'

'ஏண்டா 15 உருப்படி போட்டிருக்கிறோம், பதினாறு இருக்கிறதே...'

'அதெப்படி இருக்கும்? துணி என்ன குட்டி போடுமா?...எங்கே ஒவ்வொன்றாய்க் காட்டுங்கோ சொல்கிறேன்.'

'சரி, இதோ!'

'பச்சைக்கரை வேஷ்டி...'

'சரி.'

'மூன்று ஷர்ட்டு, ஒரு புஷ்கோட்டு...'

'சரி.'

'சாரி மூணு...'

'சரி; அப்புறம் பிரிச்சுப் பார்க்கணும். குழம்புக்குத் தாளிச்சுக் கொட்டணும்'

'இந்தப் பயல்கள் டிராயர், ஷர்ட்டு...'

'சரி.'

'பாவாடைகள்...'

'சரி.'

'இதெல்லாம் என்ன?'

'பாடி.'

'இதென்ன சங்கிலிப் பூரான் மாதிரி இவ்வளவு இருக்கிறதே!'

'சங்கிலிப் பூரானுவது, மண்ணுங் கட்டியாவது! எல்லாத்தையும் கிழிச்சுத் தொலைச்சுவிட்டான். பின்னே குட்டி போடாதோ? ஓரணு வேணுமின்னுல் லாட்டிரியாக இருக்கிறது! இப்பொழுது யார் வாங்குகிறது? ஒருதரம் வாங்குகிறதற்குள்ளே ஒன்பது சண்டை ஆகிறது!'

'இந்தச் சலவைக்காரன்க சமாசாரமே இப்படித்தான். நான் பார்த்திருக்கிறேனே—பொட்டியா போடுகிருன்? பெரிய செங்கல்லை வைத்துக்கொண்டு தேய்க்கிருன்! திராபைத் துணி. குட்டி போடாமல் என்ன பண்ணும்?'

'இந்த எழவுக்குத்தான் வண்ணுனே 'வேண்டாம் என்று அடித்துக் கொள்கிறேன்.'

'வண்ணுன் வேண்டாமின்னுல் யார் தோய்க்கிறது?'

'நாம் தான்.'

'நீயும் பேஷாகத் தோய்த்துவிடுவாய்—நானும் தோய்த்து விடுவேன். கடியாரத்திற்குப் போட்டியா உனக்குச் சமையல், எனக்கு ஆபீஸ். நன்ருகச் செய்து விடுவோம்.'

'அவனைக் கண்டித்தாவது வைக்க வேண்டும். கூலியைப் பிடித்தால்தான் அவனுக்குப் புத்தி வரும்.'

'அவனுக்கு வருமோ, நமக்கு வருமோ! குழம்பைப் போய்ப் பார். அப்பறம் ஆபீஸ் கொம்பேறி மூக்கன் கிட்டப் போய்க் கெஞ்ச வேண்டும்.'

'நம்மைப் போலொத்தவர்களுக்குப் புத்தி இருக்கிறது. பிழைக்க யுக்திதான் தெரியவில்லை. நல்ல ஜன்மம்! நல்ல ஜன்மம்!'

'நாழியாச்சு. குளியுங்கோ. ஒரு வார்த்தை சல வைக் கம்பெனியிலே கேட்டுட்டு வரேனே ?'

'அப்புறம் அதைப் பார்க்கலாம். நாழி ஆச்சு. எட்டு மணிக்கு டாண்ணு முன் பக்கத்துக்காரர்கள் குளிக்கக் குழாய்க்கு வந்துவிடுவார்கள். அவா முகாம் கலைய 10 மணி ஆகிவிடும்.'

'ஏசுவைச் சிலுவையில் அடித்தாப்போல இருக் கிறது பிழைப்பு. காலிலே ஆணி அடித்திருக்கிறது. கையில் அடித்திருக்கிறது. தலையிலே முள் முடி. இதோடெ இன்ப லோகத்தில் பறக்கவேண்டும். மணி பார்த்து இரைதேட இறங்கவேண்டும். இப்படிக் காலத் துக்கு அடிமைப்பட்டு அடிமைப்பட்டு...ஹூம். வாளி எங்கே ? வாளி எங்கேடா ? நாழியாகிறது...'

'வாளியிலே ஓட்டை ! பொறுத்தமாகத்தான் இருக் கிறது...'

குளிக்கிற சமயத்திலே வேஷ்டி துவைக்க வேண்டு மென்று தோன்றுகிறது. முடியவில்லையே ! எவ்வளவு லாபம் ! துணிமணி கிழியாது. வண்ணான் கூலி மிச் சம். வண்ணான் சொரி வராது. இவ்வளவும் தெரிகிறது. செய்யத்தான் முடியவில்லை. எண்ணத்துக்கும் செயலுக் கும் இடையில் ஏழு காத தூரமிருக்கிறது. எனக்கு மட் டும் அல்ல, என்னைப்போல உள்ளவர்களுக்கெல்லாம் தான் ! பெரியவர்கள், ஞானிகள் என்கிறோமே, அவர் கள் மட்டும் இப்படி இல்லை. நினைத்ததைச் சொல்லி, செய்தும் விடுகிறார்கள். நினைப்பது, சொல்வது, செய் வது—இவைகளுக்கிடையே இடைவெளியே இல்லை. சூழ்நிலையில் வித்யாசம் இருக்கிறது. ஆனால், அவர்கள் சூழ்நிலையைப் பற்றிப் பொருட்படுத்துவதில்லை. நினைப்பு மனத்திற்குள் எழுகிறது சொல்வது ஆகாயத்தில் ஒலிப் படகாகிறது. செயல் பிற மனிதர்களுடனோ, பொரு

ளூடனே உண்டாகிறது. இதைத் தவிர இவை எல்லாம் சேர்ந்து ஒரே நிகழ்ச்சிதான், ஒரே இயக்கந்தான். இந்த ஒருமைப்பாட்டை அடைந்தவர்கள்தான் ஞானிகள், பெரியோர்கள் ஆகின்றனர். ஆனால், நமக்கு? போகட்டும். உலகத்திலே எல்லோரும் ஞானிகளாய் இருந்துவிட்டால் பிறகு ஞானிகள் என்று யார் யாரைச் சொல்ல முடியும்? ஒளிக்குப் பெருமை இருட்டு இருப்பதனால் தானே! வீட்டிலே பெரியவர்களுக்கு எப்படிப் பழக்கமோ அப்படித்தானே நமக்கும் பழக்கம் அமையும்! அதுவும் பாலியத்தில் இந்தப் பழக்கமெல்லாம் படிந்தால் தான் உண்டு. பையனாக இருந்தபொழுது வீட்டிலே இருந்த ஆண்பிள்ளை ஒருவர்கூட வேஷ்டி துவைத்து நான் பார்த்ததில்லை. பெரியவர்கள்தான் சுருதி! சுருதியை ஒட்டித்தானே பாட்டுக்குப் பெருமையும்?

அம்பலத்தில் ஆடுகின்றார்—
பாங்கிமாரே அவர்
ஆட்டம்கண்டு நாட்டம் கொண்டேன்—
பாங்கிமாரே......

'நீங்க குளிக்கறேளா, பாட்டுக் கச்சேரி பண்றேளா?'

'இதோ குளித்தாகி விட்டது. இலை போடல்லியா?'

'குழாயை விட்டுச் சமையல் கட்டுக்கு வந்தால் தெரிகிறது!'

'பாடவில்லை, பயப்படாதே! இந்தக் குரல் இருக்கிறதே, புண்யம் செய்திருந்தால்தான் தேன்மாதிரி இருக்கும். இல்லாவிட்டால் மசை இல்லாத கட்டை வண்டி அச்சோடெ கடையாணி பேசுவதுபோலத்தான் இருக்கும். இலை போட்டாகிவிட்டதோ இல்லையோ?'

'பருப்புத் தொகையல், பேஷ். மிளகுக் குழம்பு ரொம்ப பேஷ்...நல்ல சாப்பாட்டை ரசித்துச் சாப்பிடக்

கூடப் போவதில்லே. ஆபீசு அவசரத்துக்கா இந்தச் சமையல் பண்றது? லீவ் நாளாக இருந்தால் ஆற அமரச் சாப்பிடலாம்...'

'உங்களுக்கெல்லாம் தலேகீழ்தான். ஞாயிற்றுக் கிழமை இந்தச் சமையலா செய்கிறது?'

'ஏன், அதிலென்ன பிசகு?'

'பருப்புத் தொகையலும் மிளகுக் குழம்பும் நீங்கள் சொன்னேளே என்று வைப்பேன். சோதனையாக நாலு பேர் விருந்தாளி வருவா. இதைப் போட்டால் மெச்சிக் கொள்வார்கள்!'

'பிறத்தியார் மெச்சிக் கொள்ளாவிட்டால் என்ன மோசம்?'

'நூறு காரியத்திலே தொண்ணூறு காரியம் பிறத்தியார் மெச்சிக் கொள்வதற்காகத்தான். நூற்றில் தொண்ணூற்றி ஒன்பது பேர் செய்வது போலத்தான் நாமும் செய்ய வேண்டும்.'

இல்லாவிட்டால்?'

'பைத்யம் என்று முதுகுக்குப் பின்னுல் சொல்வார் கள்.'

சொல்லட்டுமே!'

உங்களோடே தர்க்கம் பண்ண நான் படிச்சா வச் சிருக்கேன்? நாழியாகிறது. அப்பறம் 8-45 பஸ் போய் விட்டால் அரை மணி காத்துக்கொண்டு இருக்க வேண் டும்...'

சாப்பிட்ட உடனே சற்று உட்கார வேண்டும் என்று வைத்ய சாஸ்திரம் சொல்லுகிறது. இராமலிங்க சுவாமிகள் நித்ய ஒழுக்க இயலில் இதைத்தான் சொல் கிருர். துறவிகளுக்கு வாழ்க்கையைப்பற்றி என்ன தெரிகிறது? ஐந்து நிமிஷம் இப்பொழுது உட்கார்ந்

தால், அப்புறம் அரை மணி அங்கே நிற்க வேண்டும். அதற்குப் பிறகு மானேஜரண்டை நிற்கவேண்டுமே! இந்த வேதனை எல்லாம் துறவிகளுக்கு என்ன தெரியும்? அடுக்காக வாழ்வை நடத்த விதிகள் அமைத்து விடுகிறார்கள்!

'சாமா! சட்டையைக் கொண்டா. டிபன் உண்டோ இல்லையோ? இல்லையா? சரி, சரி. சாப்பிட்டுவிட்டு ஜாக்ரதையாகப் பள்ளிக்கூடத்திற்குப் போய்விட்டு வா.'

'போறேன் அப்பா. வாத்யார் கோவிச்சுக்கிறார்.

'ஏண்டா?'

'இன்னும் புஸ்தகம் வாங்காமல் எத்தனை நாள் இருக்கப் போறெ என்று தினம் கேட்கிறார்.'

'அடுத்த வாரம் வாங்கித் தருகிறேன் என்று அப்பா சொன்னார் என்று சொல்லு. கண்ணைக் கசக்காதே; வாங்கித் தரேன். இப்பொழுது ஆபீசுக்கு நாழியாகி விட்டது...நீ ஜாக்ரதையாய்ப் போய்விட்டு வா.'

வியாதி ஒன்றுதான். ஆனால், அதற்குப் பல பெயர்கள். அதே மாதிரிதான் பிடுங்கல்கள் பல. காரணம் ஒன்றே. இந்த வியாதிக்கு - இந்தப் பிடுங்கலுக்கு - மருந்து யாரும் கண்டுபிடிக்கவில்லை. பிறக்காமல் இருக்க முயலவேண்டும் என்று வேதாந்தி சொல்வதும், புரட்சியைத் தோற்றுவிக்க வேண்டும் என்று தோழர்கள் கூறுவதும் ஒன்றுதான். இரண்டும் பருப்பை வேக வைக்காது.

'...ஆபீசுக்குப் போய்விட்டு வருகிறேன்...'

'எப்பொ வருவேள்?'

'கழுதையை வண்ணான் அவிழ்த்து விடுகிற பொழுது.'

'ரொம்பச் சரி.'...

இந்தக் கூட்டத்திற்கு ஓய்ச்சல் ஒழிவு கிடையாது போலிருக்கிறது. பத்து பஸ் கூடப் போட்டால் சர்க்காருக்கு என்னவோ தெரியவில்லை !

'இந்தப் பக்கம் வாங்க...முதல் கடைசி கூடவா தெரியவில்லை ?'

'தெரியுது.'

'தெரிஞ்சுதான் முன்னாலே போறீங்களா... இங்கே இருக்கிறவர்கள் ஒருத்தரும் பொட்டை இல்லை.'

'கோபிச்சுக்காதீங்க.'

'நானு கோவிச்சுக்கிறேன் ? திருட்டுத்தனமா வந்து...'

'சண்டை அப்பறம் போட்டுக் கொள்ளலாம்... ஏறுங்க வண்டியிலே.'

'அதென்னங்க அத்தனை பேரும் ஏறிட்டிங்க ? புட்போர்டு பிஞ்சு போயிடப் போவுதுங்க. இறங்குங்க, இறங்குங்க. சொன்னாக் கேளுங்க தயவு செய்து...'

நான் இறங்கி இருக்கக்கூடாது இறங்கினால்கூட அவன்கள்மாதிரி வண்டி புறப்பட்டவுடன் ஏறி இருக்க வேண்டும். இப்பொழுதுதான் வாழ்விலே தோல்விக்குக் காரணம் தெரிகிறது. காரியத்தை எப்படியானாலும் சாதித்துக் கொள்கிறது என்ற நினைப்பு வேண்டும். சொல்லுக்கும் சத்யத்திற்கும் பயந்து கொண்டால் அடுத்த பஸ்தான் கிடைக்கும். வாழ்வில் முன்னேறுவதற்கு முட்டுக்கட்டை என்ன என்பது விளங்கி விட்டது. எதற்கும் ஆசை வேண்டும். வெற்றி பெற்றே தீருவேன் என்ற தீவிரம் ! உண்மையில் மனத்தை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேனே ! உண்மையில் அதற்கு எதிலும் பிடிப்பு இல்லை. காவிரியிலே மிதக்கிற ஒடிந்த கிளைபோல வாழ்விலே போய்க்கொண்டே இருக்

கிறது. பிடிப்பில்லையே கலங்காமலாவது இருக்க வேண்டாமா? அதுதான் தெரியவில்லை. தான் சம்பந்தப்படாதது போலக் காரியத்தைச் செய்துவிடுகிறது. பகவத் கீதையில் இப்படித்தான் சொல்லி யிருக்கிறது என்று பெருமைப்பட்டுக் கொள்கிறது. பகவத் கீதையில் இப்படித்தானு சொல்லியிருக்கிறது? சந்தோஷம் வந்தால் குதிக்காதே என்று சொல்கிறது. நான் எங்கே குதிக்கிறேன்? துக்கம் வந்தால் குன்றிப் போகாதே என்று சொல்லி இருக்கிறது. வாஸ்தவம். அந்த வித்தை தான் தெரியவில்லை. நடுவு நிலை என்ற பக்குவம் ஒரே ஜன்மத்தில் வந்துவிடுமா? படிப்படியாகத்தான் இந்தத் தன்மை வரும்போலிருக்கிறது புல் பூண்டிலிருந்து மனிதனுவதற்கு எத்தனை லக்ஷம் வருஷமாகி இருக்கிறது? ஓரறிவு ஆறறிவாகி, ஏழாம் நிலையாகிய ஜீவன் முக்தி பெற...

'பஸ் வருது சார். இப்பொழுதே நாழியாகிவிட்டது'

அப்பாடா! இன்றைக்குப் பஸ்ஸைப் பிடித்தாகி விட்டது. திரும்பி வரும்பொழுது அரை மணி முந்திப் பிந்தி ஆனல் கூடப் பரவா இல்லை காரியாலயத்துக்குக் கிளம்புகிற நேரத்தில்தான் பஸ் நிற்கும் இடத்தில் நின்றுகொண்டிருக்கப் பிடிக்கவில்லையே ஒழிய சாயங்கால வேளையில் நிற்பதில் அவ்வளவு ஆக்ஷேபம் கிடையாது. ஏனென்ருல், அங்கே நின்று கொண்டிருக்கிறேம்! பிற ஸ்திரீகளைப் பார்க்கக் கூடாதென்று நெறி இயல் கூறுகிறது. ஆனல் உடலில் ஒரு உணர்வு இருக்கிறது. அது நமக்கு அடங்கினதல்ல. அது தானுக இயங்கும் தன்மையுள்ளது. அதற்கு இயற்கை விதித்துள்ள கட்டளை அது. வேண்டுமானல், கண்ணிமைப்பதை மூன்று நிமிஷம் நிறுத்தி வைக்கலாம். அதே யாதிரி பல வேலைகளை இயற்கை உடலின் பல பகுதிகளுக்கு விதித்திருக்கிறது. ஆனல், இவ்வளவு கடமைகளும்

அந்த உடலில் இருக்கும் உயிரைக் காப்பாற்றுவதற் காக. இந்த உடம்பிற்குள் இயற்கை அடைத்து வைத் திருக்கும் கருவிகளையும் சக்திகளையும் உணர்வுகளையும் ஒரு விநாடி ஆழ்ந்து சிந்தித்தாலே ஞானம் வந்துவிடும். தெரியாமலா திருமூலர், 'ஊனுடம்பாலயம் உள்ளம் திருக்கோயில்' என்ருர்? உயிரைச் சுற்றிலும் விரோதி கள் இருக்கிருர்கள். அதைக் கண்டுபிடித்து எச்சரிக்கை செய்வதே ஓர் உணர்வின் வேலை. கடமையைச் செய்ய அந்த உணர்வு ஏதாவது ஒரு புலனைத் தோழமை பூணுமல் இருக்கமுடியாது. எனவே, சுற்றிலும் உள்ள வர்ணங்களைக் கவனிக்க வேண்டியது இக் கண்ணின் கடமையாகிறது. எதிரி எந்த வர்ணத்தின் மறைவில் வருகிருன் என்று கவனிக்க வேண்டாமா? முழு வெள்ளை முழுக் காக்கி—இதெல்லாம் பெரிதாகப்படுவ தில்லை. பச்சை சிவப்பு இருக்கின்றனவே! நம்மையும் மீறிக் கண்கள் அவைகளைப் பார்க்கத் துவங்கிவிடு கின்றன. நம்மால் தடுக்க முடிவதில்லையே! பஸ் ஸ்டாப்பில் பச்சையும் சிவப்பையும் பார்ப்பதில் பொழுது போய்விடுகிறது. இல்லாவிட்டால் வெற்றிலை பாக்குக் கடையில் தொங்கவிட்டிருக்கும் பத்திரிகைகளையும் படங்களையும் பார்த்துக்கொண்டே இருந்துவிடலாம்! அடாடா! எவ்வளவு ரஸமான படங்கள். இல்லா விட்டால் எவ்வளவு இனிய தலைப்புகள் தென்படு கின்றன! 'மிராசுதாரின் மன்மத லீலைகள்', 'சரசாவின் சரசங்கள்.' இந்தப் பத்திரிகை ஆசிரியர்களைப்போல் தர்மத்தை ஸ்தாபிப்பதில் கவலை கொண்டவர்கள் பிறந்ததே இல்லை...

'ஆச்சா! ரைட்.'

'இப்படி வாங்கோ.'

'அடாடா, நீங்களா? இதோ வரேன் என்ன சௌக் கியந்தானே?'

'சௌக்யம்தான்.'

'ரொம்ப நாளாச்சுது பார்த்து.'

'பட்டணக்கரைக்கு வந்துவிட்டால் வயிற்றைப் பார்க்கத்தான் போதிருக்கிறதே ஒழிய, சிநேகிதர்களைப் பார்க்கவோ, நல்லது பொல்லாததைக் கவனிக்கவோ பொழுதிருப்பதில்லை. நான் சொல்வது சரிதானே ?'

'நூற்றுக்கு நூறு சரி.'

'அதோட, இந்த சின்னப் பயலுக்கு உடம்பு சரியில்லை.'

'என்ன உடம்பு ?'

'அதுதான் தெரியவில்லை.'

'டாக்டரிடத்தில் காட்டுவதுதானே ?'

'காட்டினேன். உலகத்திலே இப்பொழுது அறிவு வளர்ந்திருக்கிறதா, பிழைக்கிற தந்திரம் வளர்ந்திருக்கிறதா என்ற சந்தேகம்தான் வருகிறது. அவர் ஒரு வாரம் மருந்து கொடுத்துவிட்டு, இவன் ரத்தத்தைப் பரிசோதித்துக் கொண்டு வாருங்கள் என்று ஒரு விலாசத்தை எழுதிக் கொடுத்தார்.'

'அப்புறம் ?'

'அது ஆகிவிட்டது ரத்தத்தில் ஒன்றுமில்லை.'

'அப்புறம் ?'

'எக்ஸ்ரே பிடித்தால் நலமென்றார்.'

'பிடித்தீர்களா ?'

'பிடித்தேன். அதிலும் ஒன்றும் தெரியவில்லை.'

'பிறகு ?'

'இதோடு நூற்றி ஐம்பது ரூபாயாகி விட்டது. நாட்டு வைத்யரிடம் போய்க் கொண்டிருக்கிறேன்.

இதுவே நல்லது என்று தோன்றுகிறது. பணச் செலவாவது குறைகிறது.'

'அதுவரையில் லாபந்தானே ?

'லாபமாவது மண்ணாங் கட்டியாவது! எட்டுப் பேரிடத்திலே இருந்து இந்தப் பணம் கடன் வாங்கி இருக்கிறேன். பெரிய பெண்ணுக்குக் காதில் சதா சீழ் வடிந்துகொண்டிருக்கிறது. பால்ய பார்சவாயுவு வந்தவனைத்தான் உங்களுக்குத் தெரியும். குளிக்கவில்லை என்று இவள் வேறு பயமுறுத்திக் கொண்டிருக்கிறாள்.'

'பின்னே சௌக்கியந்தான் என்றீர்களே ?'

'சௌக்கியம், அசௌக்கியம் எல்லாம் ஏறத்தாழச் சொல்வதுதானே! நம்மைவிட மோசமாக உலகத்தில் தவிக்கிறார்களே !'

'அந்த வேதாந்தம் எனக்குப் பிடிபடவில்லை. எனக்கு விரல்சுற்றி தாங்கவில்லை என்றால், அவன் நொண்டியாக இருக்கிறானே என்பது சமாதானமாகுமா? என்னவோ, வாழ்வு பெருந் தொல்லையாகப் போய் விட்டது.'

'ஒன்றும் கவலைப்பட வேண்டாம். புரட்சி உருவாகிக் கொண்டு வருகிறது.'

'வரட்டும், வரட்டும்.'

'இதிருக்கட்டும். ஒரு எட்டணா இருந்தால் கொடுங்களேன்.'

அதான் இருக்கிறது''

'அப்பொழுது வேண்டாம் '

'இல்லை, இல்லை. பரவாயில்லை. இதோ.'

'அப்புறம் உங்களுக்கு ?'

'நான் பார்த்துக் கொள்கிறேன்.'

'இங்கே இறங்குகிறேன்.'

'சரி...'

எட்டணு இருந்தது போய்விட்டது, உண்மையில், வாழ்வில் தோல்விக்குக் காரணம் — சுயநலமின்மை தான்.

மத்யானம் சிற்றுண்டி சாப்பிட இன்னொருவரிடம் கடன் வாங்கித்தான் ஆகவேண்டும். இந்தக் கை தாழும் படி விடக்கூடாதென்று மனசுக்குத் தெரியவில்லையே! சுயநலமே நினைப்பாயிருந்தால் இந்தக் கை எடுத்துக் கொடுக்குமா? இல்லையே என்று சொல்ல வாய் பயப் படுமா? என்ன கஷ்டப்பட்டாலும் மனசிலே ஒரு நெகிழ்ச்சி இருக்கிறது. அதுதான் தெய்வாம்சம் என்று தெரிகிறது. ஆனால், சுயநலம் வளர்ந்து விரிவதற்கு அது இடம் தருவது இல்லை. கை தாழ விடக்கூடாதா? ஏன் விடக்கூடாது? சந்திரன் சூரியனிடமிருந்து கடன் வாங்கிக்கொள்கிருன். விதை மண்ணிடமிருந்தும், மழையினிடமிருந்தும், கடன் வாங்கிக் கொள்கிறது. உயிர் உணவிலிருந்து கடன் வாங்கிக் கொள்கிறது. உடல் ரத்தத்திலிருந்து கடன் வாங்கிக் கொள்கிறது. ஒலி காதைக் கடன் வாங்கிக் கொள்கிறது. எட்டணு சிற்றுண்டிக்கு வாங்கிக்கொண்டால், என்ன குடி முழுகிப் போய் விடும்?...

'இறங்குங்க சார், பாரீஸ், எல்லாரும் இறங்கீட் டாங்க. இல்லாட்டி வந்த பஸ்ஸிலேயே திரும்பிப் போகப் போறீங்களா?'

'இல்லை இல்லை, ஏதோ ஞாபகம். இதோ இறங்கி விட்டேன்.'

'ஏறுங்க சாமி, ரிக்ஷாலே.'

'இல்லை அப்பா, காரியாலயத்திற்குப் போகிறேன்.'

'நீங்க குடுக்கிறதைக் குடுங்க.'

'இதோ இருக்கே, காரியாலயம்.'

'மவராஜனுப் போங்க...'

நல்ல வேளை ! இவனுவது வாழ்த்துகிறனே !...

'என்ன சார், பார்க்காமல் போகிறீர்களே ! ஆபீஸ் அவசர மோ ?'

'அவசரம்தான். நீங்கள் நேற்றுச் சொன்னது—'

'நான் ஒன்றும் சொல்ல வில்லையே ?'

'உங்களுக்கு மறந்து போயிற்று. பிறகு நினைப்பு வரும். நாளைக்குச் சொல்லுங்கள்...'

உலகத்தில் பழகி எனக்குக்கூடச் சாமர்த்தியம் வருகிறது ! அவன் உண்மையில் ஒன்றுமே சொல்லவில்லை. இருந்தாலும் இந்த வாய் அவன் விஷயத்தில் ரொம்ப அக்கறை கொண்டிருப்பது போல் நாடகமாடிவிட்டதே! இல்லாவிட்டால் ஒருவரையும் பகைத்துக்கொள்ளக் கூடாதென்கிற நினைப்பிலே முன்கூட்டி அணை போட்டதோ ?

இந்த மனத்தைக் கவனித்தாலே தமாஷாக இருக்கிறது. எதிர்பாராத சாதுர்யத்தை ஒரு சமயத்தில் மின்ன விடுகிறது. மற்றொரு சமயத்தில் பெரும் மழையில் அடிபட்ட ஆடு போலக் குன்றி ஒடுங்குகிறது. இந்த மனம் அசைவதைக் கவனித்துக்கொண்டிருந்தாலே போதும் போலிருக்கிறது. அது சரி, கவனிப்பது யார் ? கவனிக்கப்படுவது எது ?...

'வணக்கம்.'

'வணக்கம். மானேஜர் வந்து விட்டாரா ?'

அவர்தான் நாள் தவறுமல் 8-45-க்கு வந்திடுருரே...நீங்கள் கணக்காய் ஒன்பது மணிக்கு வர்றீங்க. அதோ மேஜை மேலே இருக்கு ஆஜர் புஸ்தகம். ஒங்க மாதிரி எல்லாரும் ஆபீசில் இருந்துவிட்டால் எனக்கு வம்பு இல்லிங்களே !'

'ஏன்?'

'உங்களுக்குத் தெரியாதுபோலக் கேக்கறீங்களே! உங்களைப் போல ரெண்டொருத்தர் சரியா வராங்க. பாக்கிப் பேர் அரை மணி, நாற்பது நிமிஷம் கழிச்சு வராங்க. ஒன்பது அடிச்சுப் பதினைஞ்சு நிமிஷம் ஆயிட்டால் ரிஜிஸ்தரை மானேஜர் மேஜை மேலே கொண்டு போய் வச்சுடணும். இல்லேன்னு என்னைப் பிடிச்சுக்கிருரு. நான் கொண்டுபோய் வச்சப்பறம் ஆபீசுக்கு வறவங்க என்மேலே பாயருங்க. அதுக்குள்ளே என்ன தலை போகிற அவசரம்—மானேஜர் மேஜைமேலே கொண்டுபோய் ரிஜிஸ்தரைப் போட்டுட்டே, இங்கருங்க? இல்லாட்டி, இப்போ என்ன மணியாவுது பாருன்னு கைக் கடியாரத்தைக் காட்ருங்க. அவுங்க கடியாரம் சரியா இருக்கு. ஆபீஸ் கடியாரம் பறக்குது. ரொம்பத் தரும சங்கடமா யிருக்கு. இந்தக் கோபத்தை எல்லாம் வச்சுக்கிட்டு அப்பப்பொ என்னைப்பத்தி மானேஜர் கிட்டே வத்தி வக்கருங்க. நீங்க ஒரு வார்த்தை என்னைப்பத்திச் சொல்லிவையுங்க ஐயாவுக்கு ஒங்களைப் பத்தி ரொம்ப ரொம்ப நம்பிக்கை.'

'போகட்டும்...!

இந்த அரை பர்லாங் தார் ரோடிலே நடந்து ஆபீசுக்கு வருவதுக்குள் உடம்பு வேர்த்து விடுகிறது. கிராமத்தில் ஒரு மைல் நடந்தால்கூட இப்படி இருப்பதில்லை. நல்ல வேளையாக மின்சார விசிறி இருக்கிறது! அப்பாடா!

பேர்தான் தலைமைக் குமாஸ்தா. எல்லாவற்றையும் எல்லோரும் தலையில் கட்டிவிடுகிருர்கள். எது நடந்தாலும் நடக்காவிட்டாலும் ஜவாப் நான் சொல்ல வேண்டியிருக்கிறது.

'ஏன் ஜோசப், அம்பாரமாக பைல் என் மேஜையிலே அடுக்கிக் கிடக்கிறதே?'

'என்ன செய்யலாம் சார். நான் பாதி வைத்துக் கொண்டிருக்கிறேன், ஒரு பாதி அங்கே வைத்திருக்கிறேன். ஆபீசிலே ஒருத்தரும் சரியா கவனிக்கிறதில்லை. கட்டை சரியாப் படிக்கிறதில்லை. படித்தாலும் புரிநது கொள்ளுகிற சக்தி கிடையாது. தாறுமாருக எழுதி வைக்கிருங்க. நாம் ஒன்றையும் கை எழுத்துப் போட முடியவில்லை. ஏனய்யா இப்படி என்று கண்டித்துக் கேட்டால், கட்டையே கட்டிப் போட்டு விடுகிருர்கள். இதை எல்லாம் யோசித்து நாமே செய்துவிடலாமென்று தான் பார்க்கிறேன். எல்லாவற்றிற்கும் நீங்க ஜவாப்? நீங்க எவ்வளவுதான் பார்க்க முடியும்? அதனுல் நான் ஒரு பாதி வைத்துக் கொண்டேன்.'

'கிறிஸ்தவ மதத்திலே புனர்ஜன்மம் என்ற கொள்கை உண்டோ?'

'கிடையாது.'

'எங்களுக்கு அது ஒரு முக்யமான கொள்கை.'

'அதைப் பற்றி இப்பொழுது என்ன வந்தது?'

'கடுதாசுகளுக்கிடையே மேய்கிற உத்தியோகம் நமக்குக் கிடைத்திருக்கிறதே—அதைப் பற்றித் தான் யோசிக்கிறேன். ஒவ்வொரு சமயத்திலே, முன் ஜன்மத்திலே கழுதையாக இருந்திருப்போமோ என்று தோன்றுகிறது. உயிர் இடை அருத வெள்ளம் என்பது உயிரியல் விஞ்ஞானத்தின் சித்தாந்தம். அதையேதான் வேறுவிதமாக முன்னேர்களும் எங்களுக்கு ரத்தத்தில் ஏற்றி இருக்கிருர்கள். அந்தக் கழுதை-ஜன்மத்தின் வாசனை போகவில்லையோ என்று தோன்றுகிறது. ஒரு தடவை பாத்திரத்தில் பெருங்காயத்தை வைத்து விட்டால், பிறகு பாத்திரத்தை விட்டு அதை எடுத்து விட்டால்கூட வாசனை போகாது.'

'நீங்கள் சொல்வது தமாஷாகவும் உண்மையாகவுமிருக்கிறது.'

'விஞ்ஞானம்கூட இதையேதான் சொல்கிறது. இந்த அணுக்கள் அண்டத்தில் சுழன்று ஒவ்வொருவித மான பொருள்களை உண்டாக்குகிறதென்பது உண்மை. ஆனால், எதற்காகச் சுழல்கிறதென்ற காரணத்தை யாரும் கண்டு பிடிக்கவில்லை! உயிர் அணுக் கூட்டத் தின் லீலை. விளையாட்டுத்தான் இவ்வுலகம் என்கிறார் விஞ்ஞானி. வாழ்வின் பொருள் அவர்களுக்கும் தெரிய வில்லை. விளையாட்டு என்பதற்குப் பதில் தமாஷ் என்று சொல்கிறேன்.'

'ஆமாம், மெய்தான்...சந்தானம் எட்டிப் பார்க்கி றாரே? என்ன சமாசாரம்?'

'தத்வ ஆராய்ச்சி அப்புறம் வைத்துக்கொள் வோம்...என்ன சந்தானம்?

'இந்த வாசற்காப்பானை விசாரிக்க வேண்டும்.'

'என்ன சமாசாரம்?'

'நான் வருகிற போதெல்லாம் பதிவுப் புஸ்தகம் மானேஜர் அறைக்குப் போய்விட்டதென்கிறான்?'

'நீங்க கடியாரத்தைப் பார்த்திருக்க மாட்டீர்கள்.'

'வீட்டிலே இருந்து வழிநெடுகக் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டுதான் வருகிறேன். ஒரு கடியாரம் கூட அடுத்த கடியாரத்துடன் ஒத்திருக்கவில்லை. எதை நம்பி ஆபீசுக்கு வருகிறது?'

ஆனால் ஆபீசுக்கு நடந்தா வருகிறீர்?'

'சம்பளம் தொண்ணூறு ரூபாய்தானே? வீட்டு வாடகை 20 ரூபாய். நானும் சம்சாரமும் மூன்று குழந் தைகளும் இருக்கிறோம். பஸ் சார்ஜுக்கு எங்கே போகி றது?'

'நான் சொல்லிக் கொள்கிறேன் மானேஜரிடம். காவல்காரன்; அவன் பிழைக்கப் பார்க்கிறான்! நீரும்

பிழைக்கப் பார்க்கிறீர். இங்கென்ன வாழுது? நானும் தான் பிழைக்கப் பார்க்கிறேன். அதிருக்கட்டும். அந்த அறிக்கை தயாராகி விட்டதா? சர்க்காருக்கு அனுப்ப வேண்டுமே! தந்தி அடிக்கிற கட்டத்திற்கு வந்து விட்டது. அர்ஜெண்டு தந்தி வந்து விடுமே!'

'நான் அவசரப் படுகிறேன். அந்தக் கணக்குப் பிள்ளை புள்ளி விவரம் கொடுக்கவேண்டும். ஒரு மாதமா ஆபீசுக்கே வரவில்லை. நானும் தந்தி வரையில் எட்டி விட்டேன். கிராமத்திலே ஏதோ செஷன்ஸ் வழக்காம். வாதி தரப்புச் சாட்சிக்கு வந்தால், எதிரிகள் கொன்று விடுகிறேன் என்கிறார்களாம். எதிரிகள் தரப்பு சாட்சியாக வந்தால் போலீசார் கவனித்துக் கொள்கிறேன் என்கிறார்கள். பயந்துகொண்டு வீட்டிலேயே இத்தனை நாள் ஒளிந்துகொண்டிருந்தேன் என்று நேற்று வந்து அழுதான்.'

'வீட்டிலே இருந்தால் நன்றாகப் புள்ளி விவரம் எழுதலாமே!'

'அவனிடத்தில் இருந்தால்தானே? வயல்களுக்குப் போய் அளக்காமல் ஒன்றும் செய்ய முடியாதாம்.'

'அப்படி என்றால் இன்னும் ஒரு மாசத்தில்கூடச் சர்க்காருக்கு அறிக்கை போகாது.'

'ஏன் போகாது? நான் ஒன்று சொல்கிறேன். 1800 வருஷக் கணக்கொன்று இருக்கிறது. அதை வைத்துக் கொண்டு எழுதி அனுப்பி விடுவோம்.'

'அது தவறாக இருக்காதா?'

'அதெப்படி இருக்கமுடியும்? சரியானதென்று ஒன்று இருந்தால்தானே, மற்றொன்றைத் தவறு என்று சொல்லலாம்?'

'ஆ! அப்படியா? நீ ஐன்ஸ்டீன் படித்திருக்கிறாயா?'

'அது யார் தெரியவில்லையே! நான் உயர்நிலைப் பள்ளியோடு சரி. அதற்கப்புறம் பத்திரிகையையும் சினிமா விளம்பரத்தையும் தவிர, வேறு எதையும் பார்த்ததில்லை.'

'நீர் ரொம்பக் கெட்டிக்காரர். எந்த எழவாவது ஒன்றைத் தயார் செய்துவிடும். இதென்ன தவறுதலாக இருக்கிறதே என்று மேலே இருந்து கேட்டால், வேறென்று எழுதி அனுப்பிவிடுவோம். நான் மானேஜரிடம் சொல்லிக்கொள்கிறேன். காவல்காரனுக்கு எப்பொழுதாவது ஒரு டிபனை வாங்கிக் கொடுத்துத் தொலையும் அய்யா. சத்யமேவ ஜயதே எல்லாம் ஹரிச்சந்திரனோடு சரி.'

'நாளைத் தபாலுக்கு அறிக்கையை அனுப்பிவிடலாம்.'

'சரி...'

இவன் என்ன ஐன்ஸ்டீன் போலப் பேசுகிறானே! மெய், பொய், காலம் ஒன்றும் நிலையான விஷயங்கள் அல்ல என்கிறான்! கடியாரத்துக்குக் கடியாரம் மணி வித்தியாசப்படுகிறது என்று சொல்வது சுத்த விஞ்ஞானம் மாதிரி ஒலிக்கிறதே! எல்லா இடத்திலும் எல்லாக் கடியாரத்திலும் மணி எப்படி ஒன்றாக இருக்க முடியும்? இடத்துக்குத் தகுந்தாற்போல் காலம் மாறுபடத்தான் படும்! ஐன்ஸ்டீன் போட்டுக் காட்டுகிற கணக்கு வழக்கும் வாதமும் புரியவில்லை. ஆனால், அவர் சொல்லும் தத்துவம் புரிகிறது. அவரவர்களுக்கு ஏற்ப ஒன்றைக் காண்கிறார்கள் அல்லது உண்மையை உணர்கிறார்கள். அதுவே பேருண்மை. முழு உண்மை என்று மற்றவனிடம் சண்டை போடுகிறார்கள். குருடர்கள் யானையைக் கண்ட கதை ரொம்ப விசித்திரமானது; ஆயிரத்துக்காயிரம் உண்மை. இந்த உண்மைகளை வயிற்றுக்காக உபயோகிக்கிற போதுதான் சுவாரஸ்யமாக இருக்

கிறது. இத்தனை கோயில் கட்டினவர்கள் வயிற்றுக்கு ஒரு கோயில் கட்டி இருக்கலாம்.

'ஏய், என்னப்பா, மசி தண்ணியாக இருக்கிறதே?'

'மசி ஆயிடுச்சு. அச்சு பாரம் ஆயிடுச்சு. பேப்பர் ஆயிடுச்சு.'

'எல்லாம் ஆயிடுச்சு, அதற்காக?'

'மசிக் கூட்டிலே மசி உறைஞ்சி கிடந்துதுங்க. எல்லாத்திலும் தண்ணியை ஊத்திக் கரைச்சிருக்கேனுங்க. ரெண்டு நாள் ஓடிப் போயிடும்.'

'அந்தக் குமாஸ்தா காலாகாலத்தில் எழுதிப் போடவில்லையா?'

'அவரைக் கேட்டால் ராமாயணம் படிக்கருரு. எழுதிப்போட்டு ஆறு மாசமாச்சுங்கருரு...கோவிச்சுக்காதிங்க. இப்பெல்லாம் முன்மாதிரி வேலை நடக்கிறதில்லே. கூடிக் கூடிப் பேசருங்க. நாக்காலிலே உக்காந்திருக்கிறப்போ சினிமா அது இது இன்னும் அக்கப்போர் பேசருங்க. களைச்சுப் போறது. வாதா மரத்தடிப் பெட்டிக் கடைக்காரரு புழைக்கிருரு. அவ்வளவுதான் கதை.'

'நீ பழங்காலத்து மனுஷன். முன்னேற்றத்தைப் பற்றி உனக்கோ எனக்கோ என்ன தெரிகிறது? போ போ...'

வெள்ளை மசியால் எழுதினல் நன்ருகவா இருக்கு? ஆபீஸில் எல்லாரிடத்திலும் பௌண்டன் பேனுத்தான் இருக்கிறது. ஆனல், பௌண்டன் பேனு மசி தான் சர்க்காரிலே வாங்கிக் கொடுப்பதில்லை. சொந்தக் காசு போட்டு வாங்கிக் கொண்டால் யாருக்கும் ஆட்சேபம் இல்லை. சர்க்கார் காசைப் போட்டு வாங்கிக் கணக்கில் காட்டி விட்டோமா, வந்தது மோசம்! தணிக்கையாளர் எண்பத்தி எட்டு ஆட்சேபங்களைக் கிளப்புவார்! தழையைப் போட்டு மாங்காயை மறைப்பது போல

சர்க்கார் பணத்தைப் போட்டு வாங்கிக் கணக்கில் வேறு தினுசாகப் போக்குவரத்து செய்தால், தணிக்கையாளர் வாயடைத்துப் போகிறது! இந்த ஏழைவை உத்தேசித்து எல்லோரும் ஸ்டீலேயே உபயோகிக்கிறார்கள். இந்த ஆபீஸ் ஸ்டீல்கள் பரவா இல்லை. சில இடத்தில் கட்டையில் நிப்பை நூலால் கட்டி இருக்கிறதைப் பார்த்திருக்கிறேன். சர்க்கார் சிக்கனமாக நடக்க வேண்டாமா?

அப்பா! இந்த உண்மை இருக்கிறதே அதை உண்மையில் யாரும் விரும்புவதில்லை. பேச்சு மட்டும் —யாரைச் சொல்வது? யார் யாரைத் திருத்துவது? பூமி தோன்றின நாளாகத்தான் பெரியவர்கள் மனிதனைச் சீர்திருத்த முயன்றிருக்கிறார்கள்! எத்தனை நூல்கள் எழுதி இருக்கிறார்கள்! மனித வர்க்கம் மாறிக் கொண்டே வருகிறதென்று நான் சொல்லத் தயாரே ஒழிய, வளர்ச்சி அடைந்து விட்டது என்று சொல்லத் தயாராக இல்லை. ஐந்தறிவுப் பிராணிக்கும் ஆறறிவுள்ள மனிதனுக்கும் வித்யாசம், தான் என்ற நினைப்பை மனிதன் பெற்றிருக்கிறான் என்பதைத் தவிர, வேறெதில் இருக்கிறது?... மனமே கொஞ்சம் சும்மா இரு. இந்தக் கடுதாசுகளை எல்லாம் தின்றுவிட்டு வருகிறேன்...

'என்னுங்க சார், இன்னும் கடுதாசைக் கட்டிக் கிண்டு அழறேள்! டிபனுக்கு நாழியாயிட்டுதே. இப்போ மணி 1-5.'

'என்ன எழவு பண்றது? வந்து உட்கார்ந்ததே பிடித்து, இந்தப் பொய் மனுக்களையும் நிஜக் குறைகளையும் சோதிப்பதற்குள் பிராணனுக்கு வருகிறது. இன்னும் கால்வாசிகூட முடியவில்லை.'

'நான் ஒன்று சொல்லட்டுமா?'

'சொல்லுங்க.'

'நாற்காலியை விட்டு முதல்லே எழுந்திருந்து வாங்கோ, கிளப்பிலே சொல்றேன். பகல்லே பக்கம் பாத்துப் பேசணு மில்லையா ?'

'உம்மைப் போல வருமுன் காப்போனைக் கண்டதே இல்லை. கெட்டிக்கார ஆசாமி!'

'நீங்கதான் மெச்சிக் கொள்ளணும். நானே ஏமாந்து போய்விட்டேன்.'

'நீங்க கூடவா ?'

'நான்கூட என்ன ? கள்ளன் பெரிதா காப்பான் பெரிதா ?— என்று சொல்வார்கள். அந்த மாதிரி ஆகி விட்டது.'

'ஏன் ?'

'இதோ காலிலே போட்டுக் கொண்டிருக்கிறனே செருப்பு ?'

'ஆமாம். நன்றாக இருக்கிறதே! என்ன விலையோ ?'

'அதுக்குத்தான் சொல்லுகிறேன். போன ஞாயிற்றுக் கிழமைக்கு முதல் ஞாயிற்றுக் கிழமைக்கு முதல் நாள் ஒரு ஜோடி புதுச் செருப்பு ஏழரை ரூபாய்க்கு வாங்கினேன்.'

ஏழரை ரூபாய் ஜாஸ்திதான்.'

'இதில்லே; வேறே செருப்பு. கடையிலே இருந்து வீட்டுக்குப் போட்டுக் கொண்டு வந்தேன். ராத்திரியிலே செருப்புக்கு வேலை இல்லை. என்னோடு அதுவும் தூங்கிப் போய் விட்டது. மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தேன். நாள் முழுக்க ஓய்வெடுத்துக் கொண்டால், என்னவோ போல் ஆய்விடுகிறது. ஆகையால், சாயங்காலமாக, நவயுக வாதிகள் சங்கத்தில் ஒரு கூட்டம். அதற்குச் சென்

றேன். மதமென்னும் அபின் என்பது பற்றி அறிவாளர் பேசினுர். பிரசங்க மண்டபத்திற்கு வெளியே செருப்பைக் கழட்டி வைத்து விட்டுப் போனேன். மதப் புரட்டுகளைச் சொற்பொழிவாளர் அக்கு அக்காக இரண்டு மணி நேரம் பிரித்துக் காட்டினுர். ஒரே பிரமிப்பாக இருந்தது. இன்னும் சொற்பொழிவாளர் பேச மாட்டாரா என்று தோன்றிற்று நல்ல வேளையாக அடுத்த ஞாயிற்றுக் கிழமையும் இதே விஷயத்தைப் பற்றிக் கூட்டம் நடக்குமென்று காரியதரிசி தெரிவித்தார். வெளியே மகிழ்ச்சியுடன் வந்தேன். செருப்பை வைத்த இடத்தில் பார்த்தேன். காணும். என்ன செய்யறது? அங்கேயும் இங்கேயும் பார்த்தேன். கிடைக்கல்லே. அடுத்த ஞாயிற்றுக் கிழமை பார்த்துக் கொள்ளலாம் என்று வந்துவிட்டேன். நேற்று ஞாயிற்றுக் கிழமை போனேன். கூட்டம் முடிவதற்குப் பத்து நிமிஷத்திற்கு முன்பு வெளியே வந்தேன். செருப்பு வைக்கும் இடத்தில் ஏராளமான செருப்புகள் இருந்தன. ஒரே கண்ணேட்டத்தில் என் செருப்பு அங்கில்லே என்பது தெரிந்து விட்டது. அதற்காக நான் தயங்கவில்லே. புது செருப்பாக ஒரு ஜோடியை மாட்டிக்கொண்டு வந்து விட்டேன். அந்த செருப்புதான் இது. உலகம் இருக்கிற இருப்பு—மகா மோசம்!'

'திருடி விட்டேன் என்று கூசாமல் சொல்லிச் சந்தோஷப்படுகிறீர்களே?'

'இது திருட்டா! வைத்த இடத்தில் எதிர்பார்ப்பது தானே அறிவுக்கு ஒத்த செயல்! வைக்காத இடத்தில் எதிர்பார்ப்பது மத நூல்களில் அடிபடுவதைப் போன்ற அற்புதமாகிவிடாதா?...'

'அப்பொழுது இது?'

'இயற்கையில் ஒரு ஆழ்ந்த தத்வம் புதைந்து கிடக்கிறது. நஷ்ட ஈடு என்று அதற்குப் பெயர். குருடர்

களைப் பார்த்தால் இந்தத் தத்வத்தின் உண்மை புலப்படும். அவர்களுக்குக் காதும், ஸ்பரிச இந்திரியமும் வியக்கத்தக்க கூர்மையுடன் இருக்கும். கண்ணுக்கு நஷ்டம், காதுக்கு லாபம் அந்த ஞாயிற்றுக் கிழமை நஷ்டம் இந்த ஞாயிற்றுக்கிழமை நஷ்ட ஈடு—அவ்வளவு தான்.'

'இந்தத் தத்வமெல்லாம் என் மூளைக்கு எட்டாது.'

'என்ன சார், எட்டாது எட்டாது என்று சொல்லிக் கொண்டு?... என்னப்பா போட்டிருக்கு?'

'பகவடா, பஜ்ஜி, காராபூந்தி, மிக்சர், காரா சேவை, போண்டா, வடை, ஓமப்பொடி, முந்திரிப் பருப்பு கோல்மால்...'

'சரி, தித்திப்பு?'

'மைசூர்பாகு, ஹல்வா, ஜாங்கிரி, பாதுஷா, பாசந்தி, குலாப்ஜான், காசி ஹல்வா, பாதம் ஹல்வா, பீட்ரூட் ஹல்வா, இலுப்பப் பூ ஹல்வா?'

'அப்பறம்'

'வடை, தோசை, இட்லி ராஸ், வந்தேமாதரம்.'

'இட்லி ராஸா?'

'ஆமாங்க. சூடாக இருக்கு'

'கொண்டாங்க ரெண்டு பிளேட்.'

'சட்னியா, சாம்பாரா கொத்சா?'

'சும்மா கொண்டாய்யா—எல்லாத்தையும், பார்ப்போம்.'

'இதென்ன சார், சட்னி இவ்வளவு உரப்பாக இருக்கிறதே!'

'நஷ்ட ஈடு என்கிற தத்வத்தின் அமுல்தான் இதிலும். தேங்காய் விலை ஏறிப்போச்சு. இட்லி விலையை

ஏற்ற முடியவில்லை. வருகிறவர்கள் சட்னியைச் சாப்பிட்டுவிட்டு, இட்லியைத் தொட்டுக்கொண்டால் அவன் எப்படிப் பிழைக்க முடியும்? தேங்காய் நஷ்டம். பச்சை மிளகாய் லாபமாக முடிகிறது?'

'சாம்பார்கூட மோசமாக இருக்கிறதே!'

'நீங்கள் பழம்பசலியாகவே இருக்கிறீர்கள். கேசரி பருப்பு என்று ஒரு விஷம் வந்ததே அது முதல் சாம்பாரில் பருப்புப் போடுவதில்லை என்று முடிவு செய்து விட்டார்கள். எது நல்லது எது விஷம் என்று கண்டு பிடிக்கக் கிளப்பிலே பரிசோதனை சாலையா இருக்கிறது?'

'அப்பொ கொத்சு?'

'அதிலே வெங்காயத்தைவிட வெங்காயத் தோலும் வேரும்தானே இருக்கிறது?'

'இதெல்லாம்—'

'இதைத்தான் அங்கே சொல்லணும் என்று நினைத்தேன். எதையும் ரொம்பப் பெரிய விஷயமாக நினைத்துக்கொள்ளக்கூடாது மலையை நாம்தான் தாங்கறோம் என்று நினைக்கப்படாது. ஹரிச்சந்திரன் நிஜம் பேசினுனே, நாம் எப்படிப் பொய் பேசலாம் என்று நினைக்கப் படாது நாம் பிழைத்தாக வேண்டும். சம்பளம் போறுதுன்னு அதை எப்படியோ சரிக்கட்டிக்கொள்ள வேண்டும். கையை நீட்டாமல் கட்டிக்கொள்ளக் கூடாது. இந்த மனச்சாட்சி அது! இது எல்லாம்—'

'இதெல்லாம் எனக்குப் புரிகிறது. பழக்கத்துக்குத் தான் கொண்டுவர முடியவில்லை.'

'கொண்டுவர முடியவில்லை என்றால் ஒரு பெருமை என்று நினைத்துக் கொள்ளக்கூடாது. குறை என்று தெரிந்துவிட்டால் அதை உதறித் தள்ளுகிற உறுதி வேண்டும். பிழைக்கவேண்டும் - என்ற நினைப்பிலே

தடிப்பு இருக்கவேண்டும். நாளோட்டறது, பொழுதைக் கழிக்கிறது—இந்தக் கதை எல்லாம் சரிப்படாது... போரது; காபி பரவாயில்லை. பில போடப்பா'

'நான் கொடுக்கிறேன்.'

'இல்லை இல்லை; நான் கொடுக்கிறேன்.'

'வந்த காரியத்தைச் சொல்லாமல் காபி சாப்பிட அழைத்துக்கொண்டு வந்துவிட்டீர்களே!'

'அதுவா? அந்தக் கிணறு வெட்டின மனுவிருக்கிறதே...'

'ஆமாம்.'

'அதைப்பத்தி என்னென்னவோ ஆட்சேபம் எழுதி அனுப்பி இருக்கிறார்களாம்.'

'நான் பார்த்தேன். இரும்புக் குண்டுபோல இருக்கு ஆட்சேபங்கள்'

'எப்படியோ அதை இலவம் பஞ்சாக்கிவிட வேணும் இன்னு சொல்லத்தான் வந்தேன். எப்படியோ முடிச்சுத்தர வேண்டும்.'

'பார்ப்போம்.'

'பார்த்துக்கொண்டே இரும். அடுத்த வாரம் வருகிறேன்...'

நஷ்டஈடாமே! ஆனால், அதுவும் வாஸ்தவம்தானோ என்னவோ! பஸ்ஸில் அவன் அரை ரூபாயைக் கடன் வாங்கிக்கொண்டு போய்விட்டான்; ஆனால், இவர் டிபன் வாங்கிக் கொடுத்துவிட்டார். செலவும் வரவும் நேர்! ஆனால், அதெப்படிப் போதும்? மிச்சம் ஏற்படவேண்டும். ஆக்கலும் அழித்தலும் நாள் தவறாமல் உடலில் நடக்கிறதே! இரண்டும் நேராகிவிட்டால் போதுமா? உடம்பு என்று மிஞ்ச வேண்டாமா? ஏதாவதொன்று அதிகப்படியாக இருந்துதான் ஆக வேண்டும். அளவு, நெறி என்பதிலே குறி வைக்கப்படாது. அதிகப்படியில்தான்

நாட்டம் இருக்கவேண்டும். அளவு, நெறி என்றால் சுய நலம் தலை எடுப்பதில்லை; சுயநலம் தலை எடுக்காவிட்டால் அந்த அதிகப்படி கிடைப்பதில்லை. பொழுதைக் கழிக்கிறது! ஓட்டுகிறது! இதுதான் பாடம்! உண்மை தான் தெரிகிறதே, மாறக் கூடாதோ? அதுதான் முடிய வில்லை. இந்த ரகசியத்தைத் தெரிந்துகொண்டால் காலத்தைக் குதிரை ஏறலாம். இல்லாவிட்டால் நொந்த புண்ணாகவே சாகலாம்...

'சார், மானேஜர் கூப்பிட்டாங்கோ. டிபனுக்குப் போயிருக்காங்க இன்னேன்.'

'எதாவது சொல்லுவாரோ ?'

'ஆயிர ரூபாய் சம்பளக்காரர்! சும்மா இரு. அவர் காதில் விழுந்தால், குடிக்கிற கஞ்சிகூடத் தொலைந்து போய்விடும்.'

'நான் ஏன் வாயைத் திறக்கிறேன்? கேட்டீங்கன்னு சொன்னேன்.'

'கண்ணை மூடிக்கொள்ள வேண்டும். காதைப் பொத்திக் கொள்ள வேண்டும். வாயைப் பூட்டிக்கொள்ள வேண்டும். அப்படி என்றால் போதைப் போக்கலாம். இல்லாவிட்டால் தனதந்தி நாதந்தித்தானு—சம்போ—அஞ்சு கல்லாலொரு கோட்டை—அந்த ஆனந்தக் கோட்டைக்கு ஒன்பது வாசல் என்று ஒற்றைக் கொட்டையைக் கட்டிக்கொண்டு கிளம்பிவிட வேண்டியது தான்.'

'என்ன சூபரெண்டு சார் ?'

'காபி ஆயிடுத்தா ?'

'ஆகிவிட்டது.'

'மேலே இருந்து அறிக்கை வந்திருக்கிறதே—பார்த்தீர்களா ?'

'பார்த்தேன்.'

'ஒரே இடி மின்னலாக இருக்கிறது. பள்ளிக்கூடத் துப் பிள்ளைகளைக் கண்டிக்கிறாப் போல இருக்கிறது.'

'இப்பொ என்ன செய்யணும் ?'

'என்ன செய்கிறது ?'

'பதிவில்லாத சர்க்கார் உத்யோகஸ்தர்களைக் கட்டி மேய்ப்பதில் உள்ள கஷ்டங்கள்தான் இவ்வளவுக்கும் காரணம் என்ற உண்மையை எழுதி அனுப்பினால் போகிறது.'

'நீ என்னய்யா—பழம் பசலி ! புத்திசாலித்தனம் இப் பொழுதெல்லாம் வேண்டியதே இல்லை. தந்திரம் தெரிய ணும். ஒரு நூறு பக்கம் பதில் எழுதும். நிறையப் புள்ளி விவரம் இருக்கட்டும். அனுபந்தம் இருக்கட்டும். இதைப் பார்த்தே பயந்து போய்விட வேண்டும். இங்கே இருக்கிறாப் போலத் தான் அங்கேயும் இருப்பார்கள். இதைப் பார்த்தவுடனே கட்டிப்போட்டுவிடுவார்கள். பிறகு, அடுத்த வருஷம்தானே? பார்த்துக்கொள்ளலாம்! இரண்டு நாளில் தயாராகட்டும்.

'சரி...'

நான் வேலைக்கு லாயக்கில்லை என்றுதான் நினைக் கிறேன். இந்த ஆபீசை நான்தான் தூக்கிக்கொண் டிருக்கிறேன் என்ற நினைப்பு இருக்கிறது—அது மகா மோசம்! இவர்களுக்கெல்லாம் எந்த வேலையும் பெரி சாகத் தோன்றுவதே இல்லை. வண்ணான் சட்டையிலே இருக்கிற தூசியைத் தட்டுகிறாப்போல அலட்சியமாய்ப் பேசுகிறார்கள். ஆனால், தட்டுகிற சத்தம் மட்டும் நாலைஞ்சிமாதிரி உலகெல்லாம் கேட்கும்படிச் செய்கிறார் களே—அதுதான் எனக்குத் தெரியவில்லை. வேர்மாதிரி மண்ணுக்குள் மறையத் தெரிகிறது. பூமாதிரி ஆடத் தெரியவில்லை. சுமைதாங்கி என்ற அகம்பாவத்தை

விட்டுவிட்டால்... இன்றைக்கு இன்னும் பத்துக் கடுதா சாவது ஐந்து மணிக்குள் பார்த்துவிட்டால், நாளைக்குத் தீர்ந்துபோகும். இந்தக் குப்பைத் தொட்டியை வீட்டுக்குக் கொண்டுபோவோமென்றால், மணிப் பயல் படித்துக் கிழிக்கிறேன் என்கிறான்! ஹூம், எதோ நாளெண்ணிக் கொண்டு போக வேண்டியதுதான்...

அடாடா! இந்த ஒரு கட்டை வரிசையாகத் தேதி வாரியாக வைக்கத் தெரியவேண்டாம்? எட்டு குமாஸ்தா கைமாறி இருக்கிறது! ஒருவருக்காவது அதைச் சரி செய்ய வேண்டுமென்று தோன்றக் கூடாது? போட்டோப் பிடித்தால் ஒவ்வொருவரும் முன்னால் நிற்க வேண்டும் என்று முயலுகிறார்கள்! அந்தப் போட்டோவில் சுவத்திடுக்கிலிருந்து ஆலங்கன்று நெளிந்து கொடுத்து முளைத்து வருவதுபோல் குமாரசாமி கழுத்தை நீட்டி இருக்கிறானே! ஒருவருக்காவது உணர்வு வேண்டாம்! பிறருக்காக அழகு, நெறி, ஒழுங்கு என்று இருக்கும் வரையில் உண்மைக்கும் வளர்ச்சிக்கும் இடமில்லை. பிறர்தான் சாட்சி என்ற நினைப்பு இருக்கும் வரையில் வேஷம் கட்டத்தான் தோன்றும். நம்மை நாமே பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்ற உண்மை புரிந்துவிட்டால், சூதும், வாதும், பகட்டும் ஒழிந்து விடும்...அடுக்கு சரியாக...ஆனால், நடந்துபோகிறவன் ரஸ்தாவைச் செப்பனிட வேண்டுமென்று எப்படிக் கேட்கலாம்? நிலையாகக் கிடக்கிற ரஸ்தா அசையும் கால்களின் மிடுக்கைப்பற்றிக் குறைப்படவும் கூடாது, ஏங்கவும் கூடாது. நடப்பதற்கு ரஸ்தாவாக இருக்கிறோமே என்பதில் உள்ள உண்மையிலிருந்து இன்பத்தைப் பெறக் கற்றுக்கொண்டு விட்டால்—கொஞ்சம் இரு. அஞ்சு மணி வரையில் அடித்தளத்திற்குப் போய் விடு. போ போ...

டங்! டங்! டங்! அஞ்சு மணியா? போகிறது! ஒரு வழியாக எதிர்பார்த்ததை விட அதிகமாகவே இன்று வேலையாகிவிட்டது! கொஞ்சம் ஆறுதல்! நெருப்பில் குளிர்ச்சி உண்டா! ஏன் இல்லை? ஐஸின் தத்துவத்தைப் பற்றி விசாரிக்க வேண்டும்.

'வரலாமா ?'

'வாருங்கள் தோழரே.'

'உட்காரலாமே.'

'வேண்டாம். மணி அஞ்சாகிவிட்டால் ஆபீஸ் சாமான், காற்று அவ்வளவும் கசப்பாக இருக்கிறது. இன்று அங்கே ரகசியக் கூட்டம்.'

'நான் வரவில்லை.'

'ஏன் ?'

'இன்றைக்கு மனது சரியாக இல்லை'

'மனத்தைச் சரி செய்கிறதென்ற காரியம் உலக சரித்திரத்திலே என்னிக்கும் ஜெயித்த தில்லை. பத்துப் பேராகச் சேர்ந்து நெட்டையோ குட்டையோ ஒரு செயல் செய்தால் உலகம் நடுங்கிப் போகிறது.'

'நீங்கள் என்ன தீர்மானம் போட்டாலும் அதன்படி நடந்து விடுகிறேன். சந்தேகப்பட வேண்டாம்.'

'ஒரு ரகசியம் உங்களுக்குத் தெரியவேண்டும். மனசிலே இருந்தால் போதாது. செயல் அதைப் பறை சாற்ற வேண்டும். இந்தப் பிரசார ரகசியத்தைத் தெரிந்து கொண்டுதான் மதத் தலைவர்கள் விபூதி இடு, நாமம் போட்டுக்கொள், குங்குமம் வைத்துக்கொள் என்றெல்லாம் செயல்முறையை வகுத்து வைத்தார்கள். மனசுக்கும் செயலுக்கும் இடையிலுள்ள திரையை எடுத்தெறியத் தெரியவேண்டும். அதில் பயத்துக்கோ

சூதுக்கோ இடமில்லே. இதைத்தான் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.'

'சொல்வதெல்லாம் சரிதான். மின்னல் ஆகாயத் தில்தான் பளிச்சென்றிருக்கும். இடியாகிப் பூமிக்கு வந்துவிட்டால், உருக்காகி விடவில்லேயா ? பூமியும் குடும்பமும் ஒன்று... தத்துவம் இருக்கட்டும், என்ன தீர்மானம் செய்தாலும் கட்டுப்படுகிறேன். வேறென்ன வேண்டும் ?'

'சரி, நாழியாகிவிட்டது. நான் போகிறேன்.'

'சரி.'

* * *

'வீட்டுக்கா ?'

'இல்லே; காப்பிப் பொடிக் கடைக்கு.'

'பொடி நன்ருக இல்லேயே ?'

'நமக்குக் கடன் கட்டில் ஆகிறது. அவருக்கு வியா பாரம் ஆகிறது. இதுதான் சிதம்பர ரகசியம் !'

'சரி போங்கோ, நான் வீட்டுக்குப் போகிறேன்.'

* * *

ஆச்சு— ஆபீஸ் காரியம், வீட்டுக்காரியம் எல்லாம் இப்பொழுதே வீட்டுக்குப் போய் என்ன செய்கிறது ? இந்தக் கேள்வியைக் காக்கை, குருவிகள் கேட்கின்ற னவா ? அதோ காக்கைகள் போகின்றன. கொக்குகள் கோடிழுத்தாற் போல் போகின்றன. அந்தப் புளிய மரம்தான் வீடு. பாதி ராத்திரியில் கத்துவதைக் கேட் டிருக்கிறேன். விழித்துக் கொண்டு காலேயோ கிளே யையோ மாற்றும்பொழுது. இந்தச் சத்தமும் சிறகுக ளின்படபடப்பும் காதில் படுகின்றன ! பாதி ராத்திரியில்

இந்தச் சத்தம் முரண்பட்டதாகத் தோன்றவில்லையே, ஏன்!...இந்தக் கொக்கு மட்டும் தனித்துப் போகிறதே! வழி தடுமாறும், தவறுமா? வானத்தில் ரஸ்தாவா போட்டிருக்கிறது? சற்றுக் குளத்தங்கரையில் தனிமையாக—

இந்த மீன்கொத்தி தனிமையாகத்தான் உட்கார்ந்திருக்கிறது! தனிமையாகவா? நல்ல கதை! தனக்குத் தானே பேசமுடிந்தால் அல்லவா தனிமை! தனக்குத் தானே பேசிக் கொண்டா இருக்கிறது? ஓவியம் தெரிந்திருந்தால், அதனுடைய வர்ண அமைப்பைக் காட்டலாம். ஆகாயத் துணுக்கு கிளை நுனியில் வந்து தூங்குகிறது. ஆனால், அந்த மூக்கு இருக்கிறதே, அதுதான் அவலக்ஷணம். அதன் வழியே குளத்துநீரைப் பார்த்துக் கொண்டே இருக்கிறதே! பொத்! தண்ணீரில் விழுந்து எழுந்திருந்து மீனைக் கொத்திக்கொண்டு வந்துவிட்டது. தனிமை குளத்தில் இல்லை. உடலைக் காற்றுட வைத்துக் கொள்வது தனிமையாகுமா? மனதைக் காற்றுட வைத்துக்கொள்ளத் தெரியவேண்டும். அந்த ரகசியம் தெரிந்துவிட்டால், வாழ்வில் உதைப்பே இருக்காது வேலை சுமையாக இருக்காது. வயிற்றைக் கேலி செய்யத் தோன்றுது. வினையும் விளையாட்டும் ஒன்ருகி விடும்; அது தெரிந்துவிட்டால் துன்பம் ஒழிந்து போகுமே!

ஆனால், இந்த நினைப்பெல்லாம் வீட்டில் எங்கே வருகிறது! மாடி, குளத்தங்கரை, கோயில் பிரகாரம், காடு, அங்கேதான் இந்த நினைப்பெல்லாம் படுத்துக் கொண்டிருக்கின்றன. வீட்டிலே சீக்கு, தரித்திரம், அறியாமை வழிகின்றன! நுரை ஈரல் இல்லாவிட்டால் ரத்தத்தின் கதி என்னுகும்?...

'என்ன இங்கே வந்து உட்கார்ந்திருக்கிறீர்களே?'

'சும்மாத்தான்.'

'சும்மா இருக்குமா?'

'என்னைப் பார்த்தால் குளத்தங்கரையில் வலைபோடுகிறவனாகவா தோணுகிறது ?'

'நான் தவறுதலாகச் சொல்லவில்லை. அபூர்வமாக இருக்கிறதே என்று சொன்னேன்.'

'முந்தி எல்லாம் ஏழு மணி வரையில் காரியாலயத்தில் வேலை செய்துகொண்டிருந்தேன். இப்பொழுது செய்ய முடியவில்லை. எங்களை எல்லாம் ஏனய்யா கெட்டவன் ஆக்குகிறீர்கள் என்று ஆபீஸில் மற்றவர்கள் சண்டை போடுகிறார்கள். நாம் பாட்டுக்கு நம்முடைய காரியத்தைப் பார்த்துக்கொண்டு போனால் கூட வம்பு வந்து விடுகிறது.'

அப்படிச் சொல்லக் கூடாது. எங்கள் வீட்டுக் கூடத்து மண்ணைத் தோண்டினால், அந்த வீட்டுக்காரனுக்கு என்னன்னு கேட்கலாமா ? உம்முடைய பாட்டில் போனால் அவன் சுவரல்லவா காய்ந்துவிடும் ?

'உண்மைதான். இப்படி எல்லாம் யோசித்து யோசித்துப் பார்த்தால், யோசித்துக்கொண்டே இருக்க வேண்டியதுதான்.'

'அதற்கு வேறு வழி இருக்கிறது. இது சில பேருக்குத் தெரிவதில்லை. பெருச்சாளித் தொல்லை சகிக்கவில்லை என்று சொல்லிக்கொண்டே இருக்கவேண்டும். மாட்டிக்கொண்டு விட்டால், இந்தப் பெருச்சாளி செய்கிற அக்ரமத்தைப் பாருங்க என்று தெளிவாகச் சொல்லத் தெரியவேண்டும்.'

'உண்மைதான். புதுப் பாடம் ரொம்ப கற்றுக் கொள்ள வேண்டி இருக்கிறது. ஆனால், புதுப்பாடம் படிக்கிற வயதுதான் தாண்டிப் போச்சு. எப்படியோ தட்டுத் தடுமாறிப் பொழுதை ஓட்டவேண்டியது. நீங்க எங்கே இங்கே வந்து சேர்ந்தீர்கள் ?'

'ஒரு பச்சிலே தேட வந்தேன்.'

'இங்கே எல்லாம் க்ரோடன்ஸ்தானே இருக்கிறது ?'

'எங்கேயாவது இருக்காதான்னு வந்தேன். தேடிஞத்தான் கிடைக்கும். கஷ்டப்பட்டால்தான் கிடைக்கும்.'

'இருட்டுகிறதே, இனிமேல் தேட முடியாதே !'

'ஆமாம் ஆமாம், வருகிறேன்.'

'நானும் புறப்பட வேண்டியதுதான்...'

எனக்கு ஒன்றும் தெரியாது என்று உபதேசம் செய்கிருர் ! பச்சிலே தேட வந்தாராம்—எனக்கா தெரியாது ! குளத்தங்கரைக்கு வந்தால், வலே போடுகிற வேலேதான் சிலருக்குத் தெரியும் ! அதனுல்தான் பாக்கிப் பேரும் அதற்காகவே வந்திருக்கிருர்கள் என்று நிஜேத்து விடுகிருர்கள். குளத்தை நல்ல குளமாகவோ கெட்ட குளமாகவோ பண்ணுவது நாம்தானே !

நம்ம தெரு ஆட்டுக்குட்டி இவ்வளவு தூரம் எங்கே வந்தது ? காலில் கட்டு ! நொண்டி நொண்டி இவ்வளவு கஷ்டப்பட்டு நடக்கிறதே ! வீட்டுக்குப் போய்ச் சேருமா ? ஆனுல், அதற்கு யாராவது கதவைத் திறக்க வேண்டுமா ? இல்லாவிட்டால் ஏன் இவ்வளவு நாழி என்று யாராவது கேட்கப் போகிருர்களா ?... என்ன படுத்துக்கொண்டு விட்டதே ! கால்வலி நடக்க முடியவில்லேபோல் இருக்கிறது. வயிற்றுக் கொடுமை இவ்வளவு தூரம் இதை இழுத்துக்கொண்டு வந்துவிட்டது. எப்படியோ வீட்டுக்கு வந்து சேராமலா போகும் ? வந்து 'மே' இன்னு கத்திஞல் போச்சு. தானே பெரிய ஆடு ஓடி வருகிறது ! ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்திலே காலொடிந்த ஆடுதான் !

ஊசி, ஆமாம்...ராத்திரி ஆச்சே, குடுப்பானே குடுக்க மாட்டானே ? கேளேன். மாமரத்தில் கல்லெறி

வதுதான் பிழைப்பு முறை. காய் விழலாம், கல் விழலாம், காயும் கல்லும் விழலாம். எப்படி இருந்தாலும் எறிந்த கல் நம் மேலே திரும்பி விழாமல் பார்த்துக் கொண்டாலே ஒரு சாமர்த்தியம்தான்...

'என்னுங்க, இரண்டு ஊசி.'

'இல்லீங்களே.'

'இவ்வளவு பெரிய ஷாப்பிலே—ராத்திரியாச்சேன்னு பார்க்குறீங்களா? அதெல்லாம் அந்தக் காலம். இப்பொழுது என்னய்யா?'

'இல்லிங்கன்னு, தத்வம் படிக்கிறீங்களே!'

'சரி; அரிசிப் பெப்பர்மெட் குடு ஓரணாவுக்கு.'

* * *

'என்னப்பா வாங்கினு வந்தே?'

'இந்தாடா பெப்பர்மெட்டு.'

'எனக்கா?'

'எல்லார்க்கும்தாண்டா.'

'போப்பா, எனக்கொண்ணும் வேண்டாம்.'

'நாளைக்கு ஒனக்கு மாத்திரம் வாங்கிக்கிண்டு வரேன்.'

'கட்டாயம் வாங்கிண்டு வரணும். ஒத்தருக்கும் தரமாட்டேன்.'

'சரி.'

'அப்பா, எனக்கு 10 மார்க்! இதோ பார் ஸ்லேட்டை!'

'ஒரு சைபர்தானே போட்டிருக்கிறது!...கணக்கா?'

'போப்பா, உனக்குக் கண் தெரியல்லே. இதோ இருக்கு பார் ஒண்ணு.'

'பேஷ்.'

'இன்னிக்கு வாத்தியார் கிளாஸிலே ஒரு கேள்வி கேட்டார். ஒருத்தருக்கும் தெரியல்லே.'

'ஒனக்கு ?'

'எனக்கு ஒண்டிக்குத்தான் தெரிஞ்சுது. மைசூர் மாட்டுக்கு எத்தனை கொம்புன்னு கேட்டார். எல்லாரும் முழிச்சா. மாட்டுக்கு மூணு கொம்பு கிடையாது சார் இன்னேன். என்னை முதல் இடத்துக்குப் போகச் சொல்லி விட்டார்.'

'பேஷ்! காலை அலம்பிக்கொண்டு வருகிறேன்.'

'தட்டும் போட்டிருக்கிறேன்.'

'இந்தா காப்பிப் பொடி.'

'நான்தான் காலம்பர வறுத்தேன் என்று சொன்னேனே !'

'அது நினைப்பில்லை. இன்னும் ஒரு வாரத்துக்குப் பிடுங்கல் இல்லாதெ போறது...இப்பொழுது சமையல் உண்டோ ?'

'சாதம் மாத்திரம் வடித்திருக்கிறேன். பாக்கி மத்யானம் செஞ்சது.'

'ஏதோ ஒண்ணு, போடு.'

'நானும் சாப்பிடுகிறேன் அப்பா.'

'இன்னும் சாப்பிடல்லியா ?'

'குண்டோதரன், இரண்டாம் தரம் சாப்பிடுகிறான். அப்பாவோடெ சாப்பிடுகிற பெருமை !'

* * *

'ஏம்பா இனிமே படுத்துக்க வேண்டியதுதானே ?'

'திருட்டுப் பயலே ! சினிமாக்கு அடி போடுகிறாயா ?'

'கூப்பிட்டாக் கூட வல்லே அப்பா.'

'சமத்து வாசல்லே போய் நொண்டி ஆடு ஒண்ணு வருதோ பாத்துட்டு வா.'

'ஆடு ஏது அப்பா ?'

'இந்தத் தெருக்கோடியிலே இருக்கு. ஆபீசுக்குப் போகிறப்போ வருகிறப்போ கண்ணிலே படும். அது நொண்டிக் காலோடே கஷ்டப்பட்டு வந்துகிண்டிருந்தது.'

ஆடு மாத்திரம்தான் கஷ்டப்படுகிறது. வெறெ ஒத்தரும் கஷ்டப்படல்லே. சாமா ! போய்ப் படுத்துக் கோடா—ஆட்டைப் பார்க்கிறுனும் !'

'நான் பாக்கத்தான் பாப்பேன். அப்பா சொல் கிறுர்...'

தெருவிலே ஆட்டைக் காணும் அப்பா. அன்னக் காவடிப் பிச்சை இருக்கான் பாரு. அவன்தான் வரு கிறுன்.'

'சரி சரி; படுத்துக்கோ.'

'நீ ?'

'இதோ...இதைப்பார் ஜமக்காளம் போடுகிறேன்...!'

'நொண்டி நொண்டி நடந்துதானே ஆகவேண்டும்! வந்துவிடும் வந்துவிடும் வீட்டுக்கு...!'

'முருகா சரணம்.'

# திண்ணைப் பேர்வழி

மலைராஜன் கோவிலுக்கு ஒரு பிரார்த்தனை செலுத்த வேண்டி இருந்தது. ஒன்றரை வருஷத்திற்கு முன்பு வலது கைக் கட்டை விரல் வீங்கிக் கொண்டு விட்டது. ஒரே வலி. மடக்கவே முடியவில்லை. ஒவ்வொரு டாக் டராகப் பார்த்து விட்டேன். மேல்நாட்டு டாக்டர் இரண்டு கோடி என்னவோ பென்ஸிலின் ஊசி வழி யாக ஏற்றினர். நாட்டு வைத்தியர் உப்பில்லாப் பத்தி யம், புளியில்லாப் பத்தியம், பால் பத்தியம், எல்லாம் வைத்து விட்டார். யூனானி வைத்தியர் பழரச மருந் தாகவே கொடுத்துப் பார்த்தார். ஒன்றுக்கும் அசைய வில்லை. பணப்பை சல்லடையானதுதான் கண்ட லாபம். எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. இவ்வள வுக்கும் பிறகு என் மனைவி ஒருநாள் நாணிக்கோணிக் கொண்டு வந்து நின்றாள்.

"என்ன சமாசாரம்" என்றேன்.

"நல்ல சமாசாரம்தான்."

"யாருக்கு ?"

"உங்களுக்குத்தான்."

"எனக்கென்ன ?"

"உங்களுக்குத்தான் தெய்வத்தினிடத்தில் நம் பிக்கை இல்லை. டாக்டர்களிடத்தில் வைத்த நம்பிக்கை இப்பொழுதுதான் பொய்யாகப் போய்விட்டது. இனி மேல் என்ன செய்யப் போகிறீர்கள் ?"

"அதுதான் எனக்குத் தெரியவில்லை."

"முப்பது வருஷத்திற்கு ஒரு நாளாவது நான் சொல்வதைக் கேளுங்களேன்."

"கேட்கிறேன்."

"ஏன் ஏது என்று கேட்கக் கூடாது."

"இல்லை."

"ஒரு ஐந்து ரூபாயை மஞ்சள் துணியில் முடி போட்டு வைத்துவிட்டு 'மலைராஜப் பாட்டா, முழங்கால் முறியவரேன்' என்று சத்யம் பண்ணுங்கள். பிறகு பாருங்கள். மலைராஜன் கோயிலுக்கு முழங்கால் முறிய தவருமல் போகணும். என்னை ஏமாற்றுவதைப்போல பாட்டாவை ஏமாற்றக் கூடாது."

"சரி" என்று சொல்லி அந்தப்படி செய்ததன் விளைவுதான் இந்தப் பயணம். மாமரத்தில் கல்லெறிந் தால் காய் விழுந்தால் லாபம், விழாவிட்டால் நஷ்டம் ஒன்றும் இல்லையல்லவா? அப்படி ஒரு நினைப்பில்தான் செய்தேன். ஒரு வாரத்திற்கெல்லாம் எனக்குச் சொஸ்த மாகி விட்டதைக் கண்டவுடன் எனக்குப் பயமே உண் டாகி விட்டது. தர்க்க அறிவுக்கு எட்டாத நிலைகளும் காரிய காரணத் தொடர்புகளும் உலகில் இருக்கக்கூடும் என்ற எண்ணம் சதா இடிக்க ஆரம்பித்து விட்டது. அதோடு பிரார்த்தனையைச் சீக்கிரம் செலுத்தி விட வேண்டும் என்ற குடைச்சலும் ஏற்பட்டு விட்டது.

நானும் மனைவியும் மலைராஜன் கோவிலுக்குப் புறப் பட்டோம். மாலை ஐந்து மணி. கோவில் சிறிய குன் றின் மேலிருந்தது. காலையில் செவ்வொளி கிழக்கே படரும் பொழுது மலை ஏறிச் சென்று சுனையில் மூழ்கிக் கோயிலில் வழிபட்டு வருவதுதான் வழக்கம். எனவே மாலையில் கோயில் அடிவாரத்துக்குப் போய் இரவைச் சத்திரத்தில் கழித்துவிட்டு, காலையில் மலையேறுவோம் என்று பயணப் பட்டோம் இரவுக்கு வேண்டிய

உணவை என் மனைவி மூட்டையாகக் கட்டி எடுத்து வந்திருந்தாள். ஏனென்றால், பாதையில் இதற்கான வசதி எதுவும் கிடையாது. சத்திரத்தில் சுவர்களும் வௌவால்களும் வழக்கமாக இருந்தனவே ஒழிய உணவு விஷயம் வழக்கொழிந்து விட்டது.

இரவு ஏழு மணி இருக்கும். சத்திரத்தைப் போய் அடைந்தோம். தெருப்புறத்தில் ஒரு லாந்தல் எரிந்து கொண்டிருந்தது.

"வாங்க" என்றது ஒரு குரல். உற்றுப் பார்த்தேன். மொட்டைத் தலையாய், கழுத்திலே கொட்டை கட்டிக் கொண்டு குன்றிலே மேகம் வீழ்ந்தாற் போல விபூதி பூசிக்கொண்டு ஒருவர் இருந்தார். "காலையிலே மலைக்குப் போகிறவர்கள் தானே" என்று கேட்டார்.

''ஆமாம்'' என்றேன்.

"ராத்திரி ஆகாரத்திற்கு வழி செய்து கொண்டு வந்திருக்கிறீர்களா ?'' என்றார்.

''உங்களுக்கும் இன்னும் ஒன்பது பேருக்கும் கொண்டு வந்திருக்கிறேன். பாட்டாவைப் பார்க்க வந்தால் ரொம்ப பரீட்சை பண்ணுவார் என்று கேள்விப் பட்டிருக்கிறேன்'' என்றாள் என் மனைவி.

அவள் சொன்னதில் ஒரு எழுத்துக்கூடப் பொய் இல்லை. சோற்று மூட்டை அவ்வளவு பலமாக இருந்தது. மூட்டை கட்டும்பொழுது எனக்கு இது வியப்பை மூட்டிற்று. இருந்தாலும் என்ன ஏது என்று கேட்கக் கூடாதென்று மனைவி கட்டளை இட்டிருந்தாளே என்று சும்மா இருந்துவிட்டேன்.

"அதற்காகச் சொல்லவில்லை. சத்திரம் என்றால் சோறுண்டு என்று நினைத்துக் கொண்டு இங்கு வந்து சிலர் கஷ்டப்பட்டுப் போகிறார்கள்'' என்றார்.

"அந்தச் சங்கடம் நமக்கில்லை. வாங்க, கைகால் கழுவிக் கொண்டு சாப்பிடலாம்'' என்றாள் மனைவி.

'டவுனுயிருந்தால் எனக்குப் பசிக்கவில்லை என்றோ, இப்பொழுது சாப்பிட்டேன் என்றோ சொல்லி இருப்பார்கள். அவர் பொய்க் கௌரவம் பாராட்டவில்லை. புரச இலை கொண்டு வருகிறேன்'' என்று நகர்ந்தார்.

''எனக்கும் போடுவீங்களா?'' என்றொரு குரல் கேட்டதும் நாங்கள் கொஞ்சம் திடுக்கிட்டுப் போய்விட்டோம். இருட்டிலிருந்து குரல் வந்தால் எப்படி இருக்கும்? ஒரு சில நிமிஷம் இருட்டில் கண்ணால் துளாவினோம். பிறகுதான் திண்ணையில் தூண் மீது ஒருவர் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தது கண்ணில் பட்டது.

"ஓ, வாங்கோ'' என்றாள் மனைவி. அவர் உடனே எழுந்து வந்து விட்டார். லாந்தல் விளக்கின் ஒளியில் அவர் முகம் நன்றாகத் தெரிந்தது. நார் பிய்க்காத தேங்காயைப் போல் அவர் முகம் இருந்தது. அந்த அரை ஒளியில்கூட கண்களில் ஒரு வெறி தெறித்தது. அவர் உடை குடுகுடுப்பாண்டிக்காரன் மாதிரி இருந்தது. அவரைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் எழுந்தது. ஆனால் யாரைக் கேட்பது என்று நினைத்துக் கொண்டிருக்கும் பொழுதே கொட்டை கட்டி புரச இலைகளை எடுத்துக்கொண்டு வந்து விட்டார்.

சத்திரத்து முற்றத்தின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு எல்லோருமாகச் சாப்பிட உட்கார்ந்தோம்.

சாப்பிட இந்த ஆளும் வந்துவிட்டானே என்றோ என்னவோ, கொட்டை கட்டி ஒரு வார்த்தையும் பேசவில்லை. அந்த ஆளும், சாப்பிடுவதற்கு வாயைத் திறந்தானே ஒழியப் பேசுவதற்குத் திறக்கவில்லை. இருவரும் எதுவும் பேசாமலிருந்தது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது. அதற்காக என்னால் பேச வைக்க முடியுமா? சும்மா நானும் சாப்பிட்டேன்.

சாப்பாடு முடிந்ததும் கொட்டை கட்டி கஞ்சாப் பையை எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தார். அந்த ஆள் திண்ணைக்குப் போய்விட்டார். கஞ்சாக் குடிக்கும் இடத்தில் எனக்கு வேலை கிடையாது. தெருப் புறத்துத் திண்ணையில் வந்து உட்கார்ந்தேன். என் மனையும் கூடவே வந்து உட்கார்ந்தாள்

எதிரே மலைராஜன் கோவில் இருள் சித்திரமாக வானத்தில் படர்ந்து கிடந்தது. எதிர்த்தாற்போல் இங் கொன்றும் அங்கொன்றுமாக வேப்பமரம் தென்பட்டது. எங்கு கண்டாலும் பாறைகள் !

இப்படி நோட்டம் பார்த்துக்கொண்டே இருந்தேன்.

"பாட்டாவைப் பார்க்க வந்தீங்களா ?" என்றார் திண்ணையிலிருந்த பேர்வழி.

"ஆமாம்....நீங்கள் ?" என்றேன்.

"நான் ஐந்து வருஷமாப் பாட்டாவைப் பார்த்துக் கொண்டு இங்கேயேதான் இருக்கிறேன்."

"கொடுத்து வைத்தவா, கவலை இல்லாமல் இருக்கிறீர்கள்" என்று குறுக்கிட்டாள் மனைவி.

"இன்னம் கொடுக்கவில்லை" என்று அவர் பதில் சொன்னது எனக்குப் பொருத்தமாகப் படவில்லை.

"யார் என்ன கொடுக்க வேண்டும் ?" என்றேன்.

"பாட்டா வரம் கொடுக்கவில்லை" என்று அந்த ஆள் குன்றை நோக்கி வலது கையை நீட்டினார்.

"இவருக்கே வரம் கொடுத்துவிட்டாரே" என்று என் மனைவி என்னைக் காட்டி, கையைச் சேர்த்துக் கும்பிட்டாள்.

"என் சமாசாரம் அப்படி இல்லையே, லேசா வரம் கிடைக்க ?"

"அப்படி என்றால் ?" என்றேன்.

"சொல்கிறேன் கேளுங்க" என்று ஆரம்பித்தார்.

'என் பேர் மல்லி. எனக்கு ரெண்டு அண்ணன்மார்கள் உண்டு. அக்கச்சி தங்கச்சி இல்லே. எங்க ஆயா செத்தது எனக்குத் தெரியாது. நாலஞ்சு வயதுப் பையஞ இருந்திருப்பேன்; எங்க அப்பாருதான் எங்களை எல்லாம் கவனித்துக் கொண்டிருந்தார். நாங்கள்தான் சோருக்கிக் கொண்டு வீட்டிலிருந்தோம். அரி நமோ கூட எங்களைப் படிக்க வைக்கவில்லை. போவுது. ஒரு தொழிலாவது கற்றுக் கொடுத்தாரா என்ருல் அதுவும் இல்லே. அவருக்கு ஏதேனும் தொழில் தெரிந்தால் தானே ?"

"பின்னே செலவுக்கு" என்று தடுத்துக் கேட்டேன்.

"அதுதான் எங்களுக்குப் புரியவே இல்லே. அவர் சில நாள் பகலில் வீட்டிலிருப்பார். சில நாள் ஊரில் இருக்க மாட்டார். எங்கே போகிருர், என்ன செய்கிருர் என்று எங்கள் ஒருவருக்கும் தெரியாது. அவ்வப்பொழுது ஏதாவது பணம் கொண்டு வந்து கொடுப்பார் அதை வைத்துக் கொண்டு காலத்தை ஓட்டிக்கொண்டிருந்தோம். இதில் ஆச்சர்யம் என்னவென்ருல் எங்கள் ஒருவருக்கும் பிழைக்க வழி பார்க்க வேண்டுமென்று தோன்றவில்லை. சோருக்குவது, தின்பது, ஊர் சுத்துவது, வம்பிழுப்பது—இதுவே சொர்க்கம் போல இருந்தது. எப்பொழுதாவது எங்க ஐயாவைப்பற்றிப் பேசிப் பார்ப்போம். அவர் சில்லரைத் திருட்டுக் கோஷ்டி ஒன்றைச் சேர்ந்தவர் என்ற எண்ணம் மட்டும் எல்லோருக்கும் ஏற்பட்டது. அதற்குப் போலீஸ் விசாரணை, கோர்ட்டு, தண்டனை ஆகிய ருசு ஒன்றும் கிடையாது. சில சமயம் கையில் கட்டும் இரண்டு முழங்காலில் சிராய்ப்பும் தலையில் பிளாஸ்திரியுமா அவர் காட்சி கொடுப்பார். அதைக் கொண்டுதான் இப்படி நினைத்தோம்."

"இப்பொழுது இருக்கிறாரா ?" என்றாள் என் மனைவி.

"அதைத்தான் சொல்ல வருகிறேன். ஒருநாள் வழக்கம் போல் ராத்திரி வீட்டை விட்டுப் போனவர் திரும்பவே இல்லை. ஒரு வாரமாச்சு. ஒரு மாதமாச்சு. வரவே இல்லை. ஒரு வள்ளுவரைக் கேட்டோம். போனது வராது என்று சொல்லிவிட்டார்.

"ஒரு வருஷம் பார்த்து விட்டோம். அப்பவும் வரவில்லை. வள்ளுவர் சொன்னது சரியாகிவிட்டது என்று சட்டி உடைத்துக் கருமாதி செய்து விட்டோம் !"

"அதற்குப் பிறகு ?"

"அதற்குப் பிறகென்ன ? நாங்களும் சில்லரைத் திருட்டை இதற்கு முன்பே ஆரம்பித்திருந்தோம்."

"ஊம்."

"இந்தச் சில்லரைத் திருட்டு அலுத்துப்போக ஆரம்பித்து விட்டது. நாங்கள் மூன்று பேருமாக யோசித்து ஒரு முடிவு கட்டினோம். திருடுவதைவிட ஏமாற்றுவது தான் நல்லதென்று தீர்மானம் செய்து அந்தப் பாதை வழியே செல்ல ஆரம்பித்துவிட்டோம். எங்கள் திட்டம் எப்படி என்றால் கிராமாந்திரப் பக்கங்களில் போகும் பெரிய சாலைகளில் மதகடியில் அங்கே அங்கே தனியாகப் போகக் கூடாது. பயம் என்று பேர்வாங்கின சாலைகளாக ஜாப்தா எடுத்தோம். ஒரு வாரத்திற்கு ஒரு ரஸ்தாவுக்குப் போவோம். ரஸ்தாவிலே, குறிப்பாக, கலியாண காலத்திலே அடுத்த ஊர் பக்கத்து டவுனுக்கு நடந்து போகுமே அந்தக் கோஷ்டியிலே முதலில் நான் போய்ச் சேருவேன். தலையை நன்றாக மொட்டை அடித்துக்கொண்டு, அறுத்துப் போன செட்டி கைம்பெண்ணாக வேஷம் போட்டுக்கொண்டு கோஷ்டியில் போய்ச் சேருவேன்.

அடுத்த ஊருக்குப் போகவேண்டும். அந்த அஞ்சு தலை வாய்க்கால் மதகு கிட்டே பயம். மடியில் கொஞ்சம் வைத்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் துணையோடு வருகிறேன்' என்பேன்.

என் பேச்சு அவர்களுக்குத் தெம்பாக இருக்கும். அந்தச் சமயத்திலே அண்ணன் வில்லி வருவான்.

'சும்மா பயப்படாதீங்க. மீசைக்காரன் என்றால் இந்த ரோட்டிலே இருக்கிற மரம்கூட நடுங்கணுமாக்கும்' என்று வில்லி மீசையைத் திருகி விடுவான்.

வில்லி வாட்டசாட்டமாக இருப்பான். மதுரைவீரன் கூட இவனை எதிர்க்கமுடியாது போலிருக்கும். கலியாணக் கோஷ்டிக்குச் சுத்தமாகப் பயம் தெளிந்து போய் விடும். கலகலப்பாய் இருக்கும் சமயம் பார்த்து 'கழுத்திலே இருக்கிறதை மட்டும் செட்டிச்சி அம்மாகிட்ட கொடுத்து வைங்க. மதகடி தாண்டின கையோடே வாங்கிக்கொண்டுவிடலாம். முன் ஜாக்கிரதையாக இருப்பதிலே பிசகென்ன?' என்று பழுத்த கிழவனைப்போல் யோசனை சொல்லுவான். நல்ல யோசனை என்று கழுத்தில் இருப்பதை எல்லாம் எடுத்து என்னிடம் கொடுத்துவிடுவார்கள். நான் இடுப்பில் கட்டிக்கொண்டு பத்திரப் படுத்தி விடுவேன். மதகடிக்கு நாங்கள் வரும் சமயம் பார்த்து மற்றொரு அண்ணன் கல்லி ஐந்தாறு ஆளுடன் தடியும் கம்புமாக அட்டகாசமாகச் சாலையில் குறுக்கிடுவான். கேட்கவேண்டுமா? குய்யோ முறையோ என்று கூட்டத்தில் உள்ளவர்கள் கத்துவார்கள். ஒவ்வொரு பெண் பிள்ளை கழுத்தாப் பார்ப்பதுபோல் பாசாங்கு செய்வான். முடிவில் 'தரித்திரக் கும்பல்! நகையா நட்டா! ஒண்ணும் கிடையாது. புடவையைக் கட்டிக்கிட்டு மினுக்குறாங்க! 'நிக்காதிங்க, ஓடுங்க' என்று தடிக் கம்பை ஓங்குவான். கும்பல் செத்தேன் பிழைத்தேன் என்று ஓடிவிடும். இந்தக் கலவரத்தில் நான் மட்டும் மெதுவாக நகர்ந்து மரமோ

புதரோ எங்கோ ஒளிந்துகொண்டுவிடுவேன். என் இடத்தில் அகப்பட்ட நகைகளை வைத்துக்கொண்டு கொஞ்ச நாள் ஓட்டுவோம். இருக்கிறது தீர்ந்து போவதற்கு முன்னாலே வேறு ஒரு ரஸ்தாவுக்குப் போவோம். அங்கேயும் இதே கதை! இப்படியே எங்கள் பொழுது போய்க் கொண்டிருந்தது.''

''அது சரி, வில்லியும் கல்லியும் இப்பொழுது எங்கே?'' என்று ஆச்சர்யத்துடன் கேட்டேன்.

''அதைத்தான் சொல்லுகிறேனே'' என்று திண்ணைப் பேர்வழி தொடர்ந்தார். ''ஐந்து வருஷத்திற்கு முன்பு ஒரு நாள் இந்த மலைராஜன் கோவில் சாலையைக் குறி வைத்துவிட்டு நாங்கள் தயாராகிவிட்டோம். இப்பொழுது இருப்பதுபோல் அப்பொழுது இல்லை. எங்கேயும் மரமும் இருட்டுமா இருக்கும் ?

ஒரு கோஷ்டி காலையிலே மலைராஜன் கோவிலுக்குப் போய்க்கொண்டிருந்தது. நான் வழக்கம்போல செட்டிக் கைம்பெண் போல வேஷம் போட்டுக்கொண்டு கும்பலில் சேர்ந்து என் பாடத்தை ஒப்பித்தேன். அந்தக் கும்பலில் ஒரு அரைப் பைத்தியம் இருந்தது எனக்குத் தெரியாது. அவன் ஏதோ பக்தியினால் பாடிக்கொண்டு வருகிறான் என்றுதான் நினைத்துக்கொண்டிருந்தேன். அந்த அரைப் பயித்தியம் கையில் ஒரு இரும்புத் தடியை வைத்துக்கொண்டு சுழற்றுவதும் அடிபோடுவதுமாக வந்தான். வழக்கம்போல வில்லி குடியானவன் மாதிரி வந்து இவர்களுக்குத் தைரியம் சொன்னான். இதைக் கேட்டுக்கொண்டிருந்த அரைப் பயித்தியத்திற்குக் கிறுக்குக் கிளம்ப ஆரம்பித்துவிட்டது. 'வீரபத்திரன் கிட்டெ மதுரை வீரன் பாச்சா பலிக்காதுடா' என்று ஏதோ கூச்சலிட்டான். எனக்கும் புரியவில்லை. வில்லிக்கும் புரியவில்லை. அதற்குப் பிறகு 'நகையைக் கழற்றி பந்தோபஸ்துக்காக ஆச்சி இடம் கொடுத்து வைங்க'

என்று சொன்ன கட்டத்திலே என்ன நடந்தது என்றே தெரியவில்லை. 'வீரபத்திரன் காவல் இருக்கிறபோது நீ வந்து வாலாட்டுகிறாயா' என்று இரும்புக் கழியால் வில்லி மண்டையில் ஒரு போடு போட்டுவிட்டான் அந்த அரைப் பைத்தியம். மண்டை உடைந்தே போய்விட்டது. அதோடு நிற்கவில்லை திடீரென்று கல்லி ஆளும் கம்புமாக அந்த இடத்தில் முளைத்து அட்டகாசம் பண்ணத் துவங்கிவிட்டான். பைத்தியம் எழும்பி எழும்பிக் குதித்து கல்லியையும் மற்றவர்களையும் தாக்கினான். கல்லியின் தலையிலும் தோளிலும் பலத்த அடி இரும்புக் கழியினால். கல்லிக்கும் வில்லி மாதிரியே ஆகி விட்டது. நான் வாயைத் திறக்கலாமா? ஊமையைப் போல் நின்றுகொண்டிருந்தேன். அதற்குள் கூட்டத்தில் இருந்த ஆண்பிள்ளைகள் சாமி கும்பிடச் சகுனம் சரியாக இல்லை திரும்பிப் போயிடுவோமின்னு புறப்பட்டுப் போயிட்டாங்க. எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. கொஞ்ச தூரம் விலகிப் போய் ஒரு புதருக்குப் பின்னாலே ஒளிந்து கொண்டு உட்கார்ந்தேன். இவர்கள் எல்லாம் போனபிறகு திரும்பி வந்து எங்க ஆள்களைப் பார்த்தேன். இரண்டு பேரும் பரிதாபமாக அடிபட்டுக் கிடந்தார்கள். பக்கத்தில் ஈ குருவி கிடையாது. என்ன செய்வதென்றே புரியவில்லை. விலகிப்போய் ஒரு புதர் மறைவில் உட்கார்ந்துகொண்டு விட்டேன்.

பாதி ராத்திரிக்கு மேலே இரண்டு குதிரை வண்டியிலே போலீஸ்காரங்க வந்தாங்க. இவர்களை வண்டியிலே எடுத்துப் போட்டுக்கொண்டு போய்விட்டார்கள். நான் எப்படிக் குதிரை வண்டிக்குப் பின்னால் போவது? மறுநாள் பொழுது விடிந்த பிறகு ஊருக்குத் திரும்பினேன். உச்சிப்பொழுதுக்குப் பிறகு ஊர் ஆஸ்பத்திரியிலே போய் வட்டமிட்டேன். இரண்டு பேரும் இரண்டு இடத்திலே கட்டிலில் கிடந்தார்கள். இப்பொழுது அந்தக் கதை எதற்கு? ஒரு வாரத்திலே இரண்டுபேரும்

போயிட்டான்கள். அனுதிப் பிணம் என்று ஆஸ்பத்திரிக்காரர்கள் அடக்கம் செய்துவிட்டார்கள் செத்துப் போய்விட்டபடியால் போலீசார் திருட்டு வழக்கையும் கைவிட்டுவிட்டார்கள்.

நான் மிஞ்சினேன். எனக்கு மலைராஜன் கோவில் பாட்டா மேலே ஒரே கோபம். மூணுபேர் தப்பு செய்தால் இரண்டு பேரைத் தண்டித்தது சரியா என்று கேட்டுக்கொண்டே இந்த மலை அடிவாரத்திற்கு அப்பொழுது வந்ததுதான். இன்னும் எனக்கு வரம் கொடுக்கவில்லை. எப்பொழுது கொடுக்கப் போகிருரோ?'' என்று நிறுத்திஞன்.

எனக்கும் என் மனைவிக்கும் மனத்தில் சமாதானமில்லை. ஒருவர் மற்றவரைப் பார்த்துக்கொண்டே இருந்தோம்.

"நான் கேட்கிற கேள்வி சரியா இல்லையா யோசியுங்க. இதோ வாறேன்'' என்று திண்ணைப் பேர்வழி எங்கோ இறங்கிப் போனுர்.

"கதை கேட்டீங்களா'' என்று வினவிக்கொண்டே கொட்டை கட்டி சத்திரத்திற்குள்ளிருந்து வந்தார்.

''இவர் சொல்றது நிஜமா?'' என்று கேட்டேன்.

"பாட்டாவுக்குத்தான் தெரியும். இந்த ஆள் இங்கேயே இருக்கிறுன். யாராவது இங்கு வரும்போது சோறு கேட்கிறுன். கொடுத்தால் வாங்கித் தின்கிறுன். இல்லை என்ருல் என்னை வந்து கேட்பதில்லை. திண்ணையிலேயே உட்கார்ந்திருக்கிறுன். மலை ஏறிப் போவதும் இல்லை."

"இல்லாவிட்டால் இவனுக்குப் பயித்தியமாக இருக்குமா?'' என்ருள் மனைவி.

"யாருக்குப் பயித்தியம், யாருக்கு இல்லை என்று அவ்வளவு சுளுவாகச் சொல்லிவிட முடியுமா? அது பாட்டாவுக்குத்தான் தெரியும்"

"வெளிச்சத்திலே பார்த்துச் சொல்லி விடலாமே?" என்றேன்.

"விடிஞ்ச பிறகு பார்த்துச் சொல்லுங்கள்" என்று கொட்டை கட்டி சத்திரத்திற்குள் ஒரு அங்கணத்தைக் காட்டி, படுத்துக்கொள்ளச் சொல்லிவிட்டுத் தானும் படுத்துக் கொண்டான்.

மறுநாள் எழுந்து திண்ணைப் பேர்வழியைப் பார்த்தேன். காணோம். அவனைத் தேடிக்கொண்டிருந்தால் மலை ஏறுவது கெட்டுவிடுமே என்று கோவிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செலுத்திவிட்டுத் திரும்பினேன். திரும்புகாலிலும் அவன் என் கண்ணில் தடடுப் பட வில்லை.

ஒவ்வொரு நாள் தூங்கப் போகுமுன் மலைராஜன் கோவில் கண் முன் எழுகிறது. அடிவாரத்தில் திண்ணைப் பேர்வழி திரிந்துகொண்டிருக்கிறன் ஆனல், அவன் எத்தனு? பயித்தியமா? என்ற விஷயம் மட்டும் எனக்குத் தெளிவாக வில்லை. உங்களுக்கு ஆகிறதா?

# விவசாய ராமாயணம்

பேராசிரியர் சாரதியை நாஸ்திகர் என்று சொல்ல முடியாது. நாள் தவருமல் ராமாயணத்தைப் படிப்ப வரை நாஸ்திகர் என்று எப்படிச் சொல்லலாம்? அதற் காகக் குருட்டு ஆஸ்திகர் என்றும் பட்டம் கட்டிவிட முடியவில்லை. ராமாயணத்தைத் தினம் தவருமல் படித்து வந்தாலும், முழுகிவிட்டுத்தான் படிப்பதென்ற நியமம் கிடையாது. காலையில் தான் படிப்பதென்ற விதியும் கிடையாது. காண்டம் காண்டமாகத் தொடர்ந்து படிப்பதென்ற நெறியும் இல்லை. படித்த தற்கு அடையாளமாகக்கூட அவர் நூலை ராமாயணத் தில் போடுவதில்லை பின் ஏன் இந்தக் கற்பனையில் அவ்வளவு லயிப்பு? அவரை அறிவென்னும் ஒரு குளவி சதா கொட்டிக் கொண்டே இருந்தது. ஏதேனும் புத்த கத்தைப் படிக்காமல் அவரால் சும்மா இருக்க முடி யாது—கல்லூரிக்குப் போகும் நேரம், சாப்பிடும் நேரம், தூங்கும் நேரம் தவிர இப்படிப் படிக்கும் புத்தகங்களில் இரண்டாந் தடவை, மூன்ருந் தடவை, நான்காந் தடவை என்று படிக்கக்கூடிய புத்தகங்கள் எவை என்று கண்டு பிடிப்பது இவருடைய அறிவியக்கத்தின் பொழுது போக்குகளில் ஒன்று. அவருடைய பரீட்சைகளில் முத லாவதாகத் தேறிய நூல்தான் ராமாயணம்! எந்தக் குறிப்பிட்ட ராமாயணமும் அன்று; ஒவ்வொரு ராமா யணமும் ஒன்றைவிட ஒன்று நயமாக இருந்தது.

முதலாவதாக, ஆண்களின் அடிப்படையான பல வீனங்களையும், மனிதனுக்கு இருக்கவேண்டிய பண்பு களையும் தேக்கிய மன இயல் கருவூலமாக அது இருந்

தது. பிற பெண்ணைப் பார்த்து ஆண் பல்லிளித்தான் என்று சொன்ன ஆதி கவி யார் — ராமாயணத்தை எழுதியவனன்றி? இரண்டாவதாக, படிக்கும்தோறும் புதுப் புதுக் கருத்துக்கள் தோன்றுவதற்குகந்த முறையில், அது இயற்கையாக அமைந்திருந்தது. தவிர, எல்லாவித ரஸங்களும் நயங்களும் நூலில் தளும்பிக் கொண்டிருந்தன. சொல்லழகும் ஒலி நெறியும் காவியக் கடலாக அலை வீசிக்கொண்டிருந்தன. எனவே, தினம் தவறாமல் படிப்பார் ஏதேனும் ஒரு ராமாயணத்தை விரதமல்ல; ஆனால் தவறமாட்டார்!

அன்றும் வழக்கம் போலப் பேராசிரியர் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார்...

"மிதிலையில் குடியானவன் வயலில் உழுதுகொண்டிருந்தான். உழவுகால் ஆழமாக விழுந்துகொண்டிருந்தது. கொழுமுனைக் கம்பி பதியப் பதியக் களிமண் இருகங்கிலும் நெளிந்து புரண்டது. வயலின் குபேர மூலையில் உழும்பொழுது, உழவுகாலின் அடியில் ஏதோ ஒரு பொருள் தட்டுப்பட்டது. குடியானவன் அதை வியப்புடன் சோதித்தான். ஒரு பெட்டி! வெளியே பெட்டியை இழுத்து, படபடக்கும் நெஞ்சுடன் திறந்து பார்த்தான். தங்க விக்ரகத்தைப் போன்ற பெண் குழந்தை மேகத்தில் பட்ட ஒளிக் கதிர்போல் சிரித்துக் கொண்டிருந்தது! இந்த அதிசயத்தைக் கண்ட குடியானவன் நினைவை இழந்தான். இக் குழந்தையின் பெயர்தான் *சீதை!...*"

*சீதை! உழவு சால்! கொழுக் கம்பி! கொழுக் கம்பி! சீதை! சீதை என்றாலே உழவு சால், கொழுக் கம்பி* என்றுதானே பொருள்? இவ்வளவு வருஷமாகப் புத்தியில் இது படாமல் போய்விட்டதே? கொழுமுனையின் நுனியில் கிடைத்தவள் *சீதை!* உழவு சாலில் கிடைத்தவள் *சீதை—சீதா*தேவி. அதாவது *சீ*தேவி...

வயலில் சீதை தோன்றி விட்டாள். ஒவ்வொரு நெற் கதிரும் சடைத்துக் கனத்து, தலை சாய்த்து, சூல் கொண்ட பெண்ணைப் போல் வரப்பில் தலை வைத்துப் படுத்திருந்தது. சீதை மாயையின் அவதாரம்! மாயை என்றால் ஓரிடத்துடன் நின்றுவிடாமல், ஒரே காலத்தில் உலகெங்கும் உள்ளும் புறமும் ஊடுருவி நிற்கும் சக்தி தானே! அந்தக் குடியானவன் வயலில் மட்டும் நெல் விளைய வில்லை. ஊரெங்கும்! உலகெங்கும்!...

அறுப்பாகி விட்டது. களத்தில் குடியானவன் காவல் படுத்திருந்தான். அம்பாரமாகத் திடலில் சேர் கட்டியிருந்தது. குடியானவன் நெஞ்சில் மகிழ்ச்சி அலை புரண்டு கொண்டிருந்தது. பெண்சாதி, பிள்ளை குட்டிகளுக்கு ஒரு வருஷத்திற்குக் கவலை இல்லை. புதுப் புடவை கட்டிய பொன்னம்மாவின் தயவினால், கண்ணீர் விட வேண்டாம். கடன்காரனைக் கெஞ்ச வேண்டாம்!...

"இலங்காபுரி மன்னனான தசகண்ட ராவணனுக்குச் சீதையின் பேரழகைப் பற்றிய செய்தி எட்டியது நெஞ்சில் காமம் எழுந்தது. அவளை அடையாமல் விடுவதில்லை என்று கங்கணம் கட்டிக் கொண்டான்..."

குடியானவன் களத்தில் காவல். இருட்டில்லை; சந்திரன் இருந்தான். ஆனால், நிலவில்லை. நெற் சேர்கள் பனிப் புகையில் நிற்கும் யானைகளைப் போலிருந்தன...

முதல் குரல்: சுகந்தானா?

குடியானவன்: யாரு, நீங்களா?

முதல் குரல்: நான்தான். என்னை ஏன் எதிர் பார்க்கப் போகிறாய்?

குடியானவன்: நல்லாச் சொன்னீங்க! உங்களை எதிர்பார்க்காமே முடியுமா? தாய்க்கு ஒளிச்ச சூலுண்டுங்களா?

முதல் குரல்: குத்தகை நெல் சமாசாரம் என்னவென்று பார்க்க வந்தேன். வரள் சேதம், வெள்ளச் சேதம், ராஜீகம், தெய்வீகம் என்கிற கதைதானு? அல்லது—

குடியானவன் : அதென்ன, அப்படிச் சொல்றீங்க?

முதல் குரல் : அப்படி என்ருல் வண்டியைக் கட்டி அனுப்பலாமா ?

குடியானவன் : குசாலா அளந்துகிட்டுப் போங்க...

இரண்டாங் குரல் : ஏன் தம்பி ! குத்தகை நெல்லை மத்தியூர்க்காரரிடம் அளந்து விட்டாயா ?

குடியானவன் : எப்பவே அளந்தூட்டேன் ! போன வெள்ளிக்கிழமை சாயங்காலமா நெல்லை அளந்து மூட்டையிலே கட்டித் தெச்சு வண்டியிலே ஏத்திவிட்டேங்களே. கோழி கூவுறப்போ வந்திருக்குமே !

இரண்டாவது குரல் : வரவில்லையே ?

குடியானவன் : குத்தகைக்காரர் நல்லவ ராச்சுங்களே !

இரண்டாம் குரல் : நல்லவர் தான். அடித்துக் கேட்டால் 'ஆறும் மூணும் ஒன்பதுதானே. நாலும் அஞ்சும் ஒன்பதுதானே, இரண்டும் ஏழும் ஒன்பதுதானே' என்று கதை படிக்கிருர். 'படுகை வயல் நெல்லை அரிக்காய்ச்சல் போட்டிருக்கிறேன். சாப்பாட்டுக்கு அனுப்பலாமின்னு நெனைச்சேன். அது வேண்டாம். இந்த வயல் நெல்லுத் தான் வேணுமின்ஞ நாளைக்கே அனுப்பிக்கறேன்' என்று பயமுறுத்தராரு.

குடியானவன் . முள்ளிலே துணியைக் காய வச்சால் எடுக்கிறது சங்கடமின்னு எங்க ஐயா சொல்லுவாரு.

இரண்டாங் குரல் : அப்பொழுது நீயே நேரே குத்தகைக்கு எடுத்துக்க.

குடியானவன் : யானையைக் கட்டித் தீனி போட நம்மாலே ஆவுங்களா ? அதுக்கெல்லாம் முதல் யாரு வச்சுக்கிட்டிருக்காங்க ? ஒரு ஜோடி ஔவு மாட்டுக்கே வளி இல்லீங்களே !

இரண்டாங் குரல் : வயல் வாசல் எல்லாம் வேதனை யாய்ப் போச்சு. குடுக்கிற கைக்கும் சாப்பிடுகிற வாய்க் கும் இடையிலே கிண்டியிலே துரும்பு புகுந்தாற் போல ஆகிவிட்டது. நிலமும் ஆச்சு, நீச்சும் ஆச்சு என்று கசந்து போச்சு...

மூன்ருவது குரல் : ஏய் ! யாரங்கே ?

குடியானவன் : நான்தானுங்க. கிராம முன்சீப் அய்யாங்களா...வாங்க, வாங்க.

மூன்ருவது குரல் : முதலாளி உனக்கு ஒரு சீட்டு கொடுத்தார். இந்தா.

குடியானவன் : எனக்குக் கண்ணேதுங்க ? படிக் கத் தெரியுமா, ஒண்ணு! நீங்கதான் சொல்லுங்க. பொய்யா சொல்லப் போறீங்க ?

மூன்ருவது குரல் : முதலாளி சர்க்காருக்குக் கிஸ்தி கட்டணுமில்லே? அதுக்கு நெல்லை உன்கிட்டே பிடிச்சு, வித்துப் பணம் கட்டிக்க இன்னு என்கிட்டே சொல்லிப் பிட்டாரு. உன்னை நெல்லை அளக்கச் சொல்லி எழுதி இருக்கிருரு.

குடியானவன் : என்னையா ? இருக்காதுங்களே !

மூன்ருவது குரல் : அப்பொ நான் பொய் சொல் றேனு ?

குடியானவன் : ஒங்களைச் சொல்வேனு ? அவரு இப்பத்தானே வந்தூட்டுப் போருரு. வெள்ளிக் கிழமையே நெல்லைக் குத்தகைக்காரருக்கு அளந்துட்

டேன் இன்னு சொன்னேனே? நெல் அளக்காம குத்தகைக்காரர் அழுச்சாட்டியம் பண்ருன் இன்ருரே!

மூன்ருவது குரல்: யாரை நம்புவது என்று தெரியவில்லை. ஒரே சூதும் வாதுமாய் இருக்கு. கிஸ்திப் பணத்துக்கு நெல்லைப் போடச் சொல்லு. குடுக்கல்லேன்ஞ அம்பாரத்தைக் கிஸ்திக்கு ஜப்தி பண்ணிக்கிடச் சொல்லிப்பிட்டாரு. நெல்லு தர்றியா, ஜப்தி பண்ணட்டா?...ஒரே வார்த்தை சொல்லிடு...

நான்காவது குரல்: என்ன அண்ணே! இந்த வாட்டி ஒனக்கு நல்ல வேட்டைதான்னு சொல்லிக்கிட்டாங்களே! மாவுக்கு இருவது கண்டிருக்குமா?

குடியானவன்: மாவுக்குக் கண்டிருக்கு. நமக்குக் காண வேண்டாமா?

நான்காவது குரல்: ஏன் அவ்வளவு அலுப்பு சலுப்பு?

குடியானவன்: பொழைப்பை நெனைச்சுக்கிட்டால், அப்படி இருக்கு. வவுறு அன்னி அன்னிக்குக் கணக்குக் கேக்குது. கையிலே இருந்தால் வம்பு இல்லாமல் போவுது. இல்லாட்டி கடன் வாங்கிக்கிறேரும். கடன் வாங்கறதோடெ ஏழு வருஷத்துக்குத் தண்ணியிலே முழுகிச் சாகாமெ இருக்கிறேன் இன்னு செப்புப் பட்டயம் வேறே எழுதிக் குடுத்து விடுகிறேரும்.

நான்காவது குரல்: இதெல்லாம் பழங்கதை அல்ல? மீன் கடலிலே பொழச்சுத்தானே ஆகணும்? தள்ளு குப்பை! விதை நெல்லேனும் கட்டிப் போட்டியா, இல்லாட்டி—

குடியானவன்: எப்படியோ அதை மட்டும் ஒரு மட்டிலே கட்டிப் போட்டுட்டேன். இனிமேல் ஆண்டவன் விட்ட வழி.

ஐந்தாவது குரல் : நீ என்ன, ஆளப்பா ! அறுவடையோடெ கணக்கைத் தீத்துப்புடரேன் இன்னே. சமயத்துக்குக் குடுத்தேன். இல்லாட்டி ஒன்னே நம்பி யார் வெதைநெல் குடுத்திருப்பாங்க? இப்பொ வருஷம் மூணு ஆவப் போவுது, வட்டியிலாவது ஒரு சல்லி கொடுத்தியா? குடுத்து வச்சவங்கபோல வாங்கிக் கிட்டுப் போறீங்க திருப்பி வாங்க ஒன்பது நூறு நடை ஒங்களைத் தேடிக்கிட்டு வரணும். அப்பிடியாச் சும் வருதா? வட்டி கிடையாதுன்னு சர்க்காரு சட்டம் செஞ்சிப்பிட்டாங்க. அப்பிடி இப்பிடி—இந்த லேவா தேவியையே ஒழிச்சுப்புடச் சட்டம் வந்தாத்தான் உசுரு மிஞ்சும் போல ஆயிடுச்சு.

குடியானவன் : அப்படி எல்லாம் சொல்லாதீங்க. தினம் ஒருவாட்டி எங்களைப் போல இருக்கிறவங்க ஒங்களை எல்லாம கும்பிட்டுக்கிட்டு இருக்கிறோமே...

பல குரல்கள் போட்டி இடுகின்றன. கலியாணம், கல்லடுப்பு, சீக்கு, பூஜை...

குடியானவன் : இவ்வளவு குரல்களுமாக எங்கள் குரல் வளையைப் பிடித்தால்...

* * *

ராவணன் சீதையைக் கவர்ந்து சென்றுவிட்டதை அறிந்த ராமனுக்கு இன்னது செய்வதென்றே தெரியவில்லை. உயிரிழந்த உடலைப் போல வாடிவிட்டான். ஈரேழு பதினான்கு உலகத்தில் இருந்தாலும் கண்டுபிடித்துத் தருகிறேன் என்று ஹனுமான் உறுதி கூறி எழுந்தான்..."

* * *

குடியானவன் புரண்டு படுத்துக் கொண்டான். ஆனால் அறுவடைக்கு முன்னம் இருந்த மகிழ்ச்சி இப்

பொழுது இல்லை. இவ்வளவு கஷ்டப்பட்டும் அன்று இருந்த நிலைமைக்கு அழிவில்லாமல்தான் இருந்தான். ஆனால் அவன் கவலைப்படவில்லை அவனுடைய பலமெல்லாம் அவன் கைதானே! கையை யாரும் திருடிக் கொண்டு போய்விட வில்லையே!...

குளத்தங்கரைத் தோப்பில் மீன் கொத்தி உள்பட பறவைகள் குரல கொடுத்துச் சூரியனை வரவேற்றுக் கொண்டிருந்தன. குடியானவனால் வரவேற்றுப் புகழ முடியவில்லை. இருந்தாலும், பகலுக்கும் கைக்குந்தானே உறவு! எழுந்து உட்கார்ந்தான். "இப்பத்தான் எந்திருச்சீங்களா?" என்று கேட்டுக் கொண்டே அவன் மனைவி அவன்முன் தோன்றினாள்.

"சின்ன ராஜா தோட்டத்திலே அவசர வேலை இருக்குதாம். நாளைக்கு இரண்டு ரூபாய் கூலியாம். ஒங்களை அழைச்சாரச் சொன்னாங்கன்னு ஆள் வந்திருக்கு. ஊட்டிலே நிக்க வச்சுட்டு வந்தேன்...பல்லுக் குச்சிகூட இன்னும் ஒடிச்சாவல்லே போலிருக்கே...காவனுக்குத் துணையா நானுச்சும் வந்திருக்கணும்..."

* * *

"ராமனைக் கண்டதும் சூர்ப்பநகையின் மனத்தில் புயலைப் போன்ற பெருங் காமம் எழுந்தது. தன் அழகுக்குப் பொருந்திய ஆசையா என்று அளவிடும் எண்ணமே முளைக்க வில்லை. மான வெட்கத்தை விட்டு, 'ராமா, என்னை மணம் செய்துகொள்ள மாட்டாயா?' என்று கெஞ்சினாள். கோபித்தாள். பிடிவாதம் பிடித்தாள். மிஞ்சினாள். கோபமடைந்த லட்சுமணன் அவள் மூக்கை அறுத்து விரட்டி விட்டான்..."

* * *

குடியானவன் வேப்பங் குச்சியை ஒடித்துக் குளத் தங்கரைக் கைப்பிடிச் சுவர்மேல் உட்கார்ந்து பல் துலக்கிக் கொண்டிருந்தான்.

கரையோரமாகச் சர்க்கார் அதிகாரி ஒருவர் வந்தது கண்டு சுவரை விட்டிறங்கி, பல் குச்சியை முதுகுப்புறம் ஒளித்துக் கொண்டான்.

"என்ன சொகந்தானு, மண்ணுளி?" என்ருர் அதிகாரி.

"ஆண்டவன் புண்ணியத்திலே சொகந்தான்."

"சாயங்காலமாக ஒரு கூட்டம் போட்டிருக்கிறது."

'என்ன கூட்டமுங்க?"

"நல்ல கூட்டம்தான். நெல் விலை நெரிமாதிரி ஏறுதல்ல? இந்த வியாபாரிங்க கொட்டத்தை அடக்காட்டி ஒண்ணும் சரியாக நடக்காது."

"நாங்களே நெல்லு வாங்கருப்பலே இப்பொல்லாம் வந்தூடுதிங்களே...கோவிச்சுக்காதிங்க. கலியுகம் இங்கருங்களே—அது நெஜந்தானுங்களா?"

"அது சந்தேகமில்லாமல்; இந்த வியாபாரிகளை ஒடுக்க ஒரு புதுமாதிரி அரிசி வந்திருக்கிறது. இது பெங்களூரிலிருந்து வந்திருக்கிறது. விலையும் மலிவு தான்."

"இந்த அரிசி வேறே எங்கேயும் விளையாதா?"

"இது வயலில் விளைகிற அரிசி இல்லை."

"பின்னே?"

"ரொம்பப் படிச்சவங்க ஒரு மிஷினிலிருந்து இந்த அரிசியைச் செய்யருங்க. அதை நம்முடைய ஜனங்கள் வாங்கிச் சாப்பிட ஆரம்பித்து விட்டால் வியாபாரிகள் எல்லாம் காற்றுப் போன பந்தாகி விடுவாங்க. அதைப் பற்றிச் சொல்வதற்குத்தான் கூட்டம்."

"வீட்டைத் தேடிக் கொணுந்து குடுத்தாலும் மண் ணிலே விளையற அரிசி ஆவுங்களா ? கட்டின பொஞ் சாதி இருக்கக் காத்தாயியைக் கண்ணடிச்சாம்பாங் களே—அதுமாதிரி—'

"அதெல்லாம் இருக்கட்டும். கூட்டத்துக்கு வாடா என்ருல் கதை படிககிறே."

"அதுக்குச் சொல்லலிங்க. வரேங்க..."

* * *

"'கண்டேன் சீதையை !' என்று எக்களிப்புடன் வந்து ஹனுமார் சொன்னதும் ராமன் கோதண்டத்தை எடுத்துக் குணத்தொனி செய்தான். ஈரேழு பதினுன்கு உலகையும் நாதெஞலி ஊடுருவிச் சென்றது. தசகண்ட ராவணன் மட்டும் காதைப் பொத்திக் கொண்டான்..."

* * *

நான் பேராசிரியரைப் பார்க்கச் சென்றபொழுது, அவர் மார்பின்மீது ராமாயணம் பிரித்தபடியே இருந் தது. தூங்குகிறவரை எழுப்புவானேன் என்று நினைத் துத் திரும்பினேன்.

"கண்ணை மூடிக்கொண்டிருந்தால் தூக்கம் என்று எப்படி நினைக்கலாம் ?" என்று பேராசிரியர் கேட்டதும் வெட்கிப் போய்விட்டேன். தர்க்கத்திற்கு ஒத்த பேச் சல்லவா ? எனவே, தர்க்கமேதும் சொல்லாமல் கதை கேட்க உட்கார்ந்தேன்.

# வழிபாடு

'இதோ போகிறாரே அவரைக் கவனி' என்றார் என் நண்பர்.

'அவரைக் கவனித்தால் எனக்கென்ன ஆச்சு?'

'கவனி, சொல்லுகிறேன்.'

இப்படிப் பேசிக் கொண்டிருப்பதற்குள் அந்த ஆள் எங்களைத் தாண்டிப் போய்விட்டார். நான் பார்த்ததெல்லாம் அவர் முதுகுப்புறம்தான். காய்ந்த விறகைப் போன்ற உடல். இடுப்பில் இருக்கும் நாலு முழ வேஷ்டி. மேலே ஒரு துண்டு—இவ்வளவுதான் தெரிந்தது.

'பார்த்து விட்டேன்' என்றேன்.

'முகத்தைப் பார்க்க வில்லையே?'

'எழுந் திருந்து போய்ப் பார்க்கச் சொல்லுகிறாயா?'

'பச்சையும் சிவப்புமாக ஏதேனும் தட்டுப்பட்டிருந்தால் சொல்லாமல் கொள்ளாமல் போயிருப்பாய்' என்று குத்தலாகச் சொன்னார்.

'அதனால் என்ன குடி முழுகி விட்டது?'

'அவர் ஒரு அதிசயப் பிறவி!'

'அப்படி என்றால்?'

'அவரென்னவோ எல்லோரையும் போல் ஒரு தொழில்தான் செய்கிறார். இருந்தாலும் அவரிடத்தில் ஏதோ ஒன்றிருக்கிறது. இன்னதென்று புரியவில்லை.'

'என்ன தொழில்?'

'அவர் தச்சு வேலை செய்கிறார்.'

'சரி.'

'தச்சு வேலை செய்கிறார். ஆனால், பேசுவதில்லை.'

'ஊமையா?'

'இல்லை, மௌனம்.'

'ஊமை இல்லை மௌனம் என்றதும் எனக்குத் திடுக்கிட்டது. பேசவேண்டுமென்ற ஆத்திரத்தில் ஊமையன்களே பலவித சத்தங்களை எழுப்பி, கைவிரல்களை வாயாக்கிப் பேசுகிறார்களே — பேசக்கூடியவன் மௌனமாயிருக்கிறான் என்றால் ஆச்சர்யம்தானே! அதிலும் பேசிப் போராடி வயிறு வளர்க்க வேண்டிய தொழிலாளி மௌனமாயிருப்பதென்றால், நம்பக் கூடியதா?

'அது சரி; பேசத்தான் இல்லை. கூலியாவது வாங்கிக் கொள்வாரோ; அதுவும் இல்லையோ?'

'அதெல்லாம் வாங்கிக் கொள்வார்.'

'இவரை உனக்குத் தெரியுமா?'

'அடிக்கடி பார்த்திருக்கிறேன். பழக்கம் உண்டு.'

'அவர்தான் பேச மாட்டாரே?'

'பேச மாட்டார். ஜாடைகள் மூலம் ரொம்ப விஷயங்கள் சொல்லுகிறார். போதாக் குறைக்கு எழுதியும் காட்டுகிறார். இவர் முதலில் மோட்டார் ஓட்டியாக 60 ரூபாய் சம்பளத்தில் ஒரு பெரிய மனிதரிடம் வேலைக் கமர்ந்தார். மோட்டாரில் ஒழிவாக உட்கார்ந்திருந்த நேரங்களில் பட்டினத்தார், தாயுமானுர், பதினெண் சித்தர்கள் இவர்களுடைய நூல்களை எல்லாம் படித்துக் கொண்டு வந்தார். ஒரு சமயம் இவரும் இவருடைய முதலாளியும் மோட்டாரில் சென்று கொண்டிருந்த பொழுது, எதிர்பாராத விதமாகச் சந்தொன்றிலிருந்து வந்த மோட்டார், இவர்கள் வண்டியில் வேகமாக மோதி விட்டதில் முதலாளிக்கு ஆபத்தான காயம் ஏற்பட்டு விட்டது. இவர் வண்டிக்கு வெளியே தூக்கி எறியப் பட்டு, பிரக்ஞை அற்றுக் கிடந்தார். இருவர்களையும்

ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றூர்கள். ஆனால், முதலாளி ஆஸ்பத்திரியில் காலமாகி விட்டார். டாக்டர்கள் இவரைச் சோதித்தபோது உடலுக்குள்ளோ வெளியிலோ எந்தவிதக் காயமோ கெடுதலோ இல்லை. ஆனால், கண் மட்டும் மூடிக் கிடந்தது. பிரக்ஞை யின்றி ஆஸ்பத்திரியில் இவர் இருந்தார். பதினேராவது நாள் காலையில் டாக்டர் வழக்கம் போல ஆஸ்பத்திரியைச் சுற்றிக்கொண்டு இவரண்டை வந்த சமயத்தில், இவர் திடீரென்று மயக்கம் தெளிந்து எழுந்து உட்கார்ந்தார். டாக்டர் இவரை விசாரித்ததற்கு 'அமுத கலசம் பொங்கி விட்டது' என்றூர். டாக்டருக்கு எதுவும் புரியவில்லை. மேலும் கேள்விகளைக் கேட்டார். 'இத்தனை நாளாக எமனுடன் சண்டை. இன்றுதான் முடிந்தது. ஆறங்குல தூரம் வெளியே வரும் மூச்சு வலது நாசிவழியாக இப்பொழுது வருகிறது என்று சொல்லிவிட்டு, டாக்டரையே கேள்வி கேட்டார் 'ஒரே சமயத்தில் இரண்டு மூக்கு வழியாகவும் மூச்சு வருமா ?' என்றூர்.

'டாக்டர் பதில் சொல்லாமல் போய்விட்டு, இவரை வீட்டுக் கனுப்பிவிட்டார்.

'வீட்டில் வந்தவர் முன்போல் இருக்கவில்லை, மனைவியும் இரண்டு பிள்ளைகளும் இருந்தும் பேசுவதே இல்லை. சாடையே காட்டத் தொடங்கிவிட்டார். மனைவி கணவருக்குப் பயித்தியம் பிடித்துவிட்டதென்று கூட ஒரு சமயம் நினைத்து விட்டாள். ஆனால், இவர் பேசவில்லை என்பதைத் தவிர, நினைவு எதிலோ லயித்திருகிற தென்பதைத் தவிர, பைத்ய சேஷ்டை எதுவும் இவரிடம் காணும் சாப்பிடுகிறூர். குழந்தைகளுடன் விளையாடுகிறூர். மனைவியைப் பார்த்துச் சிரிக்கக்கூடச் சிரிக்கிறூர். பழைய சிரிப்பு மாதிரி இல்லையே ஒழிய, பைத்தியக்காரச் சிரிப்பல்ல ஒரு வாரம் வீட்டில் இப்படியே இருந்தவர், எட்டாவது நாளோ ஒன்பதாவது

நாளோ பெரிய கடைத் தெருவுக்குப் போய், தச்சு ஆசாரிச் சாமான்களை எல்லாம் வாங்கிக்கொண்டு வந்து விட்டார். பதினோராவது நாள் முதல் தச்சு வேலைக்குப் புறப்பட்டு விட்டார். பதினோராவது நாள் வேலைக்கு போய்விட்டு, மூன்று ரூபாயுடன் திரும்பி வந்தாராம்' என்று சொல்லி நண்பர் நிறுத்தினார். 'எழுந்து போய்ப் பார்த்திருக்கலாமே' என்ற எண்ணம் முளைத்தது. மற்றொரு நாள் கவனி' என்று சொல்லிவிட்டு என் நண்பர் ஏதோ அலுவலாகப் போய்விட்டார்.

அதுமுதல் அவரை நன்றாகப் பார்க்க வேண்டும் என்ற நினைப்பு உண்டாயிற்று.

மற்றொரு நாள் தச்சுச் சாமான்களை எடுத்துக் கொண்டு வீதி வழியே இவர் சென்றார். அப்பொழுது அவரை நன்றாகப் பார்த்தேன். காதில் ஒரு ஊதுவத்தி சொருகிக் கொண்டிருந்தார். மாரில் சந்தனப் பூச்சு. வழக்கம்போல இடுப்பில் நாலுமுழத் துண்டு. தோளில் ஒரு சவுக்கம் முகத்தைப் பார்த்தேன். அதில் உள் குவிந்த லயிப்பைத் தவிர, வேறு சிறப்பு எதுவும் தெரிய வில்லை. அவர் ஏறிட்டு ஒருதரம் பார்த்த பொழுது, என்னைப் பார்த்தார். நானும் அவரைப் பார்த்தேன்.

அதற்குப் பிறகு அவரைத் தெருவில் பல தடவை பார்த்தேன். கொஞ்சம் கொஞ்சமாக அவருக்கும் எனக்கும் முகப் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. என்னைக் கண்டால் ஒரு சிரிப்புச் சிரிக்காமல் போவதில்லை.

ஒரு நாள் இவர் நான்காவது வீட்டில் தொடர்ந்து வேலை செய்தார். அந்த வீட்டுக்காரர் இவரைப்பற்றி என்னிடம் புகழ்ந்தார்.

'ரொம்ப அதிசய மனிதர்! நியாயமான ஒப்பந்தக் கூலியைப் பேசிக்கொண்டார். எந்தவிதக் குறையும் சொல்ல முடியாதபடி மரப்பெட்டியை அழகாகச் செய்து

விட்டார். இவரிடத்தில் உள்ள விசித்திரம் இவர் மௌனம் என்பது மட்டும் அல்ல; வேலையை ஆரம்பிக்கு முன் காதில் சொருகிக் கொண்டிருக்கும் ஊதுவத்தியைக் கொளுத்திக் கொள்கிறார். சிறிது நேரத்துக்கொருதரம் மூச்சை உள்ளுக்கிழுக்கிறார். லயித்து வேலை செய்கிறார். மத்யான இடைவேளையில் அரை சேர் மிளகாயை வாங்கிச் சாப்பிடுகிறார். எப்பொழுதாவது வெந்நீர் வேண்டுமென்று ஜாடை செய்கிறார். குடிக்கிறார். இவருடைய மனம் இவருக்குள்ளேயே ஆழ வேர் விட்டு ஓடுகிறது. அதனால்தான் பேய்க் காற்றில் மரத்தின் தலையாடினாலும் அடிப்பாகம் ஆடாமல் இருப்பது போன்ற நிலைப்பொன்று இவர் செய்யும் வேலையின் ஊடே தென்படுகிறது! என்ன அதிசய மனிதர்!' என்றார். தச்சு ஆசாரியைப் பற்றிய என் வியப்பு விரிந்தது. அவரைப்பற்றிய சிந்தனை கூர்மை அடைந்தது. அவர் தச்சு ஆசாரியா? ஞானியா? அல்லது இரண்டும் ஆன ஒன்றா? புரியவில்லை.

ஒரு நாள் அவரைக் கூப்பிட்டுச் சில மரவேலைகள் இருப்பதைக் காட்டினேன். கூலி ஒருக்கால் குறைத்துக் கேட்பாரோ என்று சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தேன்! என் மனத்தில் என்ன கூலி கொடுக்கலாம் என்று தோன்றிற்றோ; அதையே சொன்னதும் திடுக்கிட்டுவிட்டேன் என்றுகூடச் சொல்லலாம். நியாயமான கூலி என்பதைத் தவிர, என மனத்தையும் ஊடுருவிய அறிவு!

இரண்டு நாள் வீட்டில் வேலை செய்தார். என் நண்பர் சொன்னதில் ஒரு வார்த்தைகூடத் தவறில்லை. இரண்டாவது நாள் வேலை முடிந்ததும் அவரிடம் இரண்டு ரூபாய் அதிகப்படியாக வைத்துக் கூலியைக் கொடுத்தேன்.

அவர் பணத்தை வாங்கிப் பார்த்துவிட்டு, பேசின கூலி போக உள்ள இரண்டு ரூபாயைத் தூக்கி என்

னிடம் வைத்தார். கடுதாசு, பென்சில் வேண்டுமென்று ஜாடை காட்டினார். நான் கொடுத்தவுடன், 'இது இனும் வாங்காது' என்று எழுதிக் காட்டினார்.

உள்ளபடியே அவரிடத்தில் எனக்கொரு பக்தி உண்டாகிவிட்டது. பணத்திற்காக வேலை செய்கிறார். பணம் கொடுத்தால் மறுக்கிறாரே! அவருடைய நெறி எனக்குப் பிரமிப்பை ஊட்டிற்று. அவரை அவருடைய வீட்டில் போய்ப் பார்க்கவேண்டுமென்ற அவா திடீரென்று எனக்குத் தோன்றிற்று. 'கூட வீட்டிற்கு வருகிறேன்' என்று நான் கூறியபோது, சிரித்துக் கொண்டே 'சரி' என்றார்.

நான் அவர் கூடவே சென்றேன். வழியில் யாருடனும் பேசவில்லை. நேரே சின்னக்கடைத் தெருவில் ஒரு புஷ்பக்கடை அருகில் போய் நின்றார். கடைக்காரன் அவரிடத்தில் இரண்டணாவுக்குப் புஷ்பம் கட்டிக் கொடுத்தான். நான் கொடுத்த பணத்தில் காசைக் கொடுத்துவிட்டுக் கிளம்பி, சந்தனக் கடையில் போய் நின்றார். எட்டணாவுக்கு வாசனைச் சந்தனமும் ஒரு கட்டு ஊதுவத்தியும் வாங்கிக்கொண்டு திரும்பக் கிளம்பி விட்டார். புஷ்பக் கடைக்காரரும் சந்தனக் கடைக்காரரும் நடந்துகொண்ட விதத்திலிருந்து இதெல்லாம் அவருடைய தினசரி ஒழுக்கம் என்பது விளங்கி விட்டது.

அங்கிருந்து நேரே அவர் வீட்டுக்குத்தான் சென்றோம். ஆடம்பரமற்ற கிளிக்கூண்டைப் போல் வீடு சிறியதாக இருந்தது. போனதும் போகாததுமாக அவர் தன் கையிலிருந்த புஷ்பத்தை மனைவியிடம் கொடுத்தார். மனைவி அவருக்குப் பதிலாக ஒரே ஒரு மல்லிகைப் பூவைக் கொடுத்ததும் நான் நெகிழ்ந்து விட்டேன். அறிவுக் கெட்டாத ஒரு லோகத்திலே இருக்கும் உணர்வு சூழ்ந்தது. வழிபாடென்றால்?... அதற்குப்

பிறகு அவர் முற்றத்தில் இறங்கி, கால் கைகளைக் கழுவிக்கொண்டு, ஊதுவத்தி சந்தனம் கையிலிருந்த பணம் அவ்வளவையும் மனைவியிடம் கொடுத்து விட்டார். அவைகளைப் பெற்றுக்கொள்ளும் பொழுது, அவர் மனைவியின் முகத்தைப் பார்த்தேன். ஆண் பெண் உறவைக் கடந்த தோழமை ஒன்று வாய்வழிந்து ஓடிக்கொண்டிருந்து.

அதற்குப் பிறகு அவர் திண்ணைக்கு வந்து, எனக் கொரு தடுக்கைப் போட்டுவிட்டுத் தானும் ஒரு தடுக்கில் உட்கார்ந்தார். அவர் மனைவியார் ஆளுக்கு ஒரு பாத்தி ரத்தில் மோர் கொணர்ந்து வைத்தார்.

'குழந்தைகள் உண்டா?' என்றேன். அவர் இரண்டு விரல்களைக் காட்டினார். காணோமே!' என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே இரட்டையர்களைப் போல இரு பையன்கள், காதில் ஏதோ கள்ளிப்பூவைச் சொருகிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தார்கள். முன் பின் அறியாதவனாக நான் இருந்தபோதிலும் எனக்கு வணக்கம் செலுத்தி விட்டுப் பையன்கள் போனதும் ஒரு ஆச்சர்யமாக இருந்தது.

அதற்குப் பிறகு ஊமை ஜாடை மூலமும், ஸ்லேட் பென்ஸில் மூலமும் எதிதைதப்பற்றியோ பேசிக்கொண் டிருந்தோம். அவர் சொன்னதெல்லாம் எனக்குப் புரிந்து விட்டதென்று சொல்ல முடியாது. ஆனால், அது எனக்கு ஒரு புது உலகமாக இருந்தது. அவர் மட்டும் 'இதில் எதுவும் புதிதில்லை; புஷ்பம் புதிது, மரம் பழசு' என்று எழுதிக் காட்டினார்.

எனக்குச் சரியாகப் புரியாவிட்டாலும் என் மனம் ஏனோ நிறைந்துவிட்டது.

வீட்டுக்குக் கிளம்புமுன் அவரிடம் ஒன்று சொன்னேன். அவர் கூறிய பதில்தான் எனக்குத் திகைப்பை அளித்தது.

'நாளைக்கு என் சிநேகிதன் வீட்டில் கொஞ்சம் வேலை இருக்கிறது. வரலாமா ?' என்றேன்.

'இது இன்னும் மூன்று நாளைக்கு எங்கும் போகாது' என்று எழுதிக் காட்டினர்.

'ஏன் ?'

'மூணு போதுக்கு வேண்டிய பொன் கையில் இருக்கிறது' என்று எழுதிக் காட்டினர். அதற்கு மேல் என்னால் வாய் திறக்க முடியவில்லை. 'வணக்கம்' என்று விடை பெற்றுக்கொண்டேன்.

# பூனைக் கண்

கிராமவாசிகள் பட்டணக்கரைக்கு வரக்கூடாதென்று தான் எனக்குத் தோன்றுகிறது. அதிலும் முப்பது வருஷமாகக் கிராமாந்திரத்தில் நாளை ஓட்டியவர்கள் பட்ணத்தில் குடியேறினால் நரகம்தான். நரகம் இருக்கிறதோ இல்லையோ, பொய் சொல்லத் தெரியாதவர்கள் பட்டணக்கரைக்கு வந்தால் நரகத்தை நிமிஷந்தோறும் அனுபவிக்கலாம்.

நான் ஏதோ பட்டணக்கரைமீது வெறுப்புக் கொண்டு பேசுவதாக நீ எண்ணிவிடக் கூடாது. சமத்தே இல்லாத ஆள் பட்டணத்தில் குப்பைகொட்ட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால்தான் நான் சொல்வதின் உண்மையை உணர முடியும்.

பையன்கள் மேல்படிப்புக்காக என்று ஒரு குடித்தனத்தை போயும் போயும் என்னைக் கொண்டு நடத்த நினைத்தாயே! நான் ஐயனார் குதிரை என்று உனக்குத் தெரியாதா?

முதலில் நீ எங்களை அமர்த்தி வைத்த வீடு பிடுங்கலாகப் போய்விட்டதென்றும் அதிருஷ்டவசமாகக் கிடைத்து விட்ட பக்கத்துத் தெரு வீட்டுக்குக் குடி போய்விட்டோம் என்றும் உனக்கு ஏற்கனவே எழுதியிருக்கிறேன். அதற்குப் பிறகு எழுத வேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.

பழைய வீட்டுக்காரர் ஒரு விநோதமான மனிதர். ஊமைக்கோட்டான் மாதிரி இருக்கிறாரே ஒழிய உள்ளூர அவ்வளவு விஷ(ம)ம்! தாராளமாக வீட்டை ஒழித்து விட்டுப் போங்கள், உங்களுக்கும் இடம் கிடைக்கும்,

எனக்கும் குடி கிடைக்காமல் போகாது என்று தர்ம நியாயம் பேசிவிட்டு, ஒரு வாரம் இருந்து விட்டு ஜாகை மாற்றியதற்காக முழு மாத வாடகையை வாங்கிக்கொண்ட பிரபு! பாக்கி நாள் குடி வராமல் நஷ்டமாகி விடுமல்லவா என்று காரணம் கூறினார். ஆனால் நடந்தது என்ன தெரியுமா? நாங்கள் காலி செய்த மறுநாளே அங்கே வேறு குடி வந்துவிட்டார்கள்!

இந்த வீட்டுக்கு வந்ததும் மனதிலே பெரிய நிம்மதி உண்டாயிற்று. ஆனால் அது நீடிக்கவில்லை. அந்த வீட்டுக்காரரின் கண்ணை நீ வந்தபோது கவனித்தாயா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு மட்டும் அந்த வீட்டுக்குப் போன நிமிஷம் முதற்கொண்டே அவருடைய கண்ணைக் கண்டாலே பயமாயிருந்தது. பூனைக் கண் என்று வர்ணத்தைக் குறித்துச் சொல்வார்களே அது சரியல்ல என்று தோன்றுகிறது. பூனை போகும் பொழுது பார்த்தால் எதையும் கவனிப்பதாகவே தெரிவதில்லை. ஏதோ ஆழ்ந்த லயிப்பில் செல்வது போலவே தோணும். ஆனால் உண்மையில்—? தெளிந்த வாய்க்கால் நீரின் வழியே பார்த்தால் கெண்டைக் குஞ்சுகள் கும்பலாக நீந்திப்போவது தெரிகிறதல்லவா? அதைப் போலவே இந்தக் கண்ணின் தெளிவுக் கடியில் திருட்டு எண்ணங்கள் நீந்திச் செல்வது போலவே எனக்குத் தோன்றுகிறது. இந்த மாதிரிக் கண் இவருக்கு. இது கண்ணிலேயே எழுதி ஒட்டியிருப்பது எனக்குத் தெரிகிறது. இந்த வீட்டுக்கு வந்த பிறகு மனத்திலிருக்கும் கோபத்தால் அவரைப் பார்த்தால்கூடப் பார்க்காதது போல் நான் போய்க்கொண்டிருந்தேன்.

ஆனால் அவர் விடுகிற வழியாய் இல்லை. ஏதோ சாக்கிட்டு என்னிடம் வருவார். நல்ல கத்திரிக்காய் வந்திருக்கிறது, வீசை முக்கால் ரூபாய் தான்! சிவப்புக் கட்டம் போட்ட சவுக்கம் கேட்டீர்களே, (நான் கனவில்

கூட இதைப்பற்றி நினைக்கவில்லை) அவன் வந்திருக்கிறான்! இதுமாதிரி ஏதோ சாக்கிட்டு வருவார்.

எனக்கு மட்டும் அவர் கண் உறுத்திக்கொண்டே இருக்கும். இவருக்கு ஏதோ நம்மேல் அசூயை. ஊரிலே இருந்து வருகிற அரிசியைச் சாப்பிடுவது எப்படி? எங்களைப்போல அரிசிக்கு விலை கொடுத்து வயிற்று வலியை வாங்கிக் கொள்வதெப்படி? உங்க வீட்டுப் பையன்கள் அபார புத்திசாலிகள் என்றெல்லாம் இவர் வந்து பேசுவதின் உட்பொருள் வேறு என்ன?

பையன்கள் புத்திசாலிகளாம்!—வெறும் திருட்டுப் பேச்சு! எனக்கல்லவா தெரியும் பையன்கள் அழும்பு?

இந்தப் பையன்கள் இப்பொழுதெல்லாம் சொன்ன பேச்சு ஒன்றையுமே கேட்பதில்லை. டாம் என்றால் டும் என்கிறார்கள். இவர்கள் செய்கிற அழும்பில் வீட்டில் இருக்கிற காபி மிஷினை விற்றுவிடலாமா என்றுகூடப் பலதரம் தோன்றி விட்டது. காபிக்கொட்டை வறுத்துப் போட்டால் இவர்கள் அறைத்து வைக்கக் கூடாதோ? காபி சாப்பிடவில்லை. குல்மோகர் காபி ஸ்டோரில் நல்ல காபிக்கொட்டை இருக்கிறது. மூக்குப்பொடி மாதிரி நைசாக அந்த மிஷினிலே அறைச்சுத் தருகிறான். அறைத்த பொடிகூட விற்கிறான். விலை ரொம்ப சல்லீசு என்கிறான்கள். திருட்டுப் பயல்கள்! காபிக்கொட்டை அறைப்பதற்குச் சோம்பல் பட்டுக் கொண்டு சின்னப் பாட்டிக்கு இவ்வளவு பெரிய யோசனையைச் சொல்கிறான்கள்!

இந்த மிஷின் தேய்ந்து போச்சென்று இந்தக் கிழவி புலம்பி இருப்பாள் போலிருக்கிறது. நம்ப வீட்டு விஷயம் எல்லாம் அந்தப் பூனைக்கு எப்படித்தான் தெரிகிறதோ! இது ஒரு தகர டப்பா! இந்தப் புலம்பல்கள் காதில் விழுந்திருக்கும் என்று நினைக்கிறேன்.

நேற்றுப் பதினொரு மணி இருக்கும். அவர் வந்தார். 'காபிக்கொட்டை மிஷின் ராவுகிறவன் எங்கள் வீட்டில் வந்திருக்கிறான். உங்கள் மிஷினையும் பழுது பார்க்கலாமே' என்றார்.

என்னை எப்படியாவது குடையடித்து விடவேண்டுமென்று அவர் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார் என்பது தான் எனக்குச் சதா நினைப்பு. அவர் காக்காய் கறுப்பென்று சொன்னால் கூட என் மனதிலே சந்தேகம் வந்துவிடுகிறது அவர் வெண்ணைமாதிரி பேசுகிற தினுசு ஒண்ணே போதும். ஆகையினால் அவர் விரிக்கிற எந்த வலையிலும் விழுந்துவிடக் கூடாதென்றே நான் உஷாராக இருந்தாலும் நேற்றுப் பிரயோஜனப் படாமல் போய்விட்டது. தேய்ந்துபோன பல்லை ராவித்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் பையன்கள் யோசனையைத்தான் கேட்கவேண்டும் என்று இவள் அவர் எதிரிலேயே சொல்லிவிட்டாள். பிறகு தப்பிக்க வழி ?

எழுந்து போய் வேலை செய்கிற ஆளைப் பார்த்தேன்.

'என்ன கூலி ?'

'ஐயாவைக் கேளுங்க. சொல்றதைக் கொடுங்க.'

என் சந்தேகம் வலுத்துப் போய் விட்டது. இரண்டு பேரும் ஒக்குமத்தாக இந்தச் சாக்கிட்டு என்னைக் கவிழ்க்கப் பார்க்கிறார்கள் என்று தோன்றி விட்டது. இருந்தாலும் நானும் ஒன்றும் வெளிக்குக் காட்டிவிடவில்லை. 'நீங்கள் என்ன கூலி பேசி யிருக்கிறீர்கள் ?'

'இரண்டாம் நம்பருக்கு இரண்டு ரூபாய். மூணாம் நம்பருக்கு மூணு ரூபாய்—இப்படி இவன் வைத்திருக்கிறான். என்னது 2-ம் நம்பர். உங்க கூலி நம்பரைப் பொறுத்தது.'

தொழிலாளி இவ்வளவு பட்டுக் கத்தரித்தாற் போல இருக்கமாட்டானே, முடியாதே ! இதில் ஏதோ சூதிருக்

கிறது. பார்த்துக் கொள்வோம் என்று நினைத்துக் கொண்டேன். எந்த வீடு என்று கேட்டதற்கு வீட்டுக் குறிப்புச் சொல்லிவிட்டு நகர்ந்து வந்து விட்டேன்.

'நன்றாக வேலை செய்து கொடுப்பான்' என்று பூனைக் கண்ணை உருட்டிக்கொண்டு அவர் நற்சாட்சிப் பத்திரம் கொடுத்தார்.

வீட்டுக்கு வந்ததும் அயர்ந்து விட்டேன். இரும்பு அரத்தால் ராவுவது போன்ற சத்தம்! காசிக்குப் போனாலும், சனீஸ்வரன் விடாதோ! தூக்கத்தில்கூட இந்தத் தொல்லை தானா என்று அலுத்துக் கொண்ட நிமிஷத்திலே சத்தம் கனவல்ல என்ற உண்மை தெரிந்தது. நான் விழித்துக்கொண்டு விட்டேன்.

உடனே எழுந்து போய்ப் பார்த்தேன். ரேழியில் உட்கார்ந்து கொண்டு அந்த ஆள் நாலாம் நம்பர் காபிக் கொட்டை மிஷினை ராவிக்கொண்டிருந்தான். இவள் இருக்கிறாளே, உங்கள் சின்னப்பாட்டி, அவள் ஊக்கத்துடன் பககத்திலிருந்து கண்காணித்துக் கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும் நெட்டிப்பூ தண்ணீரில் விரிவது போல் புன்முறுவல் செய்தாள். அதாவது, சல்லிசாகக் கூலி பேசி வேலை செய்துவிட்டாள் என்ற இறுமாப்பு! நான் சிவனே என்று தூங்க அனுமதி!

பார்த்துவிட்டு ஒன்றும் சொல்லாமல் திரும்பி வந்து விட்டேன். என்னைப் பின்தொடர்ந்து வந்து என்னண்டை ரகசியமாகக் கூறினாள். 'நாலாம் நம்பர் ராவ இரண்டு ரூபாய்க்குச் சம்மதிக்கச் செய்துவிட்டேன். வயிற்றுக் கொடுமை, ஒப்புக்கொண்டு விட்டான். உலகத்திலே நாளைப் போக்குகிறது எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது!, தெரிகிறதா?' என்றாள்.

தெரிகிறது என்று சொல்லிவிட்டு என் காரியத்தைக் கவனிக்கத் தொடங்கினேன். சிறிது நேரத்திற்கெல்

லாம் ராவும் சத்தம் நின்றுவிட்டது. வேலை முடிந்து போய் விட்டது. கூலியைக் கொடுத்தனுப்புங்கள், என்று இவள் சொன்னதும் பணத்தை எடுத்துக் கொண்டுபோய்க் கொடுத்தேன்.

வாங்கி மடியில் கட்டிக்கொண்டவன் சும்மா இருக்கவில்லை. 'இந்தக் கூலியை அவரிடத்தில் சொல்லாதீங்க. இரண்டாம் நம்பருக்கும் நாலாம் நம்பருக்கும் ஒரே கூலியா என்று கொன்று விடுவார்.'

'அவரைக் கண்டு பயமா?'

'இல்லை இல்லை, பிறகு என்னை அங்கே இங்கே சிபார்சு செய்வாரா? இந்த நாளிலே கையிலே வேலை இருந்தால்கூட யார் சிபார்சாவது இல்லாமல் ஒண்ணும் நடக்கிறதில்லே. மறந்துபோய் சொல்லிடாதிங்க.'

அவன் போய்விட்டான். நான் திண்ணைப்புறம் போய் வீதியைக் கண்ணோட்டம் விட்டுக்கொண்டிருந்தேன். வாய்க்காலின் தெளிந்த நீருக்கடியில் கெண்டைக் குஞ்சுகள் நீந்திக் கொண்டிருந்தன. பிழைப்பு என்னும் நீரோட்டத்துக் கடியில் எத்தனை திருட்டுக் கெண்டைக் குஞ்சுகள்! மற்றொருவன் தயவில்லாவிட்டால் இவனுக்குப் பிழைப்பு நடக்காதாம்! இந்தப் பொய் நாடகத்தில் நானும் வேஷம் கட்டிக்கொள்ள வேண்டும்! ஏனோ எனக்கென்ன வந்தது, பொய்யில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று? நீரோட்டத்தருகில் போய் நின்றவுடன் நிழல் பட்டதும் கெண்டைக் குஞ்சுகள் கலவரப்பட்டு ஓடிவிட வில்லையா? மெய்யின் குடை நிழலைவிட்டு விலகுவானேன்? காசு கொடுத்து வேலை வாங்கிக் கொண்ட வியாபாரம்தானே! நான் ஏன் அவுரித் தொட்டியில் இறங்கிக் குளித்தவனைப் போல் பொய்யைப் பூசிக்கொள்ள வேண்டும்?

'என்ன, வேலையாகிவிட்டதா' என்று குரல் கேட்டுத் திடுக்கிட்டேன். அவர்!

'ஆகிவிட்டது.'

'எவ்வளவு கூலியோ?'

'மூணு.'

'நம்பர்?'

'நாலு.'

'அவன் ரொம்ப நல்லவன்.'

'நீங்கள் கொடுத்தது?'

'நானா? இன்றைக்கு வேலையில்லை என்று வந்து நின்றான். எட்டணாக் கொடுத்து ஏதோ செய்துகொள் என்றால் எனக்கு இனாம் வேண்டாம் என்று பிடிவாதம் செய்தான். எங்கள் வீட்டுக் காபிக்கொட்டை மிஷினைக் கொண்டுவந்து போட்டேன். வேலையைச் செய்யும் பொழுதே எங்கேயாவது இன்றையப் பொழுதுக்குக் கைகாட்டி விடுங்கள் என்றான். உங்கள் வீட்டு ஞாபகம் வந்தது, சொன்னேன்.'

'அது சரி. நீங்கள் கூலி கொடுத்தது சொல்லவில்லையே?'

'எட்டணாக் கொடுத்தேனே, அதோடு சரி. வேறெ வாங்கிக் கொள்ளமாட்டேன் என்று விட்டான். எனக்கு ரொம்ப வருஷமாகத் தெரிந்தவன்.'

'2 ரூபாய் கூலி என்று அப்பொழுது சொன்னீர்களே?'

'அதான் அவன் கூலி விகிதம்—இரண்டாம் நம்பருக்கு இரண்டு, மூணாம் நம்பருக்கு மூணு, நாலாம் நம்பருக்கு நாலு. உங்கள் மிஷின் இப்பொழுது நன்றாகப் போய்விட்டதோ, இல்லியோ? கூலியும் அடாவடியாகக் கேட்கமாட்டான்' என்று சொல்லிக்கொண்டே ரஸ்தாவில் இறங்கிப் போய் விட்டார்.

பார்த்தாயா, நான் நினைத்தபடியே குடையடித்து விட்டார் மனுஷன்? பட்ணத்துச் சாமர்த்தியத்தை மெச்சிக் கொள்வதா, தொழிலாளி வயிற்றுக் கொடுமைக்கு இரக்கப்படுவதா, பட்டிக்காட்டு வெகுளித் தனத்திற்கு வெட்கப்படுவதா தெரியவில்லை!

நாலாம் நம்பருக்கு மூனு ரூபாய், இரண்டாம் நம்பருக்கு அரை ரூபாய்! இல்லாவிட்டால் இதுவும் பஞ்ச பாண்டவர்கள் கட்டில்காலோ என்னவோ?

ஆனல் ஒன்று தெரிந்துவிட்டது. பட்டணத்தை ஜெயிக்க என்னுலே முடியாது. நாளை ராத்திரி போட் மெயிலுக்கு டிக்கெட் ரிஸர்வ் செய்துவிட்டேன். பாக்கி உன்பாடு'

# ஞானப் பால்

லிங்கங் கட்டி சத்திரத்துக்கு வந்து ஒரு வருஷமாகிவிட்டது.

அவன் வந்தது தனக்கடித்த அதிருஷ்டம் என்றுதான் தவசிப் பிள்ளை நினைத்துக்கொண்டான். எப்பொழுதுமே தனக்கு அதிருஷ்டம்தான் என்ற நினைப்பு அவன் நெஞ்சில் தடித்தே இருந்தது. 'அ'னா 'ஆ'வன்னா தெரியாத கரிக்கட்டைக்குப் பதினைந்து ரூபாய் சம்பளமும், சாப்பாடும், தினம் ஆறு பேருக்குச் சாப்பாடு போட்டுச் சமாளிக்கும் அதிகாரமும் எல்லாருக்கும் இலேசில் கிடைத்துவிடுமா, என்ன? பிள்ளை குட்டி இருந்திருந்தாலாவது துரதிருஷ்டத்தைப் பற்றி நினைக்க வேண்டி இருக்கும்; சத்திரத்து முதலியாரை வையவேண்டி இருக்கும்.

தவசிப் பிள்ளையின் அதிருஷ்டம், அவன் ஒண்டிக் கட்டை. முதலெடுப்பிலேயே, முதலியாரை வாழ்த்தும் வாய்ப்பாகவே அந்த வேலை அமைந்துவிட்டது. அதைத் தவிர, வாழ்த்துவதற்கு அதில் இன்னும் பல வாய்ப்புக்கள் இருந்தன. போகப் போகத்தான் தெரிந்தது. சத்திரத்துக்கு வேண்டிய கறிகாய் சாமான்கள் வாங்குகிற பொறுப்பு அவனைச் சேர்ந்ததுதானே? அவன் முதலில் யோக்கியனாகத்தான் இருந்தான். இருந்தாலும் கைக்கு உறையைப் போட்டுக் கொண்டு தேன் எடுக்க முடியுமா? கையில் ஒட்டிக்கொள்வதை நக்காமல்தான் இருக்க முடியுமா? அவனுக்குத் தெரியாவிட்டாலும் சொல்லிக் கொடுக்க வதங்கிய கத்திரிக்காயும், தேசல் படிக்கல்லும் தக்கை போட்ட எண்ணெய்ச் செம்பும், கறிகாய்க்

கடைக்காரியும், மளிகை மாணிக்கம் செட்டியாரும் இருக்கும்பொழுது அவனுல் என்ன செய்துவிட முடியும்? முதலாளியை வாழ்த்துவதற்கான ஆதாரங்கள் இதில் எல்லாம் ஏராளமாக இருந்தன.

சத்திரத்துக்குத் தவசிப் பிள்ளை தான் சர்வாதிகாரி. ஆகையால் சட்டமும் இல்லை, நெறிகளும் இல்லை. தானம் கொடுத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பார்களா? அங்கே வேலை செய்துகொண்டிருந்த ஆளுக்குத் தவசிப் பிள்ளை ஒருநாள் சீட்டைக் கிழித்துவிட்டான். ஆனுல் பாவம்! தவசிப் பிள்ளை பேரில் மட்டும் குற்றம் சொல்லக் கூடாது. அதிருஷ்டம் வந்து பிடரியில் குந்திக் கொண்டு கட்டளையிட்டால் நிறைவேற்ற வேண்டியது தானே!

ஒருநாள் எங்கிருந்தோ ஒரு லிங்கங் கட்டி அங்கு வந்து சேர்ந்தான். வந்தவனைத் தவசிப்பிள்ளை ஒன்றும் கேட்கவில்லை. சத்திரத்துக்கு வந்த பிறகு பெற்ற அனு பவத்தால் தவசிப் பிள்ளைக்கு 'எக்ஸ்ரே' பார்வை வந்து விட்டது. ஆனுல் அதன் உதவி இல்லாமலேயே தவசிப் பிள்ளையால் லிங்கங்கட்டியை எடை போட்டுவிட முடிந்துவிட்டது.

மழுக்கிய தலை, கழுத்திலே வெள்ளிப்பெட்டி மூடிய லிங்கம், இடுப்பிலே பழுப்பேறிய வேஷ்டி—நாலுமுழ நீளம், இருபத்தி நாலு அங்குல அகலம்.

லிங்கங் கட்டி தலையைத் தடவிக்கொண்டு நின் ருனே ஒழிய எதுவும் பேசவில்லை. ஆனுல் தவசிப்பிள்ளை பதில் சொல்லிவிட்டான்.

"சமையல் ஆன பிறகு சாப்பிடலாம். இப்போது எங்கே இருந்து எங்கே போறீங்க?''

''பண்டாரத்துக்கு ஊரேது, பேரேது, போக்கிட மேது? சோறு கண்டால், சொர்க்கம். ஒரு கவளம் சோறு

இங்கே நெதம் கிடைச்சா இதுதான் போக்கிடம். அதை இதைச் செஞ்சிக்கிட்டுக் கிடந்துடுவேன்.''

தவசிப் பிள்ளைக்கு ஒரே யோசனை. ஆளைப் பார்த்தால் சுமைதாங்கி மாதிரி இருக்கிறான். எந்த வேலை வைத்தாலும் தாங்குவான்! சமையல் பாத்திரம் விளக்குகிற காத்தானோடு தினம் போராட முடிகிறதா ? அஞ்சு ரூபாய் சம்பளமும், மிச்சம் மீதம் தினம் சோறு கிடைக்கிறதே—அது போதாதாம்! தினம் அடித்துக்கொள்கிறான்! சோறு கொடுத்தால் குழம்பில்லையா என்கிறான்; குழம்பு கொடுத்தால் கறியில்லையா என்கிறான்; சோறு குழம்பு கறி கொடுத்தால், இவ்வளவுதானே என்கிறான்! இவன் வம்பே இல்லாமல் ஒழித்துவிட்டால்? சுமை தாங்கிதான் வந்திருக்கிறான்! ஒரு கவளம் சோறு செலவு! ஐந்து ரூபாய் மிச்சம்!

மறுநாள் காத்தான் சீட்டு முன்னறிவிப்பின்றிக் கிழிக்கப்பட்டுவிட்டது. லிங்கங் கட்டிக்கு அந்தப் பதவி அளிக்கப்பட்டதென்ற விஷயம் தெரியவே தெரியாது. சோற்றுக்காகத் தினம் ஊர் ஊராய் அலைய வேண்டாம். ஒரு மணி நேரம் பாத்திரம் தேய்த்துப் பண்டம் கழுவிக் கொடுத்தால் புண்ணியம்! நாவுக்கரசர் உழவாரப்படை வைத்திருக்கவில்லையா? பெரிய அதிருஷ்டம் அமைத்து விட்டதாக லிங்கங்கட்டிக்கு அதிக மகிழ்ச்சி. தவசிப் பிள்ளையும் தனக்கு அதிருஷ்டம் அடித்ததென்று நினைத்துக்கொண்டான்.

வந்த புதிதில் எல்லாமே நன்றாக இருந்தன. ஒரு கவளம் கேட்ட ஆளுக்கு இரண்டு வேளையும் மூன்று நான்கு கவளமும் கிடைத்துவிட்டால் மனம் துள்ளாதா? பாத்திரங்கள், கரி போகத் தேய்க்கப்பெற்றுப் பளபளப்பாக இருந்தன. கறிகாய் தூக்கிக் கொண்டுவர மளிகைச் சாமான் தூக்கிவர முனகாத நல்ல ஆள் கிடைப்பது ஒரு வாய்ப்புத்தான். 'சத்திரத்து வேலைக்குத்தான்

புண்ணியாம்! காத்தான் சாமான் தூக்கும் கூலிக்காரனல்லவாம்! என்ன லூட்டி அடித்துக்கொண்டிருந்தான்!' அப்பாடா என்றிருந்தது தவசிப் பிள்ளைக்கு. தினம் சாப்பிட்டுவிட்டுச் சத்திரத்துத் திண்ணையில் லிங்கங் கட்டி படுத்துக்கொண்டபோது, ஆயாடீ என்று சொல்லிக்கொண்டே ஆறுதலாகப் படுத்துக்கொண்டான் தவசிப் பிள்ளை.

அதோடு விஷயம் போய்விடவில்லை. சத்திரத்தில் வந்து போகிறவர்கள் லிங்கங் கட்டியைப் பாராட்டாமல் போவதில்லை:

'நல்ல ஆளு! பக்திமான்! நாள் தவறாமல், மணி பிசகாமல் திருக்குளத்தில் பல்லைத் தேய்த்துத் துணி துவைத்துக் குளித்துவிட்டுப் பட்டையாய்த் திருநீறிட்டுக் கொண்டு கிழக்கே சூரியனைப் பார்த்துத் தவறாமல் செபம் செய்கிறாரே, அது ஒண்ணே போதும்! இந்த மாதிரி ஆளைப் பார்க்கறதே அபூர்வ மாயிடுத்தே!' என்று வியப்படைவார்கள்.

ஆமாம்! இந்தக் கிரியைகளை லிங்கங் கட்டி அலட்சியப் படுத்துவதில்லை, அதற்குமேல் படிப்பு கிடிப்பு என்று லிங்கங் கட்டி தொந்தரவெதுவும் பட்டுக்கொள்வதில்லை. 'ஒருகால் சிவசிதம்பரம் என்று சொன்னால் இருக்காது ஊழ்வினையே என்று மட்டும், பேச்சு நடுவில் புகுத்துவான். அதை நம்பினு இல்லையா என்று கேட்டால் அவனுக்கே சொல்லத் தெரியாது. லிங்கங் கட்டி வெள்ளை வேட்டிப் பண்டாரமானபோது சமய அறிவு ஒன்றையும் சம்பாதித்துக் கொள்ளவில்லை. லிங்கத்தைக் கயிற்றில் கட்டிக் கழுத்தில் மாட்டிக்கொண்டு செய்யவேண்டிய காரியங்களை எல்லாம் சொல்லிக் கொடுத்துவிட்டு, பசுபதியும் பரந்த உலகமும் இருக்குமட்டும் கவலையில்லை, கிழக்கே போ என்றார்கள். அன்று முதல் சொன்னபடி செய்துகொண்டு வந்தானே ஒழியத்

தன் கிரியைகளையும் மனத்தையும் பிணைக்கவேண்டு மென்று அவனுக்குத் தோன்றியதில்லை. இரண்டும் ஒன்றிய செயல்நெறி காணவேண்டும் என்று துடித்த தில்லை.

எனவே சத்திரத்துக்கு வந்து போகிறவர்களில் யாராவது இரண்டணா, நாலணாக் கொடுத்தால், அதை மறுப்பதில்லை. மறுக்கவேண்டும் என்று தோன்றிய தில்லை. அதற்கு மாறாகக் காசு தேவையாக இருந்தால் கொஞ்சம் புதுக் காசாகக் கொடுங்கள் என்று வாங்கிக் கொண்டு கெட்டியாக இடுப்பில் சொருகிக் கொள்ளு வான்.

வந்த எட்டு ஒன்பது மாதங்களுக்குள் புது விளக்கு மாறு தேய ஆரம்பித்துவிட்டது. லிங்கங் கட்டியின் பேரில் எவ்வித வஞ்சனையு மில்லை. தவசிப் பிள்ளையோ பெரிய பேர்வழி. நாளாக ஆக லிங்கங் கட்டியின் உண வில் ஒரு கவளம் இரண்டு கவளம் குறைய ஆரம்பித்தது. சிலநாள் கறியோ குழம்போ கூட இருக்காது; சத்திரத் துக்கு வந்தவர்கள் அதிகமாகச் சாப்பிட்டுவிட்டார்கள் போல் இருக்கிறது என்று நினைத்துக்கொண்டான்.

அவனுக்கு ஆட்சேபணை இல்லை என்றாலும் அவன் வயிறு புகார்செய்தது. இரண்டொரு நாள் பல்லைக்கடித் துக்கொண்டிருந்தான். புண்யவான் தருமம்பண்ணி யிருக்கிறான்! ஒரு கவளம் குறைந்து போனால் என்ன பிரமாதம் என்று ஒருநாள் இரண்டு நாள் நினைத்துக் கொண்டான். முடியவில்லை. மூன்றாவது தினம் முதல் சத்திரத்துச் சாப்பாட்டுக்குப் பிறகு கருமாதி, கல்யாணம், மகேசுவர பூஜை என்று கேள்விப்பட்டால் தவறாமல் அங்கும் போய்ச் சாப்பிடுவதென்று வழக்கப் படுத்திக் கொண்டான். கொள்ளுத் தண்ணி ஊத்து வதாகக் கேள்விப்பட்டால் கூட அங்கு போய் வாசனை

யாவது பார்த்து விட்டு வந்தான்! அங்கெல்லாம் கூட இரண்டணு ஓரணுக் கிடைத்தது.

லிங்கங் கட்டிக்குக் காசு கிடைக்கிறது என்று தெரிந்தவுடன்தான் தவசிப் பிள்ளை தேய்பிறை மரபை உணவில் புகுத்த ஆரம்பித்தான். சத்திரத்தில் பண்டாரத்துக்கு விருந்தா வைப்பார்கள்? ஏதோ புண்ணிய காரியத்தில் அப்படி இப்படித்தான் இருக்கும் என்று சொல்லும்பொழுது லிங்கங் கட்டிகூடச் சகஜம்தான் என்று ஒத்து ஊதிவிடுவான். 'வேண்டுமானல் ஏதாவது ஓட்டலில் வாங்கிச் சாப்பிடு, சாமியாரே!' என்று உபதேசம் செய்வான் தவசிப் பிள்ளை.

லிங்கங் கட்டிக்குக் காசு சேர்ந்து போய்விட்டதென்று எப்படியோ தவசிப் பிள்ளை கணக்குப் பண்ணிவிட்டான். அதை எப்படியாவது கரைத்துவிட வேண்டுமென்ற விஷம எண்ணம் அவனுக்கு வந்துவிட்டது

தவசிப் பிள்ளையினிடத்தில் பணத்தை வைத்திரு என்று லிங்கங் கட்டி கொடுத்திருந்தால் இந்த விஷம எண்ணம் தோன்றியிருக்குமா என்பது ரசமான கேள்வி. ஆனல் விடை எளிது. நிச்சயமாகத் தோன்றியே இருக்காது. இதில் வந்த கஷ்டமென்ன வென்ருல் பாலுக்குப் பூனையைக் காவல் வைக்க முடியாது என்பதுதான். லிங்கங் கட்டி ஏதோ குருட்டுச் சாமர்த்தியத்துடன் சில்லறை அடகு பிடித்து வந்த கிழவியிடம் இந்தப் பணத்தைக் கொடுத்து வைத்திருந்தான். கடவுள் பொய்யாகப் போனல் கூட அந்தக் கிழவி பொய்யாகப் போகமாட்டாள் என்று அந்த வட்டாரத்திலே அவளுக்கு நல்ல பேர்!

ஆனல் இந்த இரகசியம் தவசிப் பிள்ளைக்குத் தெரியாது. திருட்டுப் பயல் என்று கறுவிக் கொண்டே

எப்போதும் போல் அரை வயிற்றுச் சோறு போட்டு முழு வேலையையும் வாங்கிக் கொண்டிருந்தான்.

தவசிப் பிள்ளைக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"என்ன லிங்கங் கட்டி! உனக்குத்தான் பெண்டாட்டி இல்லியே!"

"பண்டாரமாச்சே!"

"அப்படின்னு, தொடுப்புக் கூட?

"அதென்னுங்க, நாக்கு அழுகிப் போயிடாது.'

"கோவிச்சுக்காதே. ஒம் பணத்தைப் பின்னெ என்ன செய்யறே?"

"பத்திரமா இருக்குங்க."

"நீ நின்னு நெடுஞ்சுவரு, விழுந்தாக் குட்டிச் சுவரு. பெண்ணு பிள்ளையா பெண்டாட்டியா? ஒண்ணும் தான் இல்லே. காலணுவுக்குக் காராபூந்திகூட வாங்கிச் சாப்பிட மாட்டே. பணத்தைப் பத்திரமா வைச்சுக்கிட்டு என்ன பண்ணுவே?"

உள்ளபடியே லிங்கங் கட்டிக்குத் திகைப்பாய்ப் போய்விட்டது. ஆமாம், பணத்தை வைத்துக்கொண்டு என்ன பண்ணுகிறது?

"பின்னே எறிஞ்சிடலாமா?"

"அதுக்குச் சொல்லவில்லே. ஒரு நல்ல காரியம் சொல்றேன். யோசிச்சுப் பாரு."

"ஓ!"

'கழுத்து லிங்கம் இருக்கல்லே?"

"ஆமாம்."

"இதைக் கவுத்தாலே கட்டிப் போட்டுக்கிட்டுக் கிடக்கிறியே! இருக்கிற பணத்துக்குப் பவுனைக் கிவுனை வாங்கிச் செயின் பண்ணி லிங்கத்தை அதில் கோத்துப் பிடேன். கழுத்துக்கும் அழகாயிருக்கும், லிங்கமும் பார்வையா யிருக்கும். திருக்குளத்திலே திருநீறும்

தங்கச் செயின் லிங்கமுமாகக் கிழக்கே சூரியனைப் பார்த்துக் கொண்டு நிக்கறதைப் பார்த்தால் அசல் சிவப் பழம் இம்பாங்க. நல்லா இருக்குமே?''

''என் கழுத்துக்கு என்னுத்துக்குங்க?''

''ஒன் கழுத்துக்கா செயின்? இல்லே இல்லே. லிங்கத்துக்குச் செயின் செய்யச் சொல்றேன். செயின் போட்ட லிங்கத்தை மடியிலே கட்டிக்கிறேன்கிறியா?''

''இல்லே, இல்லே.''

''அப்பிடின்னு கழுத்திலேதானே போட்டுக் கணும்?''

''செஞ்சால் பாத்துக்குவம்'' என்று லிங்கங் கட்டி சொல்லிப் பேச்சை வெட்டி விட்டான். தவசிப் பிள்ளை யும் அதோடு போய்விட்டான்.

தென்னம் நெற்று சீக்கிரமாக முளைத்து விடாது கொஞ்சம் காலம் பிடிக்கும். அது மாதிரி லிங்கங் கட்டி மனத்திலே போட்ட தென்னம் நெற்று மெதுவாக முளைக்க ஆரம்பித்தது. கிழவி நல்லவள் தான். ஆனால் வயிசாயிடுச்சே! ஒரு சமயத்தைப் போல ஒரு சமயம் இருக்குமா? அப்படி என்றால் இந்தப் பணத்தை யாரிடம் மாற்றுகிறது? ஆள் யாரும் தெரியவில்லையே! தவசிப் பிள்ளை சொல்றது நல்ல யோசனைதான். லிங்கத்துக் குச் செயின் பண்ணினல் நல்லாத்தான் இருக்கும் என்றெல்லாம் யோசனை செய்துகொண்டே இருந்தான்.

இதற்குள் வயது ஒரு வருஷம் கூடிவிட்டது. புகை யிலையைப் போலக் காய்ந்து வந்த லிங்கங் கட்டி வெள் ளரிப் பழம் மாதிரி ஆகிவிட்டான்.

ஒருநாள் திடீரென்று ஆசாரியிடம் போய்த் தனக் குச் செயின் செய்ய எவ்வளவு பவுன் வேண்டுமென்று கேட்டான். ஆசாரிக்குச் சிரிப்புத் தாங்கவில்லை

"இந்த வயதிலா கலியாணம் செய்து கொள்ளப் போகிருய்?'' என்று கிண்டலாகக் கேட்டான்.

"இல்லே, இந்த லிங்கத்துக்கு" என்று காட்டினதும் வியாபார ரீதியில் ஆசாரி பேசத் தொடங்கி விட்டான்.

"முக்கால் பவுனிலேருந்து செய்யலாம்.''

"அதுக்குக் குறைஞ்சி?''

"முடியாது.''

"கூலி?''

"உனக்காகப் பதினைஞ்சு ரூபாய்."

''என்னய்யா முக்கால் பவுனுக்கு...''

"அதானய்யா —சின்னச் செயினுக்குப் பெரிய கூலி, பெரிய செயினுக்குச் சின்னக் கூலி. பெரிய செயினுலே லிங்கத்துக்குப் பண்ணிக் கட்டிக்கியேன் ?'!

"ஏதோ பாத்துக் கூலி வாங்கிக்கோ அய்யா, பவுன் வாங்கியாரேன்'' என்று திரும்பி விட்டான்.

பதினைந்து நாள் கழித்துத் திருக்குளத்தில் நீராடி விட்டுத் திருநீறணிந்து தங்கச் செயினும் லிங்கமும் துலங்க, லிங்கங்கட்டி சத்திரத்துக்குத் திரும்பிவந்தான்.

தவசிப் பிள்ளை திண்ணையில் ஏதோ சில்லறை வியாபாரம் பண்ணிக் கொண்டிருந்தான். லிங்கங் கட்டியைப் பார்த்ததும் புதுமையாக இருந்தது. இன்னதென்று ஒரு நிமிஷம் விளங்கவில்லை. பிறகுதான் தெரிந்தது. "சபாஷ்! சபாஷ்! ரகசியமாச் செஞ்சிட்டியே!'' என்ருன் சந்தோஷம் பொங்க

"என்ன பிரமாத காரியம்! ஏதோ ஆண்டவனுக்கு உவப்பாயிருக்குமேன்னு...''

"நல்ல காரியம், நல்ல காரியம்'' என்ருன் தவசிப் பிள்ளை. கண்ணிலே படாத காசாக வைத்துக் கொள்

வதை விட்டுத் திருட்டுப் பயலை வருந்தி அழைப்பது போன்ற காரியத்தைச் செய்து விட்டானே இந்த ஆள் என்று நினைத்துக் கொண்டான். ஏன் இந்த யோசனை சொன்னோமென்ற கழிவிரக்கத்தின் சாயல் கூடப் படர்ந்து விட்டது.

செயின் போட்ட லிங்கங் கட்டி ஆகிவிட்டதற்காக அவன் ஒன்றும்மாறிவிடவில்லை. வழக்கம்போல சத்திரத் துக் காரியங்களைப் பார்த்துக் கொண்டான். கழிவிரக்கம் காட்டிய தவசிப் பிள்ளையும் மாறவில்லை. பண்டாரத் துக்குக் கொடுக்கிற கவளத்தில் ஏற்றம் ஒன்றும் ஏற் படவில்லை.

இதற்குப் பிறகு நான்கு மாதம் இருக்கலாம். லிங் கங் கட்டிக்குத் திடீரென்று ஒரு நினைப்பு வந்தது. "தம்பி! திருமுலைப்பால் உச்சவத்துக்குப் போகணு மின்னு தோணுது. போயிட்டு ஒரு வாரத்திலே வந்தி டறேன்" என்றான் தவசிப் பிள்ளையிடம்.

"குடுத்து வச்சிருக்கணும். போயிட்டு வா."

"பாத்திரம் எல்லாம் விளக்கணுமே ?"

"யாரையாவது வச்சுப் பாத்துக்கிடறேன்."

மறுநாள் சீர்காழிக்கு லிங்கங் கட்டி புறப்பட்டு விட் டான். ஒரு வாரம் லிங்கங் கட்டி யில்லாமல் பொழுதை ஓட்ட வேண்டுமே என்ற கவலைகொண்ட தவசிப்பிள்ளை படுக்கப் போகுமுன் ஒரு நாளாச்சு என்று கணக்கிட்டுக் கொண்டு படுத்தான். ஒவ்வொரு தினமும் ரப்பர் மிட் டாய் மாதிரி நீண்டது.

நான்காம் நாள் காலை தவசிப் பிள்ளை காய்கறி நறுக் கிக் கொண்டிருந்தான். முற்றிலும் எதிர்பாராமல் லிங் கங் கட்டி எதிரே வந்து நின்றான். தவசிப் பிள்ளைக்குக் கனவா என்று கூடத் தோன்றிவிட்டது.

"என்ன, லிங்கங் கட்டியா ?"

"பின்னே ?"

"அதுக்குள்ளார வந்தூராட்டியே ? என்று கேட்டுக் கொண்டே லிங்கங் கட்டியை மேலும் கீழும் பார்த்தான். கைம்பெண் கழுத்துப் போலிருந்தது.

"என்ன பண்டாரம், லிங்கம் சங்கிலி ஒண்ணையும் காணுமே ?"

"ஆமாம்."

"எங்கே ?"

"ஏமாந்து போயிட்டேன்."

"எப்படிப் போச்சு ?"

"அதாங்க ஞானப்பால்."

"விளக்கமாகச் சொன்னு அல்ல தெரியும் ?"

"திருவிழாப் பாத்தூரட்டு முந்தா நாள் ராத்திரி சத்திரத்து வாசல்லே குந்திக்கிட்டு இருந்தேன். வேறு யாராரோ திண்ணையிலே வாழைத் தோலைச் சீவிப் போட்ட மாதிரி தலைமாடு கால்மாடா விழுந்து கிடந்தாங்க.

"திண்ணையிலே யாரோ ரெண்டு ஆள் என்னவோ பதி பசு பாசம் இன்னு சத்தம் போட்டுப் பேசிக்கிட்டு இருந்தாங்க. நடுவிலே அதிலே ஒரு ஆள் பாடினுரு. கொஞ்ச நேரத்துக் கெல்லாம் பேச்சு அடங்கிப் போய், பாட்டே பாட ஆரம்பிச்சுட்டாரு. ரொம்ப நல்லாக் குயில் கணக்காப் பாடினுரு. அப்படியே சாஞ்சுக்கிட்டிருந்தவன் அதிலே சொக்கிப் போயிட்டேன்.

'மாங்காய்ப் பாலுண்டு
மலைமே லிருப்போர்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி—குதம்பாய்'

இன்னு ஒரு பாட்டுப் பாடினுரு. அப்படியே மெய்மறந்தே போயிட்டேன். பொறவு, பாட்டே காதில் விழவில்லே.

"அப்புறம் நெனைப்பு வந்தப்பொ கண்ணைத் துறந்து பார்த்தேன். கிழக்கு வெளுத்துக்கிட்டிருந்தது. திருவிழா அலுப்பும் அந்தப் பாட்டும் என்னை அப்படி அமட்டி விட்டது. நல்ல தூக்கம் இன்னு நினைச்சுக்கிட்ட போது ஒரு திகில் பிறந்தது. கழுத்தென்னவோ லேசாக இருந்தது. தொட்டுத் தடவிப் பார்த்தேன். லிங்கமா செயினு ஒண்ணையும் காணோம். யாரோ தூங்கிக் கொண்டிருந்தபொழுது அடிச்சுக்கிட்டுப் போயிட்டார்கள்! சத்திரத்துத் திண்ணையில் இருந்தவர்களை ஒவ்வொருவராகப் பார்த்தேன். திருடி இருப்பார்கள் என்று அவர்களைப் பார்த்தால் தோணவில்லே.

'என்ன பாக்குறீங்க பண்டாரம்' என்று திண்ணையில் இருந்தவர்கள் விசாரித்தார்கள்.

"நான் நடந்ததைச் சொன்னேன். அவர்கள் சிரித்தார்கள்."

" 'சாமி எடுத்துக்கிட்டுப் போயிருக்கும். ஞானப் பால் குடுக்க வேணும்?' என்ருர்கள்.

"எனக்குச் சுறுக்கென்று பட்டது. 'லிங்கத்துக்குப் போய் மட்டிமாதிரித் தங்கச் சங்கிலி செஞ்சேனே? பைத்தியக்காரத்தனம்!' என்று நினைத்துக்கொண்டே ஊருக்குத் திரும்பி வந்து விட்டேன்.

"ஞானப் பால் கிடைச்சுப் போச்சு."

"அப்புறம்?"

"நான் போறேன்."

"எங்கே?"

"இப்படியே நீளமா."

"பின்னே ஏன் வந்தே?"

"சம்பளங் கொடுத்து வேறு ஆள் பாத்து வச்சுக் குங்கன்னு சொல்ல வந்தேன்."

"அடப்பாவி! நெசமாகவே ஞானப் பால் கிடைச் சுட்டுதா?"

லிங்கங் கட்டி பதில் சொல்லவில்லை. மழுங்கிய தலை யைத் தடவிக்கொண்டே தெருவில் இறங்கி விட்டான்.

# நிழலாட்டம்

சந்திரனைப் போய்ப் பார்க்க வேண்டும். அதை ஆராய வேண்டும், இதைச் சோதிக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லும்போது எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. கிட்டத்திலிருப்பதையே நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லையே! அவ்வளவு என்ன? என்னையே எனக்குப் புரியவில்லையே! எனக்கு நல்ல சுபாவம் என்றுதான் நான் நெடுநாளாக நினைத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் இப்பொழுது அவ்வளவு நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ஏனென்றால் நல்லது என்பதே நிலையற்றதாக இடம் பொருள் ஏவலுக்கு ஒப்ப, புரளக் கூடியதாகத் தோன்றுகிறது! எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால்—

சித்திரை மாதம் அந்த வீட்டுக்குக் குடக்கூலிக்கு வந்தேன். என் பாகத்திற்கு வாடகை முப்பது ரூபாய். வாசல் புறத்தில் இந்த பாகமிருந்தால், ஜன்னல் வழியாகக் காற்றும் வெளிச்சமும் கிடைக்குமே என்று தாங்காத வாடகையை ஏற்றுக்கொண்டேன்.

சொத்துரிமை, வாரிசு சட்டம் என்று சர்க்கார் வைத்திருப்பதால், வீட்டுக்கு ஏதாவது வாடகை கொடுக்க வேண்டியது நியாயந்தான். ஆனால் காற்றுக்கும் வெளிச்சத்துக்கும் சேர்த்து வாடகை வைப்பதென்பதை நியாயம் என்று எப்படிச் சொல்ல முடியும்? இந்த மாதிரிக் காரியங்கள் தான் மனத்தில் கசப்பைத் தடவி விடுகின்றன. நல்லவனையும் அவனை அறியாமலே கெட்டவனாக்கி விடுகின்றன. வீட்டுக்கார அம்மாவிடம் நான் நல்லவனாகத்தான் பழகி வந்தேன். அந்த அம்மாளுக்

கும் என்னிடம் ரொம்ப நல்ல அபிப்பிராயம் தான். ஆனால் என் மனத்தின் மூலை ஒன்றில் மட்டிலும் வெளிச் சத்துக்கும் காற்றுக்கும் விலைபோட்டு விட்டாளே என்ற கறையான் புற்று வைத்துக்கொண்டிருந்தது.

ஆனால் எதிர்பாராத ஒரு உறவு ஏற்பட்டதே, பணச் செலவில்லாமல், அதற்கு நான் நன்றி காட்டத்தான் வேண்டும். சிலருக்குப் புஸ்தகம் படிக்காவிட்டால் தூக்கமே வராது. இரவாகட்டும் பகலாகட்டும். கண்ணின் சிறிய ரத்தக் குழாய்களை நிரப்பி, விழியைக் கனக்கச் செய்து, இமைகளைத் தொங்க வைக்கப் புத்தகங்களை விடச் சிறந்த சாதனமில்லை என்பது அவர்களுடைய அனுபவ சித்தாந்தம். நான் அந்த வர்க்கத்தைச் சேர்ந்தவனல்லன். உண்மையில் நான் ஒரு புத்தகப் பைத்தியம். ஒரு வேளைச் சோறில்லாவிட்டால்கூட பரவாயில்லை. ஒரு நாளைக்குப் புத்தகமில்லாவிட்டால் உயிரோடு இருப்பதாகத் தோன்றாது. வாசல்புற அறையிலே படுக்கை, டிரங்கு, வண்ணான் அழுக்கு மூட்டையைத் தவிர என்னுடைய புத்தகங்களுக்கும் இடம் தயாரித்தேன். அறையில் அலமாரி இல்லை. எனவே புத்தகங்களை வடவண்டை சுவரோரமாக அடுக்கி வைத்திருந்தேன்.

குடிபுகுந்த ஒரு வாரம் வரையில் இந்தப் புத்தகங்களை எடுக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. படிப்பதற்கு வேறு இரண்டொரு புத்தகங்கள் கிடைத்து விட்டன. ஒரு வாரம் கழித்து என் புத்தகங்களை எடுக்க நேர்ந்தது. அருகில் போய்ப் பார்த்தபொழுது கறையான் புற்று ஒன்று சுவரிலிருந்து புத்தகங்களுக்குப் பாலம் அமைத்திருந்தது தெரிந்தது. எனக்கு ஒரே கோபம், எரிச்சல்! யார்மீது என்று தான் புரியவில்லை. கோபம் அடங்கியதும் புத்தகங்களை எல்லாம் தட்டிக் கொட்டிச் சுத்தம் செய்து, மற்றொரு சுவரின் பக்கமாக

அடுக்கி வைத்துவிட்டு, வீட்டுக்கார அம்மாவை அழைத்துக்கொண்டு வந்து சுவரின் நிலைமையைச் சுட்டிக் காட்டினேன்.

"புத்தகங்களைக் கறையான் அரித்தது பெரிதில்லை. கறையான் ஓட்டையில் மண்ணெண்ணை விட்டால் கறையான் அந்த இடத்தை விட்டுப் போய்விடும் என்பதைப் பற்றியும் சந்தேகம் இல்லை. ஆனால்—" என்று சொல்லி நிறுத்தி விட்டேன்.

அந்த அம்மாள் பயந்து போய் விட்டாள். "ஆனால் என்றீர்களே—என்ன?" "இந்த இடத்தை விட்டால் சுவத்தில் இன்னொரு இடத்தைப் பொத்துக்கொண்டு கறையான் குடி இருக்க ஆரம்பிக்கும். கறையானில் தாய்ப் புழு ஒன்றிருக்கிறது. சுவத்தைப் பிரித்துப் பார்த்தால் ஒழிய, அதைக் கண்டுபிடித்து ஒழித்தால் ஒழிய, புற்றும் ஒழியாது, சுவரும் தப்பாது."

வீட்டுக்கார அம்மாள் ஒரு நிமிஷம் வாயைத்திறந்து கொண்டு நின்றாள். 'சுவத்தை இடிக்கச் சொல்லுகிறானே, பாவி' என்ற எண்ணமோ என்னவோ! அதற்குப் பிறகு ஒரு காக்கைப் பார்வை பார்த்துவிட்டு சுவத்தைப் போய்ப் பல இடங்களில் தொட்டுப் பார்த்தாள்.

"சுவரென்ன ஜஸ்மாதிரி இருக்கிறதே!'

'ஆமாம், அப்படித்தானிருக்கும். அது தெரிந்துதான் கறையான் குடியேறி இருக்கிறது. பூனையாய் இருந்தால் அடுப்பைத் தேடும்"

ஒரு நிமிஷம் யோசித்தாள். பிறகு என்ன தீர்மானம் செய்துகொண்டாளோ என்னவோ, என்னையும் அழைத்துக் கொண்டு வடவண்டை பக்கத்துச் சந்தில் வந்து நின்றாள்.

அப்பொழுது சுவர் ஏன் பனிக்கட்டி மாதிரி இருக்கிறதென்பதற்குக் காரணம் தெரிந்துவிட்டது. வீட்டு

வடவண்டைச் சுவத்துக்கு வெளிப்புறம் சுவரை ஒட்டி ஒரு சாலவம் ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் அதில் இருந்த தண்ணீர் மட்டும் நின்றுகொண்டிருந்தது. தண்ணீரில் சின்னக் கொசுவும் பெரிய கொசுவும் படை படையாகக் காற்றில் அலையாடிக் கொண்டிருந்தன.

சாலவத்தை அடுத்த வடவண்டையில் ஆறடி அகலத்திற்கு ஒரு நடைபாதை இருந்தது. இரண்டு யானைக் குட்டிகளைக் கட்டக்கூடிய அளவு பள்ளம். பள்ளத்துக்கு வடபுறமும் கீழ்ப்புறமும் வரிசையாக ஆறு குடிசைகள். அந்தந்தக் குடிசைகளின் வாசலே அல்லாது நடைபாதை அல்ல என்ற கட்சி குடிசையில் வாழ்பவர்களிடையே இருந்தது இப்பால்தான் தெரிந்தது. குடிசைகளை வர்ணிப்பது கடினமான காரியம். குடிசையின் வாசல்தான் திட்டிவாசல் மாதிரி இருக்கிறதே; திமிருடன் நடக்காதே என்று போதனை செய்துகொண்டிருக்கிறதே; குடிசைக்குக் கீத்தாவது சரியாக இருக்கக் கூடாதா? க்ஷயரோகம் பிடித்தவன் மார்க்கூட்டு எலும்பு போல கூரை முழுதும் குறுக்கு மூங்கிலும் நெடுக்கு மூங்கிலும் அங்கங்கே தெரிந்துகொண்டிருந்தன.

குடிசைகளை நான் பார்த்துக் கொண்டிருந்த பொழுதே வீட்டுக்கார அம்மாள் சந்து முகப்பில் நின்று கொண்டு ''வெள்ளைச்சாமி'' என்று கூப்பிட்டாள்.

''யார் வெள்ளைச்சாமி?'' என்றேன்.

''இந்தக் குடிசைகளெல்லாம் அவருக்குத்தான் சொந்தம்.''

வெள்ளைச்சாமி வெளியே வந்தார். அவர் உடம்பை நெளித்துக்கொண்டு வந்த விதத்திலிருந்து பலே பேர் வழியாக இருப்பார் போலத் தோன்றிற்று.

''என்னம்மா கூப்பிட்டீங்களே?''

"எங்க சுவத்தை உக்கார வைக்காவிட்டால் உங்களுக்குத் தூக்கம் வராதா?"

'என்னங்க கோவிச்சுக்கிறீங்க?"

"நானு கோடப்படறேன்? இப்படிச் சாலவத்திலே தண்ணீர் நின்னால் என் சுவர் எப்படிப் பிழைக்கும் என்றுதான் சொல்றேன்."

"நான் நிக்கச் சொல்லலீங்களே?"

"ஓடச் சொல்லல்லேன்னுதான் குறை சொல்லுகிறேன். என் சுவர் பாதிக்கு மேலே ஈரம் காத்துப் போச்சு. கறையான் வேறே சுவத்திலே புத்து வச்சு விட்டது புதுசாய்க் குடி வந்திருக்கிற இவர் புஸ்தகத்தை எல்லாம் கறையான் தின்னூட்டுது."

"புஸ்தகம் வச்சா அப்பப்பொப் பாத்துக்கிட்டிருக்கணும். இல்லாட்டி அப்படித்தான்."

இந்த பதில் என்மீது எய்த அம்பு மாதிரி இருந்தது. ஆனால் நான் பதில் சொல்ல வில்லை. தன்மீது ஒரு பிசகும் இல்லை என்று சொல்லித் தற்காப்புக்கு அவன் அடிகோலிய திறமையை மனத்தில் பாராட்டிக் கொண்டிருந்தேன். சொத்திருந்தால் தீர்க்க திருஷ்டியும் புத்திசாலித்தனமும் உடன்பிறப்பாக இருக்கும் போல் இருக்கிறது!

"அவர் மேலே தப்பு இருக்கட்டும். உங்க சாக்கடை விஷயத்தைப் பாருங்க" என்றாள்.

அவளும் அதே குட்டையில் ஊறிய மட்டை தானே!

"அதுக்கு நான் என்ன பண்றதுங்க? இந்த நகர சபைக்காரங்க திறந்த சாக்கடையாக வைக்காமெ பாதாளச் சாக்கடைக் குழாய் வச்சாங்களே, அதனால் வந்த வம்பு."

'தண்ணித் தாகமின்னு மழை மேலே பழி போட்டாப் போதுமா? பாதாளச் சாக்கடையைப் பாத்தால் என் சுவர் போற வழி?''

"அதுக்கு சொல்லல்லே. இந்த வீடு வாசலேயும் குடக்கூலிக்காரங்களேயும் கட்டிக்கிட்டு பெரிய தொந்தரவாப் போச்சு. அஞ்சு நாளாச்சு நகரசபை மேஸ்திரிக்குச் சொல்லி. ஆளனுப்பறேன்னுரு, இன்னும் வருது."

"நீங்க ரெண்டு ஒண்ணுக்குக் கணக்குப் பாப்பீங்க. அதான் ஆள் வல்லே. சாலவம் நிக்குது. உடனே ஏதாவது சாக்கடைக்குச் செய்யுங்க. இல்லாட்டி சுவர் போயிடும். நானும் போக வேண்டியதுதான். வாடகையிலேதானே நீங்களும் நானும் பொழச்சாகணும்.''

''சூட்டோடெ செஞ்சுடுங்க. இல்லாட்டிக் கறையான் துணிமணிக்கு வந்து விடும்'' என்று ஒத்து ஊதினேன்

மறுநாளேக்குள் சாலவத்தைச் சீர்செய்வதாக வெள்ளேச்சாமி உறுதி அளித்தார். நாங்கள் திரும்பி வந்து விட்டோம்.

இரண்டு நாளேக்குப் பிறகு வெள்ளேச்சாமி என் ஜன்னலண்டை வந்து எட்டிப் பார்த்தார்.

''என்ன பார்க்கிறீங்களே?''

"ஒண்ணுமில்லே. சாலவத்தைச் சரி பண்ணிட்டேன்னு சொல்ல வந்தேன். அம்மாகிட்டே சொல்லிடுங்க. என்னவோ கறையான் பிடுச்சுது இன்னிங்களே—எங்கே?"

அவர் பேசியது என்னேப் பொய்யனுக்குவது போலிருக்கவே, நான் கறையான்மீது சுமத்திய குற்றத்தை எளிதாக்க முயன்றேன்.

"ஒண்ணுமில்லே. ஒரு புஸ்தகத்தின் மூலேயிலேதான் கறையான் ஏறி இருந்தது. இப்பொ அந்தத் தொந்தரவு கூட இல்லே."

"எதிலும் நாம் உஷாராக இருக்கவேண்டும்" என்று பொதுப்படையாக உபதேசம் செய்துவிட்டு வெள்ளேச் சாமி போய்விட்டார்.

அன்று முதல் எனக்கும் அவருக்கும் பழக்கம் ஏற்பட்டது. கைமாத்துக் கடன் கொடுத்து வாங்கக் கூடிய அளவுக்கு முற்றிக்கூடப் போய்விட்டது. அவர் குழந்தை ஒரு நாள் இரவு மூச்சுத் திணறியபோது நான்தான் ஆஸ்பத்திரிக்குப் போய் வேண்டிய வைத்தியத்திற்கு ஏற்பாடு பண்ணினேன். வெள்ளேச்சாமி என்னே இதற்காகத் தினம் வாழ்த்திக் கொண்டிருந்தார்

இவ்வளவு நல்லவனுக அவருக்கு நான் இருந்த போதிலும் என் மனத்திற்கு மட்டும் அவரைப் பிடிக்கவில்லே. குடிசைகளேக் குடக்கூலிக்கு விட்டுப் பிழைப்பவர்தானே என்ற இளப்பமான எண்ணம். வாடகை இரண்டு ரூபாயாக இருந்தால் குடியிருப்பவர்களுடன் சந்திரனும் சூரியனும், மழைத் தண்ணியும் தூசியும் சேர்ந்து இருக்கத்தான் வேண்டுமா? சாலவத்தை இரண்டணு நாலணுக் கொடுத்துச் சுத்தமாக வைத்துக் கொள்ளக்கூடாதா? யானேக்குட்டிப் பள்ளத்தை மூடி நடப்பதற்குச் சௌகரியமாக வைத்திருக்க வேண்டாமா? இப்படி எல்லாம் குருட்டுத்தனமாக மனத்தில் தோன்றும். அவருடன் சகஜமாகப் பேசிப் பழகிக்கொண்டிருக்கும் நேரத்தில் எல்லாம் தண்டவாளத்தைப் போல நேராக இந்த எண்ணங்களும் ஓடிக்கொண்டே இருந்தன.

இந்த முரண்பாடு ஒரு சமயம் வெடித்தே விட்டது. வெள்ளேச்சாமி ஒரு நாள், 25 ரூபாய் அவசரம் என்று கடன் கேட்டார். என்ன அவசரம் என்று கேட்டதற்கு

விளக்கமாக ஒன்றும் சொல்லவில்லை. குடிசைகளுக்குக் கீத்துப் போட என்பதைப் போல ஏதேனும் சொல்லி யிருந்தால் நான் ஏமாந்து போயிருப்பேன். அப்படி அவர் ஒன்றும் சொல்லாததால், என்னையும் அறியா மலே பதில் வந்து விட்டது. கையில் பணம் இருந்தும் அப்படிச் சொல்லி விட்டதனால் பிரமாதப் பொய்யாகி விடுமா? அவர் என்ன உற்றரா உறவினரா?

''இந்தச் சமயத்திலே பணமில்லையே!''

வெள்ளைச்சாமி ஐந்து நிமிஷம் பிடரியைத் தடவிக் கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்து விட்டு திடீரென்று ஒரு போடு போட்டார்.

''என்னங்க, மதியத்துக்கு தபால்காரர் மணியார்டர் கொண்டுகிட்டு வந்தாரே?''

''எனக்கில்லியே?''

''தபால்காரர்தான் வீட்டு நம்பர் தவறுதலால் என் கிட்டே முதலில் காட்டிக் கேட்டாரே?''

''அதான் சொன்னேனே. சம்சாரத்துப் பணம்— என் பேருக்கு வந்திருக்கிறது. அதிலே போய் நாம் கை வைக்கலாமா?''

''கூடாதுங்க கூடாதுங்க'' என்று சொல்லிவிட்டு எவ்விதமான உறுத்தலுமின்றிப் போய் விட்டார். மாமரத்தில் எறிந்த கல் வெறுமனே திரும்பிவிட்டேனே என்று கலங்குகிறதா, என்ன?

பத்து நாளைக்குள் எங்கள் வீட்டுக்கார அம்மா சமாசாரமும் தெரிந்துவிட்டது. ஒரே குட்டையில் ஊறிய மட்டை என்பதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. வீட்டுக் குழாய் பழுதாகித் தண்ணீர் வரவில்லை. எனக்கு மட்டும் தான் வரவில்லை என்றால் ஒப்புக்கொண்டு விடலாமே! அந்த அம்மாளுக்கும் வரவில்லை. அதற்காக யாரையோ

கூப்பிட்டு எதையோ கொடுத்துக் குழாயைச் செப்ப னிட்டுவிட்டுக் கூலியில் என் பங்கென்று கேட்க ஆரம் பித்தாளே பார்க்கணும்! சொத்திருந்தாலே சுபாவம் இப்படித்தான் இருக்கும் என்று மனது அலுத்துக் கொண்டது

இரண்டு நாளைக்குப் பிறகு மாலையில் மப்பும் மந்தரா மமாக இருந்தது சாயங்காலப் பத்திரிகையில் புயலைப் பற்றி ஏதோ விஞ்ஞான ஜோதிடம் வந்திருந்தது. வெறும் ஜோதிடமென்றால் அலக்ஷியமாக இருக்கலாம். வானிலை விஞ்ஞானமாச்சே! என் மனது பக்கத்துக் குடிசைகளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது.

இரவு எட்டு மணிக்குமேல் விட்டு விட்டுத் தூர ஆரம்பித்தது பத்து மணிக்குள் மழை வந்துவிட்டது. புஸ்தகம் வண்ணான் துணி இவைகளைச் சுவரில் தண்டா மல் இழுத்து வைத்து விட்டுத் தூங்கிவிட்டேன்.

மணி என்ன இருக்குமோ தெரியாது. திடீரென்று விழித்துக் கொண்டேன். கனமான மழை அடித்துப் பேய்ந்து கொண்டிருந்தது. காற்றும் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது. இவ்வளவுக்கும் இடையில் வேறொரு தனி ஓசையும் கேட்டது. முதலில் இன்னதென்றே விளங்க வில்லை. அதற்குப் பிறகுதான் தண்ணீரை எடுத்துக் கொட்டுவது போன்ற ஓசை என்று தோன் றிற்று. இந்த மழையில் தண்ணீரை எடுத்து எந்தப் பைத்தியக்காரன் கொட்டப்போகிறான் என்ற வியப்பும் கூடவே தோன்றிற்று.

மெதுவாக எழுந்து ஜன்னலைத் திறந்து கொண்டு பார்த்தேன் மழை கொட்டிக்கொண்டிருந்தது. காற்றில் மரங்கள் ஆடிக்கொண்டிருந்தன. அந்த மழையில் சந்தில் குடி இருப்பவர்கள் எல்லாம், கோவணம் கட்டாத பயல்கள் உள்பட, ஆளுக்கொரு பாத்திரத்தில் தண் ணீரை மொண்டு வந்து வெளியே ஊற்றிக் கொண்டிருந்

தார்கள். யானைக் குட்டிப் பள்ளத்தில் குளத்தைப்போல் தேங்கிய மழை நீரை மொண்டு மொண்டு கொட்டுகிறார் கள் என்று தெரிந்துவிட்டது. என்ன அவசரம் இந்த நேரத்தில்? இல்லாவிட்டால் குடிசைகளுக்குள் இந்தத் தண்ணீர் கட்டாயம் புகுந்துவிடாதா? வெள்ளைச்சாமி கூடையால் மூடி வைத்திருந்த விளக்கண்டை நிற்ப தும், இரண்டொரு பக்கெட் தண்ணீர் ஊற்றுவதுமாக இருந்தார். சந்தில் இருப்பவர்கள் எல்லாருமே இருக் கிறார்களா என்று ஒவ்வொருவராகப் பார்த்துக்கொண்டு வந்தேன். என்ன ஆச்சர்யம்! எங்கள் வீட்டுக்கார அம்மாகூட பாத்திரத்தில் தண்ணீர் மொண்டு ஊற்றிக் கொண்டிருந்தாள்! பார்க்கப் பார்க்க எல்லாமே நிழ லாட்டம் போலிருந்தது.

பாவம்! நாமும் போய் உதவி செய்ய வேண்டாமா என்று தோன்றிற்று. ஏழை பாழைகள் மழையில் கஷ்டப் படுகின்றனரே! குழந்தைகள் கூட மழையில் வேதனைப் படுகின்றனவே!—இப்படி எண்ணிக் கொண்டே ரேழி வாசல் வரையில் வந்துவிட்டேன். என்னவோ, மறு எண்ணம் தோன்றிற்று. இடக்குப் பண்ணுகிற ஜட்கா வண்டிக் குதிரை மாதிரி மனது உதைக்க ஆரம்பித்தது.

இரக்கம்தான் காரியங்களையே கெடுத்துவிடுகிறது. இந்த மாதிரி இரக்கம், பலஹீனங்களை நம்பித்தான் சுயநலம் தழைக்கிறது. சுயநலத்திற்குத் தண்ணீர் கட்ட நாம் போய் இறைப்பானேன்? சொத்திருக்கிறவன் அழும்பு செய்து கொண்டே போனால் பொறுமையாக இருக்கவேண்டுமா? பொறுமையாய்த் தாங்கிக் கொண் டிருக்கிறவர்கள் கஷ்டத்தைப் பங்கு போட்டுக்கொண்டு பிறர் இரக்கம் காட்டவேண்டுமா? அதெப்படி நியாய மாகும்? என்று தோன்றிற்று.

ரேழி வாசலிலிருந்தும் தண்ணீர் இறைக்கும் சத்தம் காதில் விழுந்துகொண்டுதா னிருந்தது. தத்துவத்தைப்

பற்றியெல்லாம் யோசிக்காமல் போவோம் என்று நகர்ந்தேன். எங்கள் வீட்டுக்கார அம்மா மும்முரமாகத் தண்ணீர் இறைத்துக் கொட்டிக் கொண்டிருந்தாள். அப்படியானால் இந்த அம்மாளும் இரக்கப்பட்டு இந்தக் காரியத்தில் ஈடுபட்டிருந்தாளா? சே சே! குடக்கூலிப் பணம் அனாவசியமாகச் செலவழியக் கூடாது என்று வெள்ளைச்சாமி பார்க்கிறார். தண்ணீர் தேங்கி நின்றால் சுவருக்கு ஆபத்தாச்சே என்று இந்த அம்மாள் நினைத்துக் கொண்டு இரக்கம் காட்டலா மல்லவா? செய்கையைக் கவனிக்கக் கூடாது; மனோபாவத்தைத் தான் கவனிக்க வேண்டும். ஆகையினால்—? தண்ணீரை இறைத்தால் வெள்ளைச்சாமிக்குத்தான் லாபம். எங்கள் வீட்டுக்கார அம்மாவுக்குத்தான் லாபம். நெல்லுக்கு இறைக்கும் வாய்க்காலில் புல் இருக்கிறதே, அந்த மாதிரி இந்தக் குடிசை யாட்கள்! மழைக்கு முந்தியும் யானைக் குட்டிப் பள்ளமிருந்தது; பிந்தியும் நிச்சயம் இருக்கப்போகிறது. தரித்திரத்துக்கு முட்டுக் கொடுத்து நிலைக்க வைப்பானேன்? உடைமைக்காரன் ஒருவனும் உபயோகிப்பவன் வேறு ஒருவனுமாக இருக்கும்வரை இந்தக் கதிதான் என்று மனது உதைத்துக் கொண்டே இருந்தது.

அப்படியே சில நிமிஷம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். பார்க்கப் பார்க்க, பெரிய நிழலாட்டம் போல் இருந்தது. பிறகு திரும்பி வந்து படுத்துக் கொண்டு விட்டேன்.

தூக்கம் சரியாகப் பிடிக்கவில்லை. கண் இமைகள் மூடித்தான் இருந்தன. இருந்தாலும் பள்ளத்திலிருந்து எல்லோரும் தண்ணீர் மொண்டது தெரிந்து கொண்டு தானிருந்தது. தண்ணீரைக் கொட்டும் ஓசை மழை ஓசைக்கிடையில் காதில் விழுந்து கொண்டுதான் இருந்தது. எப்பொழுது மழையும் தண்ணீர் இறைப்பதும் நின்றதோ தெரியாது.

மறுநாள் காலையில் சந்துப் பக்கம் போய் எட்டிப் பார்த்தேன். யானைக் குட்டிப் பள்ளத்திலே சொட்டுத் தண்ணீர் கூடக்காணும்: கோவணம் கட்டாத குழந்தைகள் ஈர்க்குச்சியில் மண்குடை செய்து கொண்டிருந்தார்கள் !

தூக்கம் தெளிந்த இந்த நேரத்தில் பகல் வெளிச்சத்தில், நீ செய்தது சரியா என்று ஏதோ ஒன்று முணுமுணுத்துக் கொண்டிருக்கிறது.

# பழிக்குப் பழி

எங்கள் வருஷப் பிறப்பு தினம். மாலே நேரம். பகல் விருந்தின் கனத்தைக் குறைக்க வேண்டி இரண்டொரு மைலாவது நடந்துவிட்டு வரலாமென்று நாங்கள் கிளம்பினேம். புதுச்சாலே வழியாக ஏதேதோ பேசிக் கொண்டு, ரயில்வே ஸ்டேஷனை அடைந்தோம். நூற்றுக் கணக்கான எலிகளைக் கம்பிக் கூண்டுகளில் அடைத்து, கூடுகளைக் காவடிபோல் மூங்கில் கழியில் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு தோட்டிகள் எடுத்துப் போகும் காட்சி தென்பட்டது. சந்துரு "நமது ஊரில்தான் பிளேக் வழக்கமில்லேயே, இவைகளை எதற்காகக் கொண்டு போகிறார்கள் ?" என்றான்.

"புவ்! உனக்குத் தெரியாதா ? எலிகளுக்குப் பற்கள் அவ்வளவு கூர்மையாய் எப்படி இருக்கிறதென்று ஜெர்மன் தேசத்து விஞ்ஞானிகள் கண்டுபிடிக்கப் போகிறார்களாம் ! அதற்காக நம்முடைய தேசத்திலிருந்து எலிகள் ஏற்றுமதியாகிப் போகின்றன" என்று பதில் சொல்லிவிட்டு நண்பன் ராமு இடி இடியென்று சிரித்தான்.

நண்பன் கிட்டு "டேய் ராமு! சந்துருவைப் பரிகாசம் செய்யாதே" என்று அவனைப் பார்த்துச் சொல்லிவிட்டு என் பக்கம் திரும்பினன்.

"நமது முனிஸிபாலிடியார் ஜனங்களுக்கு சௌகர்யம் செய்து கொடுக்கவேண்டிய கடமையை அனுசரித்து, இரண்டு வருஷங்களுக்குள் ஊரில் எலிப்பூண்டே இல்லாமல் அடிக்கப் போவதாகக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். எலி வேட்டைக்கென்று 1500

ரூபாய் அலாதியாகக் கட்டிப் போட்டு விட்டார்கள். ஒரு எலி பிடித்தால் காலணு கிடைக்கும். கூண்டு முனிஸிபாலிடியார் கொடுக்கிருர்கள். விஷயம் தெரிந்ததா ?"

நான், "எப்படியாவது போகட்டும் முனிஸிபாலிடி எலிகள். வயிற்றெலியின் கொடுமையைச் சொல்லு! இல்லாவிட்டால் இன்று சாப்பாடு வலுப்பானேன்?... டேய்! தெரியாத்தனமாய் உலவப் புறப்பட்டுவிட்டேன். நடக்கக்கூட முடியவில்லை—வயிற்றுவலி. அதோ கை காட்டி மரம் தெரிகிறதே, அதன் கீழே இருக்கும் பாலத்தில் உட்காருவோம். உட்காருவோமா ?" என்றேன்.

நண்பர்களுக்கு என் மீது இரக்கம் வந்துவிட்டது. எலிப் பேச்சை அப்படியே விட்டுவிட்டு மௌனமாய் நடந்து வந்தார்கள். மாலையின் செம்பொன் கிரணங்கள் கிழக்கு நோக்கிப் பறந்தன. தென்னையின் தலைச் சடைகளிலெல்லாம் தீ. அந்த சிவப்புச் சித்திரத்திற்குப் பகைப்புலம்போல பசும் வயல்களும், மரங்களும், சவுக்கைத் தோப்பும் அமைந்திருந்தன.

அக்காட்சியைக் கண்டு என் மனம் சற்று சாந்தி அடைந்தது. உடலுக்குக் கொஞ்சம் லகுத்வமும் உற்சாகமும் வந்தது. இப்படிச் சற்றுநேரம் ஆனந்தமாய்க் கழிந்திருக்கும். 'டப்' 'டப்' என்று இரண்டொரு நிமிஷங்களுக்கொருமுறை துப்பாக்கிப் பிரயோகம் செய்யும் சத்தம் கேட்டது.

"ராத்திரி விருந்துக்கு மடையான்கள் சுடுகிருர்கள் போலிருக்கிறது" என்று முன்யோசனை யில்லாமல் சொன்ஞன் ராமு.

"போடா மடையா. போலீஸ்காரர்கள் துப்பாக்கி பழகிக் கொள்கிருர்கள். தெரியவில்லையா ? மடையன்களுக்குக்கூட மூளை உண்டு. முதல் வெடிச் சத்தம் கேட்

டதும் எல்லாம் பறந்துவிடாதா?'' என்று மறுத்துப் பேசினுன் கிட்டு. இவ்விதமாய் நண்பர்கள் தர்க்கித்துக் கொண்டிருக்குங்கால் சத்தம் வந்த திக்கிலிருந்து இரண்டு மூன்று குடியானவர்கள் வரப்புகளின் வழியாய் வந்துகொண்டிருந்தனர். அக் குடியானவர்களை நோக்கி ''என்ன அப்பா அங்கே?'' என்றேன். அதே சமயத்தில், காற்றுவாக்கில் வாள்வாள் என்று நாய்களின் குரலோசை தெளிவாகக் கேட்டது. ''அந்த இடத்திலே முனிஸிபாலிடியார் நாய்களைச் சுட்டுத் தள்ராங்க'' என்ருன் ஒரு குடியானவன்.

''சிவ சிவ! எலி ஏற்றுமதியாயிற்று! இப்பொழுது நாய் கொலையா? போதும் போதும்! கிளம்புங்கள் இந்த இடத்தை விட்டு. நாகரிகத்தின் பைத்தியக்காரச் சேஷ்டைகள் முடிவடையும் சுடலைக்கு அருகிலாவது சென்று சற்று மௌனத்தை மணப்போம்'' என்று அலுப்புடன் எழுந்திருந்தேன்.

நண்பர்களும் எழுந்திருந்தனர். மெதுவாய் அரை மைல் சுமார் நடந்து சென்று அல்லிக் குளத்தண்டை தங்கினேம். புல்தரையின் மீது சொஸ்தமாய்ப் படுத்துக்கொண்டேன். 'வெல்வெட்டு மெத்தையின் சுகம் எம்மட்டு!'

எங்களுக்கு எதிர்க்கரையில் சண்பக மரமொன்றிருந்தது. புஷ்பம் பறித்து வருகிறேனென்று ராமு எழுந்திருந்து போய்விட்டான். அவனுடைய உருவம் குளக்கரையின் வலது புறமிருந்த ஒரு கட்டடத்தின் பின் மறைந்துவிட்டது.

இக் கட்டடம் போவோர் வருவோரை யெல்லாம் 'உள்ளே வாருங்கள்' என்று அழைப்பதுபோன்ற நவீனத்துடனும், அழகுடனும் விளங்கிற்று. கண்ணுடிக் கதவுகளும், அடக்கமான பச்சை வர்ண சுண்ணும்புப் பூச்சும் கட்டடம் சமீபத்தில் கட்டப்பட்டதென்பதை எளி

தில் விளக்கிற்று. வெகுநாளாக இந்தத் திக்கில் வராத தால் எப்பொழுது கட்டப்பட்டது என்று தெரியாது. இக் கட்டடத்தைப் பார்க்க வேண்டுமென்ற அவாவும், அங்கே போவானேன் என்ற அகாரணமான பயமும் உண்டாயிற்று. அப்படியே குளக்கரையில் தனிமை யின் இன்பத்தைப் பருகிக்கொண்டிருந்தோம்.

சிறிது நேரம் சென்றது. வானவெளியில் வெள்ளிக் கிண்ணிபோல் சந்திரன் தென்பட்டான். மங்கிய வெள்ளி வலை வீசி உலகை மயக்கினான். 'மயக்கினான்' என்ற பதம்கூடப் பொருந்தாது. அன்றைய தினத்தில் பிறந்த உணர்ச்சியைக் குறிப்பிட எனக்கு வார்த்தை தெரியவில்லை. சந்திரனையும், அதன் சாம்பலொளியால் சுலுக்கிட்டு சூழப்பட்ட அக் குளத்தையும், வெள்ளை அல்லிகளின் பாம்புத் தலையையும், பார்க்கப் பார்க்க ஏதோ பெயரில்லாத் திகிலும் நடுக்கமும் உண்டாயிற்று. ஏதோ பிசாசை ஓட்டுவது போல் சந்துரு சீட்டி அடித் தான்.

நாழியாயிற்று. புஷ்பம் பறிக்கச் சென்ற ராமு திரும்பி வரவில்லை. நான் போய்விடுகிறேனென்று கிட்டுவும் கிளம்பிவிட்டான். நான்பாட்டுக்குப் படுத் திருந்தேன். சந்துரு சீட்டியடிப்பதை விட்டுவிட்டு இரைந்து ராகம் இழுக்க ஆரம்பித்தான். பிறகு அதை யும் நிறுத்திவிட்டு, "நானும் பார்த்து வருகிறேன்" என்று போய்விட்டான்.

என்ன காரணத்தாலோ சந்துரு போனபிறகு வானம் மாறுதலடைந்துவிட்டது. பின்னும் சிறிது நேரத்திற்கெல்லாம் எருமைக் கூட்டம் குளத்தில் இறங்குவதுபோல் கறுப்பு மேகங்கள் வானில் விரைந்து வந்து கூடின. மேகங்கள் சந்திரனைத் திரையிட்டதால் சந்திரனுடைய அழுகை முகம் மாறி சவக்களை பிறந்தது.

மௌனமாய்ச் செல்லும் கிருஸ்துவ சவக் காட்சி என் நினைவுக்கு வந்தது.

ஒன்றும் தோன்றாமல் குளத்தின் அக்கரையைப்பார்த்தேன். காற்று மரங்களுக்கிடையில் கட்டி விழுந்த குழந்தைபோல சிணுங்கிக்கொண்டிருந்தது. தரைமீது, ஜப்பானியர் சாப்பிடும் பாம்பு முதல் வெள்ளையர் சாப்பிடும் மான் வரையிலும், தவளை முதல் பன்றி வரையிலுமுள்ள ஒவ்வொரு ஜந்துக்களின் எலும்புக்கூடுகளும் வரிசை வரிசையாய்ப் போய்க்கொண்டிருந்தன. போதாக்குறைக்கு எட்டிய புதர்களினின்று நரிகளின் ஊளை கிளம்பி, படிப்படியாய் உயர்ந்தும் குறைந்தும் கொண்டிருந்தது. சண்பக மரத்தினின்று இரண்டு ஆந்தைகள் கோரமாக உலகு நடுங்கும்படி 'கராமுரா' எனக் கத்தின. பிறகு ஒரு நிமிஷம் நிசப்தம். எனக்குப் படுத்திருக்க முடியவில்லை. வெளியே இயற்கையின் பயங்கரமான காட்சி! உள்ளத்தில், போன நண்பர்கள் திரும்பி வரவில்லையே என்ற பேரச்சம். வெளிப்பயம், உள்பயம் இரண்டையும் தப்பி ஓடுவதை உத்தேசித்து நானும் அவர்களைத் தேடப் புறப்பட்டேன். கூண்டோடு கைலாசமென்றாலும் தோழமையிருக்கிறதல்லவா என்ற எண்ணம்.

குளத்தின் வலப்புறமாய், கட்டிடந் தாண்டி சண்பக மரத்தடிக்குப் போனேன். ஒருவரையும் காணோம். அங்குமிங்கும் அலைந்து பார்த்தேன். பயனில்லை. கடைசியாக, கட்டடத்தில் வேண்டுமானால் பார்க்கலாமென்று திரும்பிவந்தேன். கட்டடத்திற்குள் நுழைந்தேன். உள் வாசற்படி போகுமளவும் மனித அரவத்தையே காணோம். வாசற்படிக்கு மேல், நெருப்பெழுத்தில் ''விஞ்ஞான மந்திரம்'' என்று எழுதப்பட்டிருந்தது. நிலையைத் தாண்டினேன். முற்றத்தினோரத்தில், ஜலம் நிரம்பிய சிமெண்ட் தொட்டி ஒன்று இருந்தது. அருகில்

கடப்பைக் கல் மேடை. அதன்பேரில் ஒரு பெரிய ஹம்ஸம் (அதை வாத்து என்று வர்ணித்தால் பிசகு) சிறகுகளைக் கோதிக்கொண்டிருந்தது.

யாரோ பணக்காரர் கோடை வசதி போலும் என்று நினைத்துக்கொண்டு கூடத்தை நோக்கிச் சென்றேன். ஏக காலத்தில் அச்சத்தையும், விந்தையையும் உண்டாக்கும் காட்சி எதிரே தஞ்சாவூர் சிவகங்கை தோட்டத்தின் சுவர் போன்ற அகலமும் உறுதியும் கொண்ட சுவர். அதில் இரண்டு பிரம்மாண்டமான ஜன்னல்கள். ஜன்னல்களுக்குக் கண்ணாடிக் கதவுகள் உள்புறத்தில் போடப்பட்டிருந்தன.

ஒரு ஜன்னலண்டை ராமு உட்கார்ந்திருந்தான். அவனுக்குச் சிறிது தூரத்திற்கு அப்பால், நகசிகை பரியந்தம் ராமுவைப் போலவே மற்ெருரு நிழலுருவம் நின்றுகொண்டிருந்தது. அவ்வுருவின் தலையில் வைர எழுத்துக்களால் மனச்சாட்சி என்று எழுதியிருந்தது. அந்த இடத்தில் அறிமுகமில்லாத பின்னும் பல விசித்திரமான உருவங்கள் இருந்தன. ஆனால் எல்லாவற்றிற்கும் விழிகள் பெரியனவாகவும், உலகின் ரகசியங்களை எப்படியாவது கண்டுபிடிக்க வேண்டுமென்ற ஆர்வத்தைத் தோற்றுவிப்பனவாயும் இருந்தன.

"ஏய் ராமு! நல்ல காரியம் செய்தாய்! வீடு போக வேண்டாமா? இங்கே வந்து தமாஷ் பார்த்துக்கொண்டிருக்கிறாயே!" என்றேன்

ராமு பதில் சொல்லவில்லை. சற்று நெருங்கிப் போய்ப் பார்க்கலாமென நகர்ந்தேன். விந்தையிலும் விந்தை! ராமுவினுடைய மேல்மண்டை வெற்றிலைப் பெட்டிபோல் திறந்து வைக்கப்பட்டிருந்தது. ஆனால் ரத்த தாதுவின் கோரமே கண்ணில் படவில்லை. அவனுடைய முகம் கொஞ்சமேனும் உயிரின் களையை இழக்கவில்லை.

பக்கத்தில் நின்றுகொண்டிருந்த உருவங்கள் இரண்டு நிமிஷத்திற்கொருதரம், மூன்று நிமிஷத்திற்கு ஒருதரம் ஏதோ வைர ஊசிபோல், ஜோதிக் கம்பிபோல் சில கருவிகளை ராமுவின் மூளைக்குள் விடுவதும் காதில் விடுவதும் எடுப்பதுமாயிருந்தன. அப்படிச் செய்யும் பொழுதெல்லாம் ஐம்புலன்களிலொன்றுவது, வாதிக்கப் பட்டன. அவற்றை யெல்லாம் அந்த உருவங்கள் ஏதோ நோட் புஸ்தகத்தில் பதிந்துகொண்டன. நிழல் ராமு நிஸ்திரணியாய்ப் பக்கத்தில் நின்றுகொண்டிருந் தான்.

எனக்கு ஆயிரம் தலைகொண்ட திகைப்பு எழுந்தது. 'இதற்குப் பெயரா நரகம்? இங்கா இருக்கிறது?' என்று நினைத்துக்கொண்டே "டேய் ராமு! இது என்னடா காரியம்? உணர்ச்சி இல்லையா உனக்கு?" என்று கூச்ச லிட்டேன். நிழல் ராமு இடது கையால் வாயைப் பொத் திக்கொண்டு வலது கையால் ஹம்ச பட்சியைச் சுட்டிக் காட்டினான். இவ்வளவு திகில்களுக்கிடையிலும் எனக் கொரு ஞாபகம் வந்தது. "இது ராமுவின் கதி! கிட்டு வின் செய்தி என்ன?" என்று மொணமொணத்துக் கொண்டே திரும்பினேன். இரண்டாம் கட்டு முற்றம் தெரிந்தது. அங்கு போய்ச் சேர்ந்தேன். அங்கும் பயங் கரமான வடிவங்கள்! ஒன்றுக்காவது கடுகளவுகூடச் சதை கிடையாது வெறும் எலும்புக் கூடுகள். ஆனால் அவைகளுக்கு உயிர் மட்டும் இருந்தது. அதெப்படி முடியுமென்றால்...எனக்கு மட்டும் எப்படித் தெரியும்? அவைகள் அங்குமிங்கும் நடந்து சென்றபொழுது அவைகளின் எலும்புகள் ஒன்றுக்கொன்று உராய்ந்து பனமட்டைபோல் சத்தம் செய்தன.

அக் கூட்டத்தின் நடுவில் ஒரு பெரிய மேஜையின் பேரில் கிட்டு படுத்துக் கொண்டிருந்தான். அவனது கால் கைகள் ஒருவிதப் பசையால் ஒட்டப்பட்டிருந்தன.

அவனுக்கு நேர் மேலே, பத்தடி உயரத்தில் துத்திநாகத் தகட்டால் செய்த ஏழு மூலைத் தொட்டியின் அடிப்புறத் தில் ஏழு குழாய்கள் இருந்தன. அவைகளினின்று கிட்டு வின் மீது வான வில்லின் வர்ணம் கொண்ட திரவங்கள் சொட்டிக் கொண்டிருந்தன. அந்தத் திராவகங்கள் விழுந்த இடத்தில் தீப்பற்றி எரிந்தாற்போல் இருந்திருக் கும். இல்லாவிட்டால் அவன் முகம் அவ்வளவு யமவேத னைப்படுமா ? இங்கும் அப் பயங்கர வடிவங்கள் ஏதோ நோட்புஸ்தகத்தில் குறித்துக் கொண்டிருந்தன.

"இதென்ன இந்திரஜாலமா ?" என்று கேட்டுக் கொண்டே மேஜை அருகில் சென்றேன். "கிட்டு, நீ என்ன பிணமாகி விட்டாயா ? எழுந்திருடா மூடா ?" என்று கத்தினேன். என் ஹிருதயத்தை ஊடுருவிச் செல்லும் துயர விழிகளோடு கிட்டு பார்ப்பதை பார்த்து, சுற்றியிருந்த உருவங்கள் பல்லிளித்துக் கைகொட் டின. இலையுதிர் காலத்துச் சருகுகள் காற்றில் சுழலும் சத்தம் கேட்டது.

"என்னுடைய மனநிலைமையைப் படம் பிடிக்க வார்த்தை தெரியவில்லை. என் கண்களினின்று ஜலம் வந்து வாயோரத்தில் விழுந்து உப்புக் கரித்தது. எக்கேடு கெட்டுப் போகட்டும் ராமுவும், கிட்டுவும், சந்துருவும். நாம் தப்பினால் போதுமென்று வாசற் பக்கம் ஓட்டம் பிடித்தேன். முதற்கட்டு உள் வாசல் நிலையண்டை வந் ததும் நெஞ்சு 'பக்'கென்று தீப் பிடித்துக் கொண்டது. காரணம், ஹம்ச பக்ஷி விஸ்வரூபம் எடுத்துக்கொண்டு வழிமறைத்திருந்ததுதான்.

என் தலை சுழன்றது. கண்களில் நக்ஷத்திரங்கள் பறந்தன. நெற்றியிலும் முகத்திலும் வியர்வைத் துளி கள். வாயின் கூரையில் நாக்கு ஒட்டிக்கொண்டது. அப்படியே ஐயனார் கோவில் யானை குதிரைகளுக்கிடை யில் நிற்கும் கல்லுருவ வீரனைப் போல் சமைந்து

போனேன். 'வருஷப் பிறப்பும் அதுவுமாய் வீடுபோய்ச் சேர்வேனு? அல்லது என் உயிருக்கே வருஷம் முடிந்து விட்டதா? அப்படியென்ருல் ஒவ்வொரு வருஷமும் வருஷப் பிறப்பன்று எனக்குச் சிரார்த்தம் என்பது வெகு அமங்கலமாயிருக்குமே! செத்துத் தொலைவதிலும் நல்ல நாள் பார்த்துத்தானு உயிரை விடவேண்டும்!' என்ற தினுசில் எண்ணங்கள் ஓடிக்கொண்டிருந்தன:

''அஹிம்ஸா விருதக்காரரே! வேடிக்கை பார்த்தாயிற்ரு?'' என்று என்னைக் கேட்டது ஹம்சம்.

''போதும் போதுமென்ருகி விட்டது. இதோ வீட்டுக்குப் போகிறேன்'' என்று வெகு சாதுர்யமாகப் பதில் சொன்னேன்.

'அண்ணே! இன்னும் பார்க்க வேண்டியது கொஞ்சம் பாக்கி இருக்கிறது. இதைப் சாப்பிடு, தைரியம் வரும். பிறகு வேடிக்கை பார்க்கலாம்'' என்று ஏதோ மருந்தைக் கொடுத்தது.

அதைத் தட்டிச் சொல்ல எனக்குச் சக்தி இல்லை. மருந்தை வாங்கி வாயில் போட்டுக் கொண்டேன். பத்து நிமிஷத்திற்குள் உடலினுள் ஒரு பெரிய நெருப்பு வெள்ளம் பரவியது. மேலே பட்ட காற்று பனிக்கட்டிபோல் உணர்ச்சி தந்தது. கண்களிரண்டும் நெட்டிபோல் மிதந்தன. முற்றத்தின் வழியாய்ப் பார்த்தேன். சவுக்கைக் கட்டையை உளி வைத்து உடைப்பது போன்ற சப்தமொன்று மார்பினுள் கேட்டது. அது மட்டுமா? அச்சப்தம் தொடர்ச்சியாகவும், தாளத்திற்கு ஒருவாறு ஒத்ததாகவும் இருந்தது பிறகு, போகப் போக, முஸ்லீம்களின் கல்யாண வரிசைபோன்ற ஓயாத ஒலி. அதிலும் விசித்திரம், ஒலியின் ஸ்தாயி உயர்ந்துகொண்டே போய் மார்பு வெடித்துவிடும் போன்றவரையைத் தொட்டது தான்.

அட கடவுளே ! இது என்ன கஷ்டம் ! என்னையும் கூடவா ஹம்ஸம் வசப்படுத்திவிட்டதென்று பயந்தேன். திரை தள்ளியதுபோல் ஒலி மறைந்தது. என் உடலும் உயிரும் பிரிந்தன; சிவனும் அவருடைய வாகனம் நந்தியும் அலாதியானார். பக்கத்தில் ஒரு உருவம் நின்றது. பார்த்தேன்—என் நிழலுருவம் !

"மயங்காதே. தெருப்புறம் போவோம் வா" என்றது ஹம்ஸம்.

ஹம்ஸம் முன்னே செல்ல நான் பின்தொடர்ந்தேன். முன்போலவே, வானில் சந்திரனைப் பாடையில் இட்டது போலிருந்தது. எங்கோ ஒரு மரத்தினின்று ஒரு பக்ஷி 'ஐயோ ! ஐயோ !' என்று அலறிக்கொண்டிருந்தது. என்னைச் சுற்றிலும் ஒரே கூட்டம். குஸ்திச் சண்டை பார்க்க வந்திருப்பவர்கள்போல், ஏராளமான எலும்புக் கூடுகள். சீவீர்க்குப் போன்ற அவ்வெலும்புகளின் மீது சந்திரனுடைய மங்கிய ஒளி விழுவதும், அவைகளின் விழிப் பொந்துகள் என்னைப் பார்ப்பதுவும் மிகக் கோர நாடகமா யிருந்தது.

வலது கைப்புறத்தில், பத்தடி தள்ளி, சந்துருவின் தாயார் நின்று கொண்டிருந்தாள். அவளுக்குக் காச ரோகம். பக்கத்தில் பைத்தியக்காரப் பஞ்சு நின்று கொண்டிருந்தான். இருவரும் கைகால் அசைக்கவில்லை. இவர்களுக்கெதிரில், இடது கைப்புறத்தில், ஒரு கன்றுக் குட்டியின் எலும்புக்கூடும், ஒரு நாயினுடைய எலும்புக் கூடும், துப்பாக்கியும் கையுமாய் நின்றன. எனக்கு ஒருதரம் சோகம் போட்டது.

அப்பொழுது "அந்திய காலத்தில் உங்களுக்கேதாவது விருப்பம் இருந்தால் தெரிவிக்கலாம்" என்று ஹம்ஸம் தெரிவித்தது. மரண தண்டனை அடைந்தவர்களைக் கேட்பது போன்ற அந்தக் கேள்வி எனக்குச் சிரிப்பு

மூட்டியது. எலும்புக்கூடுகளெல்லாம் ஒரே மனதாய் ''ஆச்சோ பாங்கா'' ஒருதரம் தட்டவேண்டுமென்று சொன்னது எனக்கு ஏமாற்றத்தை அளித்தது.

மறு நிமிஷத்தில் அவ்வுருவங்கள் "முக்திநெறி அறியா'' என்ற மெட்டில் பாடிக்கொண்டு, கைகொட்டி, குற்றவாளிகளைச் சுற்றிவர ஆரம்பித்தன. பாட்டு என்ன தெரியுமா ?

பல்லவி

**ஐயையோ ! மூடர்களே !**
**மூடர்காள் ! ஐயையோ !...**

அனுபல்லவி

**வாயில்லாப் பிராணிகளை**
**வதைசெய்யும் வெறும் வீணர்களே !**
**தாயில்லாத் தவளைகளைத்**
**தவிக்கச்செய்யும் விஞ்ஞானிகளே !**
**கோயிலுள்ளான் படைப்பித்த**
**பட்சிகளை, விலங்குகளை,**
**படிப்பிற்கும் சுகத்திற்கும்**
**துன்புறுத்தச் சொன்னவ ராரோ ? (ஐயையோ)**

பாடும்பொழுதெல்லாம் என் ஈரல்குலை நடுங்கிற்று. பாட்டும் கூத்தும் முடிந்தன. கன்றுக்குட்டியைப் பார்த்து ஹம்ஸம் கேட்டது: "உனக்குச் சீக்கு வந்து நாரும் தோலுமாய் இருந்தபொழுது, வியாதியின் கொடுமையால் துன்பப்படக் கூடாதென்று கருணையுடன் உன்னைப் புலையர் வசம் ஒப்புவித்து விடுதலையளித்த புண்ணியவதி யார் தெரியுமா ?'' "ஓ ! அதோ நிற்கிறாளே அவள்'' என்று சந்துருவின் தாயாரைக் குறிப்பிட்டது கன்றுக்குட்டி.

"சரி, இப்பொழுது அவளுக்குக் காச ரோகம். இரண்டு மாதமாய் நரக வேதனைப் படுகிறாள் தம்பி !

நீண்டநாள் வியாதியில் தொல்லைப்படுவது கண்டிராவி! அவளுக்குச் சில சாமீப்யம் அனுக்ரஹம் செய்'' என்று உத்திரவிட்டது ஹம்ஸம்.

சந்துருவின் தாயார் ''ஹம்ஸமே! நான் தானுகவே செத்துப் போகிறேன். தங்கம் போன்ற குழந்தைகளை யும் பேரன் பேத்திகளையும் திடீரென்று விட்டுவிட்டுப் போக இஷ்டமில்லை. சீக்கு சகஜம்தானே'' என்று சொல்லி முடிப்பதற்குள் கன்றுக்குட்டி 'டப்'பென்று அவளைச் சுட்டு வீழ்த்தியது.

அடுத்தாற் போல் ஹம்ஸம் நாயின் கூட்டைப் பார்த்து, ''ஏப்ரல் மாதத்தில் உனக்குப் பைத்தியம் பிடித்துவிடப் போகிறதே என்று பயந்து உன்னையும் உன் கோஷ்டியாரையும் சுட்டுக் காப்பாற்றும்படி செய்த பிரபு யார் தெரியுமா?'' என்று கேட்டது.

நாயின் எலும்புக் கூடு பதிலளிக்காமல், மாஜி முனிசிபல் கவுன்சிலரான பைத்தியக்காரப் பஞ்சுவை சுட்டிக் காட்டிற்று. ''பேஷ்! இப்பொழுது அவருக்குப் பைத்தியமே பிடித்து விட்டது. பைத்தியங்களை இப் படி விடக்கூடாதல்லவா?'' என்று ஹம்ஸ பக்ஷி சொல்லிக் கொண்டிருக்கும்போதே பைத்தியக்காரப் பஞ்சுவை நாய்க் கூடு 'டப்'பென்று சுட்டு வீழ்த்தியது

எனக்கொரு அசட்டுத் தைரியம் பிறந்தது. எனக் கென்றல என் நிழலுருவத்திற்கு! கம்பீரமாய் நழுவ எத்தனித்தேன். ஹம்ஸம் என் ஸ்தூல தேகத்தைப் பார்த்து, ''நீதான் பாக்கி'' என்று சொல்லி, கண் சிமிட் டிற்று. உடல் மூர்ச்சை அடைந்தது. என் நிழலுரு வுக்குப் பிரமாத கோபம் வந்துவிட்டது. ''பிராணி களுக்கு என்னால் யாதொரு கெடுதியும் எப்பொழுதும் செய்யப்பட்டதில்லையே'' என்றது.

ஹம்ஸம் : நீயாயிருந்தால் என்ன ? உன் இனத்தவரா யிருந்தால் என்ன ? எல்லோரும் வாயில்லா ஜீவன்களுக்கு எமனுகத் தலைப்பட்டிருக்கிறீர்கள்...

நான் : இது தெய்வத்திற்கு அடுக்குமா ? இந்தத் தடவை மன்னித்துவிடு. அஹிம்சையை நிலைநாட்டு கிறேனு இல்லையா பார். இது சத்யம் தயை செய்

ஹம்ஸம் : பேசாதே ! இந்தப் பாட்டு எவ்வளவு தரம் எவ்வளவு பேரிடம் கேட்டிருக்கிறேன் ! கண் பஞ்சடையு முன்னே கடவுளை நினைத்துக்கொள். கர்மாவை வேண்டுமென்ருல் சபித்துப் பார். ஹூம், ஜல்தி ! என்னை யறியாமலேயே, "ஏ உலகமே !' என்று கூவினேன். என் உடலுக்குள் நிழலுருவம் புகுந்துகொண்டு விட்டது. ஹம்ஸத்தைப் பார்த்தேன். அதுவும் மாறியிருந்தது. ஹம்ஸத்தின் உருவம் மாறி அன்புத் தெய்வத்தின் உருவம் நின்றது. எனக்குப் புத்துயிரும் தைரியமும், தெளிவும் பிறந்தன.

சமயத்தில் தடதடவென்று ஒரு ஆட்டின் எலும்புக் கூடு வேகமாய்க் கூட்டத்திற்குள் ஓடி வந்தது. அன்பு தெய்வத்திடம் ஏதோ முறையிட்டது. என்னைப் பார்த்து "நண்பரே ! அன்பு பெருகினுல் வெறும் மண்ணைப் பூம்பொழிலும் பொன் வயலுமாக்கும் காவிரி தேவியின் கரையில் இன்று செய்த யாகத்தில், எனக்கு இதோ மோக்ஷம் கொடுத்திருக்கிருர்கள். விடுதலையடைந்ததும் இங்கே வந்திருக்கிறேன். 'ஏய், மானிடா ! உனக்கு நான் மோக்ஷ வழி காட்டுகிறேன். உனக்கு எது பிடித்தம்—துப்பாக்கியா ? மின்சார நாற்காலியா ? தூக்குமரமா ?' என்று வெகு விமரிசையாய்ப் பேசிற்று.

இக்கேள்விக்குப் பதில் சொல்லும் மனிதன் உண்டா ? என் அருமை மனைவியையும், குழந்தையையும் பெற்ருேர்களையும், சகோதர சகோதரிகளையும் நினைந்து என் உள்ளம் தவித்தது.

"ஒன்று... இரண்டு" என்ற வார்த்தைகள் என் உள்ளத்தை வலுவுடன் வந்திழுந்தன. "மூன்று" என்ற சப்தம் கேட்டதும் துப்பாக்கி 'டப்' என்றது. ' ஐயோ" என்றலறி விழுந்தேன்.

"அப்பா, டேய்! பரீக்ஷைக்குப் படிக்கிற லக்ஷணம் அழகாயிருக்கு!" என்ற பேச்சு செத்தவனைப் பிழைப்பு மூட்டிற்று. கண்விழித்தேன். ஹம்ஸமா, கூட்டமா ஒன்றையும் காணேம். தமையனுடைய கோப விழி மட்டும் தென்பட்டது. ஹரிகேன் விளக்கின் செஞ்சுடர் மலர் போல் விரிந்து நின்றது. ஸைகாலஜிப் புஸ்தகம் விரிந்தபடி கிடந்தது. தலை வைத்துத் தூங்கியதால் மரத்திருந்த விரல்களைப் பிசைந்துகொண்டேன். தெரு முச்சந்திலிருந்து நாய்களின் ஊளை யமனை அழைத்துக் கொண்டிருந்தது.

ஐயையோ! மூடர்களே!
மூடர்காஅள்! ஐயையோ!

என்ற பல்லவி இன்னும் என் உள்ளத்தை விட்டபாடில்லை. என்ன செய்வேன்!

# மெய்யறிவு

ஒரு மாத காலமாக ஊரில் இல்லாமல் இருந்து விட்டுத் திரும்பி வந்த பிறகு, முதல் காரியமாக நண்பனைப் பார்க்கச் சென்றேன். எனக்கும் அவனுக்கும் இருந்த நட்பு ஆழமானது. புது மணமான ஆணும் பெண்ணும் வலுக் கட்டாயமாகப் பிரிந்திருக்க நேர்ந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது. ஆனாலும், எனக்கும் அவனுக்கும் எல்லா விதத்திலும் வித்யாசம் இருந்தது மல்லாமல் விசித்திரமான உயிர்ப் பிணைப்பு ஒன்றும் இருந்தது. 'இது என்ன தெரியுமா? இதுதான் எதிர் மறைகளின் தத்துவ நிறைவு' என்று அவன் விளக்கம் கூறுவது வழக்கம். அது ஓரளவு நியாயமாகத்தான் இருந்தது. அவன் விஞ்ஞானத்தில, குறிப்பாக உயிர் நூலில் ஈடுபாடுள்ளவன். 'இரண்டு செப்புக் கம்பிகள் சேர்ந்தாலும் இரண்டு நாகக் கம்பிகள் சேர்ந்தாலும் மின்சாரம் உண்டாவதில்லை' என்பான்.

அது உண்மையான விளக்கம் என்பதைப் பற்றி எனக்குச் சந்தேகம் இல்லை. இருந்தாலும் இப்பொழுது மனத்தில் இருந்த அவசரத்திற்கு வேறு காரணம் இல்லாமல் இல்லை.

அவன் அதிசயமான வாழ்க்கை நடத்தினான். நானும் அவனும் சேர்ந்தே பட்டம் பெற்றோம். அவன் ஆரம்பத்திலிருந்தே விஞ்ஞானம், கணக்கு இவைகளில் நாட்டமாகவே இருந்தான். எனக்கு நெய்க்குத் தொன்னை ஆதாரமா தொன்னைக்கு நெய் ஆதாரமா என்பன போன்ற கேள்விகள்தாம் ரொம்பப் பிடிக்கும். அதனால்தானோ என்னவோ நான் பி. ஏ. வகுப்பில் மெய்

யறிவுத் துறையில் சேர்ந்துவிட்டேன். அவன் ரசாயனத்தில் பட்டம் பெற்ருன்.

எனக்கும் அவனுக்கும் அநேக வேற்றுமைகள் என்பதற்கு ஒரு வெளிப்படையான ருசு என் உத்யோகம். நான் வேலை செய்யா விட்டால் என் வீட்டில் அடுப்புப் புகைவதென்பது முடியாது. விறகில் புகை இருக்கிறதென்கிருர்களே, அது முழுத் தவறு. பணத்தில்தான் புகை இருக்கிறது. விறகு டெப்போக்காரருக்குப் பணம் கொடுத்தால், விறகில் புகை வரும். தெரிந்ததா? இந்த வம்பு அவனுக்குக் கிடையாது. சம்பாதித்துச் சாப்பிட வேண்டிய தொந்திரவே அவனுக்குக் கிடையாது.

ஆகையினுல் படிப்பு முடிந்ததும் அவன் திடீரென்று டிராயிங் ஸ்கூலில் சேர்ந்தது ஒரு விதத்தில் விநோதமாக இருந்தாலும் அர்த்தமற்றதாகத் தோன்றவில்லை. பணம் இல்லாதவனும் சம்பாதிக்க அலைவது, பணம் இருப்பவனும் சம்பாதிக்கப் போட்டி போட்டுக்கொண்டு அலைவது என்ருல், அதில் புத்திசாலித்தனம் என்ன இருக்கிறது? எனவே, அவன் செய்தது எனக்கு மகிழ்ச்சியையே அளித்தது. மூன்று வருஷம் படித்தான். கடைசி வருஷம் பரீக்ஷைக்குப் போகவேண்டிய நிலையில் ஒருநாள் ஓவியக் கல்லூரித் தலைவரிடம் ஒரு பெரிய ஓவியத்தைச் சுருட்டிக்கொண்டு போய்க் கொடுத்தான்.

அவர் பிரித்துப் பார்த்தார். நாடகமேடை அமைப்புத் தெரிந்தது. அதில் ஒரு படுதா நெளிநெளியாகத் தொங்கிக் கொண்டிருந்தது. மேலே 'நாடகமே உலகம்' என்று பொன் எழுத்தில் தீட்டப்பட்டிருந்தது. மையத்தில் பூமிபோல ஒரு உருண்டை. அதில், பாதி மனித முகம். அந்த முகத்தை ஒரு கை தாங்கியிருப்பது போல வரையப்பட்டிருந்தது. அதற்கடியில் வணக்

கத்தைக் குறிக்கும் கூப்பிய கரங்கள் காட்டப் பெற்றி ருந்தன.

ஓவியத்தைக் கண்ட ஆசிரியர் அயர்ந்துவிட்டார். கூப்பிய கைமாதிரித் தோன்றினுலும் தாமரை முகை போலவும் உருவம் அமைந்திருந்தது. எல்லாவற்றை யும்விட அவருக்கு ஒரு குருட்டெண்ணம் தோன் றிற்று.

'ஏண்டா சகாதேவா ! ஓவியப் பரீக்ஷைக்குப் போகும் உத்தேசம் உண்டோ, இல்லேயோ ?' என்ருர்.

'நீங்கள் நினைப்பது சரிதான், சார். எனக்கு அந்த யோசனை இல்லே.'

''ஏன் ?'

'கலே, விஞ்ஞானம், அறிவு எதையும் பிழைப்புக்குச் சாதனமாக்கக்கூடாதென்று எனக்கு உறுத்திக்கொண் டிருக்கிறது. பிழைப்பு நடத்தத்தான் பட்டம் வேண் டுமே ஒழிய, பக்குவம் பெறுவதற்கு எதற்காக ? என்ற நினைப்பு...வணக்கம்' என்று சொல்லிவிட்டு வந்த நண் பன், வீட்டில் இருந்து கொண்டு ஓயாமல் ஏதேதோ ஓவி யம் தீட்டிக்கொண்டிருந்தான். காரியாலயத்திற்குப் போகும் நேரம் தவிர நான் அவனுடன்தான் இருப்பேன், ஒன்று ஓவிய அறை அல்லது தோட்டம். அந்தப் படங் களின் வர்ணக் கலவையும், ஒளி நிழல் கலவையும், எல் லாவற்றிற்கும் மேலாகக் கருத்தழகும் என்னேக் கவர்ந்து வந்தன. 'அவனுக்கு மூன்ருவது கண் உண்டா, என்ன ?' என்றுகூட எனக்குப் பல சமயம் தோன்றியிருக்கிறது. இப்படியே அவன் வளர்ந்து கொண்டு வந்தான்.

சென்ற மாதம் அவன் தொடங்கிய ஓவியத்தைக் கண்டதும் எனக்கு ஜீவ நினேவே அழிந்துவிட்டது. ஓவியம் வளர்ந்து கொண்டிருந்த பொழுது பார்த்ததை

விட முடிந்த பிறகு பார்த்த பொழுது எனக்கு ஆச்சர்யம் பொங்கி வழிந்தது. மேதை என்ருல் இவன் தான் !

ஓவியத்திற்கு 'இயற்கை' என்று மகுடமிட்டிருந்தான். காளியைப் போன்ற அம்பாள் படமொன்றைத் தீட்டியிருந்தான். ஆனல், அவளுடைய ஆயிரம் கைகளும் ஆயிரம் திசைகளைக் காட்டுவதுபோன்ற பிரமையை எழுப்பியிருந்தான். ஒன்றிலும் ஒருவித ஆயுதமும் கிடையாது. வாய் ரத்தக் கறை படிந்த தோற்றத்துடன் இருந்தது. கைகளின் நுனியில் வளைந்த நகங்களைப் போன்ற தோற்றம் இருந்தது. முதலெடுப்பில், அற்புதம் என்று புத்திக்குப் பட்டதே ஒழிய கருத்து சரியாக பளிச்சென்று விளங்கிவிடவில்லை. ஓவியத்தை ஊன்றிப் பரிசோதித்தேன். சின்ன மீனைப் பெரிய மீன் தின்பது போன்ற குட்டி நிழல்சித்திரம் அம்பாளின் ஒருபுறத்தில் தெரிந்தது. மற்ரொரு இடத்தில் வரிசையாகப் பாதையில் கிடந்த எலும்புக் கூடுகளை மிதித்துக் கொண்டு மனிதவர்க்கம் எதையோ நோக்கிப் போவதைப் போன்று மற்ரொரு உள்சித்திரம் தெரிந்தது. மீன், ஆமை, காட்டுப்பன்றி, யாளி, குள்ளன், கோடாலிக்காரன், வில்லாளி, குழலூதும் இடையன், தாமரை, அப்சரஸ் — இன்னும் புரியாத எவ்வளவோ உள்சித்திரங்கள் இருந்தன. இவ்வளவு உள் சித்திரங்கள் அடங்கியிருந்த போதிலும் பார்வைக்கு ஓவியத்தில் ஒரு அமைதி இருந்தது. அம்பாள்தான் தெரிந்தாள். இயற்கையின் உருவகச் சித்திரம் !

எனக்கு இவ்வளவு பார்த்த பிறகும் ஒரு திகைப்பும் குழப்பமும்தான் இருந்தன. பிறகு அந்த ஓவியத்தை நாள் தவருமல் பல தினங்கள் பார்த்த பின்னர் காலைக் கருக் கிருட்டு கட்டவிழ்ந்து ஒளி பரவுவது போன்ற தெளிவு கொஞ்சம் கொஞ்சமாகப் பிறந்தது.

அந்த நிலையில்தான் எதிர்பாரதவிதமாக நான் ஒரு மாத லீவ் எடுத்துக்கொண்டு தென் கோடிக்குப் போக நேரிட்டது. போன இடத்தில் என் காரியத்தைக் கவனித்த நேரம் போக, மனம் திண்ணையில் வந்து உட்கார்ந்தது போலக் காற்ருட இருந்தபொழுதெல்லாம் இந்த ஓவியம் முன்னெழுந்தது.

என்ன அற்புதமான கற்பனை! உயிரின் சரித்திரத்தை உட்குறிப்பினுல் எவ்வளவு நுட்பமாகக் காட்டியிருக்கிருன்! இயற்கையைப் பார்த்தால் அமைதியாகத்தான் இருக்கிறது. ஆனுல் ஊன்றி நுட்பமாகச் சோதித்தால், அதனுடைய கொடுமையும் ஈவிரக்கமற்ற நெறியும் தென்படாமல் போகாது. எலியைத் தின்னப் பாம்பு, பாம்பைப் பிடிக்கக் கீரி, கீரியை வளர்க்க மனிதன், மனிதனைப் பிடிக்கக் காலன். மனிதன் மனிதனுவதற்குமுன் எத்தனை கோடி விதமான மாறுதல்களுக்கும் இன்னல்களுக்கும் ஆட்பட்டு, அழிந்தெழுந்து முன்னேறியிருக்கிருன்! அதே மாதிரி உயிரின் எல்லாத் துறைகளிலும்! அப்பப்பா! இந்தக் கொடுமையை எல்லாம் பார்த்துப் பயந்துதானே என்னவோ துறவென்னும் கதவம் திறந்து கொண்டது!

இந்த ஓவியத்தின் மர்மமான கவர்ச்சி என்னைத் தொந்தரவு செய்துகொண்டே இருந்தது. எப்பொழுது லீவ் முடியும் என்று நாளை எண்ணிக் கொண்டிருந்தேன்.

ஆகையால், ஊருக்குத் திரும்பி வந்ததும் முதல் காரியமாக நண்பன் வீட்டுக்குப் போனேன். ஓவியத்தைப் பார்க்கும் ஆவல்! நண்பன் ஓவிய அறையில் சாய்மான நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். அறைக்குள் நுழைந்ததும் என்னை வந்து தழுவிக்கொண்டு 'நீ சொன்னதுதான் சரி' என்ருன். நான் எப்பொழுது என்ன சொன்னேன் என்பது நினைவிலில்லை.

'நான் என்ன சொன்னேன் ?'

'உட்கார், சொல்கிறேன்.'

ஆனால், எனக்கு அப்பொழுது அதற்கு வேண்டிய மனமில்லை. எதிரே படுதாவினால் மூடி வைக்கப்பட்டிருந்த 'இயற்கை'யை நாடியே மனம் ஓடிக்கொண்டிருந்தது. எனவே, உட்காராமல் இரண்டு எட்டு அடி எடுத்து வைத்து, ஓவியத்தை மூடியிருந்த படுதாவைத் தள்ளினேன். என்ன ஆச்சர்யம் ! அந்த ஓவியத்தைக் காணோம். ஒருவேளை வேறெங்காகிலும் இருக்குமோ என்று அறையைச் சுற்றிக் கண்ணோட்டம் விட்டேன். அந்த அளவுள்ள படம் காணவே காணோம். ஆனாலும் வாய் திறக்கவில்லை. கண்முன்னே இருந்த ஓவியத்தைப் பார்த்தேன்.

இந்த ஓவியத்திற்கும் 'இயற்கை' என்றுதான் மகுடமிடப்பட்டிருந்தது. ஒரு கஞ்சாச் செடியும் குழாயும் அற்புதமாக முன்புறம் தீட்டப்பட்டிருந்தன. மேலே வானத்தில் மேகங்கள் ஏறுவதுபோல் ஒருபுறம் காட்டப்பட்டிருந்தது. மற்றொரு பகுதியில் மேலே இருந்து தலைகுப்புற விழுவது போல் சில சித்திரங்கள் இருந்தன. இந்த ஓவியத்தின் வண்ணச் சிறப்பும் கோடுகளின் அழுத்தமும் மென்மையும் என்னைக் கிறுகிறுக்கச் செய்தன. ஆனால், கருத்து மட்டும் பளிச்சென்று தெரியவில்லை. ஊன்றிப் பார்த்தபொழுது, பழைய சித்திரம் கொடுத்த தெளிவு இது கொடுக்குமென்று மனத்தில் தோன்றவில்லை. உண்மையில் காரணம் அதுவல்ல. 'அந்த ஓவியம் என்ன ஆயிற்று ?' என்ற கவலைதான் என்னைக் குழப்பிவிட்டது.

'சகாதேவா ! அது எங்கே ?'

'கிழித்துப் போட்டு விட்டேன் !'

'ஆ !'

'நூறு சுக்கலாகக் கிழித்துப் போட்டு விட்டேன்.'

'ஏன் ? உனக்குப் பயித்தியமா ?'

'இல்லை. தெளிவு பிறந்து விட்டது.

'தெளிவிலே பிறந்ததுதான் கஞ்சாவா ?'

'இதைக் கவனி, தெரியும். இசை நீங்கலாக மற்ற எதிலும் கவிதை உள்பட, கருத்தே உயிர். கருத்தே உடல். அதுவே உண்மை. கருத்துக்கும் உண்மைக் கும் உருவம் கிடையாது. அவை அகண்டம். இருந்தா லும் வண்ணத்திலும் ஓசையிலும் நுழைந்து தலை எடுக் கின்றன. இந்தத் தலையை இந்த உயிர் அசைவைத்தான் தவருன பெயரிட்டழைக்கிருர்கள். ஆகையால், கருத் தில் குற்றமிருந்தால் எடுத்தெறிய வேண்டியதுதானே ? நூறு சுக்கலாகக் கிழித்தெறிந்து விட்டேன்.'

'உனக்குச் சரியாக என்னுல் பேச முடியாது. தெளி வில் பிறந்ததா இந்த ஓவியம் ?'

'இது பேருண்மை.'

'பேருண்மை விளங்க வேண்டாமா ?'

'கண்ணிருந்தும் குருடாக இருந்தால் விளங்காது.'

'பேருண்மை என்று நீ ஏமாற்ற முடியாதா, என்ன ?'

'ஏமாற்றவில்லை. வா, என்கூட !' என்று சொல்லி ஓவியத்தைப் படுதாவிஞல் மூடிவிட்டு வெளியே கிளம்பி ஞன் குயவனே பானையை உடைத்துவிட்டால் யாரிடம் சொல்லி அழுவது என்று நினைத்துக்கொண்டே வருத் தத்துடன் பின் தொடர்ந்தேன்.

ஊர்க்கோடியில் தாமரைக் குளம். அதன் கரையில் இவர்களுக்குச் சொந்தமான ஒரு சின்ன வீடும் கடையும் உண்டு. அதை இவர்கள் வாடகைக்கு விட்டிருந்தார் கள். வாசலில் கஞ்சாக்கடை—லைசென்ஸ் பெற்ற கடை தான். அங்கே போன சகாதேவன் தன் வீட்டுத் திண்

ணையில் உட்கார்ந்தான். 'நீயும் உட்கார்' என்று எனக்குக் கட்டளையிட்டான். நான் மௌனமாக உட்கார்ந் தேன்

'இதோ கடை தெரிகிறதே, இந்தக் கடைக்கு யார் வருகிறுர்கள், போகிறுர்கள், என்ன பேசுகிறுர்கள் என்று கவனி. கூர்மையாகக் கவனி. கண், காது இரண்டும் விழிப்பாக இருக்க வேண்டும்.'

'சரி' என்று கவனிக்க ஆரம்பித்தேன்.

முதலில் யார் யாரோ கடைக்கு வந்தார்கள். ஆனுல், அவர்களில் ஒருவரும் பேசவில்லே. அவர்களேக் கண்ட வுடன் அவர்களுக்குத் தகுந்தபடி மருந்தை எடை போட்டு வாழைப்பட்டையில் கட்டிக் கடைக்காரன் வைத்து விட்டான். அவர்களும் கல்லாப் பெட்டிக்கரு கில் மௌனமாகக் காசை வைத்துவிட்டுச் சாமானே எடுத்துப் போய்க் கொண்டிருந்தார்கள். வாடிக்கைக் காரர்கள் போலிருக்கிறது ! இல்லாவிட்டால் இவ்வளவு மௌனமாக வியாபாரம் எப்படி நடத்த முடியும் ? இன் னும் சிறிது நேரம் கழிந்தது. அப்பொழுதும் இதே கதைதான். என் பொறுமையின் எல்லேக்கு வந்து கொண்டிருந்தேன்.

'பயித்தியத்தில் ஒன்றே அதிகம். அதில் துணே வேறு வேண்டுமா ?'

'பறக்கக்கூடாதென்றுதான் இயற்கை மனிதனுக் குச் சிறகு படைக்கவில்லே. பறக்கிறுயே ! இரு. சாதனே வேண்டும். தலே உடைய வேண்டும் அல்லது சுவர் உடைய வேண்டும். அதற்குப் பொறுமை வேண்டும்... இதோ...'

அவன் பேச்சை நிறுத்திவிட்டான். கடைக்குள்ளே இருவர் நுழைந்து அருகில் இருந்த பெஞ்சியில் உட் காருவதைப் பார்த்தேன்.

ஒருவர் சாமியார், முழங்கால் வரையில் தொடும் வெள்ளை வேஷ்டி கட்டிக்கொண்டிருந்தார். இடது புஜத்திலிருந்து சின்ன ஜோல்னாப் பை தொங்கிக்கொண்டிருந்தது. கன்னம் குழிந்திருந்தது. ஆனால், கண்ணில் மட்டும் இருட்டை வெட்டி வீழ்த்தும் கலங்கரை வெளிச்சத்தைப் போன்ற கூரொளி இருந்தது. அருகில் உட்கார்ந்திருந்தவன் இளைஞன். மைனர் என்பார்களே அதுமாதிரி இருந்தான். குளத்தின் பச்சைத் தவளையும் மோட்டு எலியும் உறவு கொண்டாடுவது போலிருக்கிறதே என்ற எண்ணம் தானாக உண்டாயிற்று.

'பிள்ளை !' என்றார் சாமியார்.

கடைக்காரன் மருந்தை எடை போட்டு வாழை மட்டையில் கட்டி வைத்தான்.

'இது சரி, உருண்டை (பூர்ணாதி லேகியம்) இருக்கில்லே ?'

'இருக்கு, உனக்கென்னாத்துக்கு, சாமியாரே ? பச்சை வாழை மரத்தைக் கொளுத்தர ஆளு. துவரங் குச்சியைத் தேடறியே ?'

'எனக்கல்ல, தம்பிக்கு.'

'தம்பிக்கா ? தம்பி எந்த ஊர் ?'

'பாவட்டாங்குடி.'

'இங்கே எங்கே வந்திருக்காரு ?'

'சும்மா இப்படி வருவாரு.'

'மைனர் கணக்கா இருக்காரு ?'

'அப்படித்தான் வச்சுக்கியேன்.'

'இது எதுக்கு !'

'உனக்குத் தெரியாதா ? பொறவு சொல்றேன். உருண்டையை எடு.'

'நீ நிட்டையைக் கூட்டப் போறே. அவரு இஷ்டத்தைக் கூட்டப் போறரு !' என்று ஒரு வெற்றிலையில் மருந்தைக் கட்டிக் கொடுத்தான் கடைக்காரன்.

சகாதேவன் சாமியாரைக் கூப்பிட்டான்.

'என்ன இங்கே வந்து ?' என்றார் அவர்.

'சும்மா குளத்தங்கரைக்கு வந்தேன். இவருக்கு என்னவோ சந்தேகம், நீ சொல்லு. கஞ்சான்ன என்ன பண்ணுங்கறரு ?'

'பாதரசத்தைக் கட்டணுமின்னு வைத்யருங்க முக்குவாங்க. நாங்களெல்லாம் மனசைக் கட்டணும்! விந்துவைக் கட்டணுமின்னு பார்ப்போம். இது எங்களுக்கு அந்த லயத்தைக் காட்டுது, கூட்டுது.'

'மனசு கட்டுப்பட்டால் ?'

'பிறகு பேரானந்தம் பொங்குமின்னு பெரியவங்க சொல்லியிருக்காங்க.'

'மைனருக்குன்னு வாங்கினியே, அவருக்கு எதுக்குப் பேரானந்தம் ?'

'அவர் நோக்கத்துக்கும் அது இணங்குது, தெரியுதா ? சொத்தைப் படைச்சவன் கும்பிடற சாமியைக் கும்பிட்டுக் கிட்டுத்தான் திருடனும் கிளம்பறன். தெரியுதுங்களா ?...வாரேன்.'

அவர்கள் போய்விட்டார்கள் 'இனிமேல் ஓவியத்தைப் பார்க்கலாம்' என்று கூறிச் சகாதேவன் புறப்பட்டான்.

அவனுடன் ஓவிய அறைக்குத் திரும்பிப் படுதாவைத் தள்ளிவிட்டு மறுபடி படத்தைப் பார்த்தேன். இருள் குலைவது போல் தோன்றிற்று. வானத்தில் ஏறுவதும் நாம்தான். வானத்திலிருந்து விழுவதும் நாம் தான். ஏறுவதும் விழுவதும் நம்மைப் பொறுத்திருக்

கிறது; நம் ஆசையின் போக்கைப் பொறுத்திருக் கிறது. ஏறுகிற மேகங்களையும் விழுகிற ஜீவன்களை யும் கஞ்சாச் செடி பார்த்துக் கொண்டிருக்கிறது அது வெறும் சாட்சி. அதனிடம் கொடுமையும் இல்லை. குண மும் இல்லை. இருப்பதெல்லாம் நம்மிடமே ஒழிய இயற் கையில் - உலகத்தில் - இல்லை என்ற எண்ணங்கள் அலையாடின.

'ஓவியம் இப்பொழுது எப்படி இருக்கிறது?'

'கொடுமையும் இனிமையும் இயற்கையில் இல்லை என்று சித்திரித்திருக்கிறாய்.'

'இது உண்மையாக இருந்தால் பழைய ஓவியம் உண்மையாக இருக்க முடியுமா?'

'முடியாதுதான்' என்றேன்.

நூறு சுக்கலாய்ப் படத்தை ஏன் கிழித்தெறிந்தான் என்பது புலப்பட்டுவிட்டது மெய்யறிவைக் கொளுத் துவதற்காகக் கலையா? பொய்யறிவைப் பரப்புவதற் காகவா?

